# அனாஸக்தி யோகம்

அல்லது

## பற்றின்றி வாழ்தல்

மகாத்மா காந்தி

எழுதியது







T. விஸ்வநாதன் வெளியிட்டது

சென்னை



[ விலை 1-4-0.

# அனுஸக்தி யோகம்

அல்லது

## பற்றின்றி வாழ்தல்

( பகவத்கீதையின் மொழி பெயர்ப்பும், குறிப்புகளும் )

மகாத்மா காந்தி
எழுதியது



தமிழில் மொழி பெயர்த்தவர்
க. சந்தானம்
( ஆசிரியர் : இந்தியன் எக்ஸ் பிரஸ்)



பிரசுரித்தவர் :
T. விஸ்வநாதன்
சென்னை



[ விலை ரூ. 1-4-0

# பொருளடக்கம்

பக்கம்

# முன்னுரை

(1)

ஸ்வாமி ஆனந்தர் போன்ற நண்பர்களின் அன்பிற் கிணங்கி, சத்தியத்தின் போக்கை விளக்கும் வண்ணம், எனது ஆத்ம சரிதத்தை எவ்விதம் எழுத நேர்ந்ததோ, அவ்விதமே கீதையை மொழி பெயர்க்கவும் ஆரம்பித்தேன். 'தாங்கள் கீதையில் காணும் பொருள்களை நாங்கள் சரிவர உணரவேண்டுமானுல், கீதையைப் பூராவாக மொழி பெயர்த்து, வேண்டிய இடங்களில் உசிதமான குறிப்புகளை யும் சேர்த்து, எங்களுக்கு அளிக்கவேண்டும். அங்கும் இங் கும் இருக்கும் சில சுலோகங்களைக்கொண்டு அஹிம்சை முத லிய தத்துவங்களை நிர்ணயிப்பது என்மனதிற்கு நியாயமாகத் தோன்றவில்லை' என்று ஒத்துழையாமைக் காலத்திலேயே ஸ்வாமி ஆநந்தர் கூறியிருந்தார். அவர் வாதத்தை நான் ஒப்புக்கொண்டு அவகாசம் கிடைக்கும் பொழுது அவர் கோரினதைப் பூர்த்தி செய்வதாகப் பதிலளித்திருந்தேன். அதன் பிறகு சிறை புகுந்தேன். அவ்விடம் கீதையை ஆழ்ந்து ஆராய சௌகர்யம் கிடைத்தது. லோகமான்ய திலகரின் கல்விக் களஞ்சியமான கீதாரகஸ்யத்தைப் படித் தேன். முன்னமேயே அவர் மஹாராஷ்டிரம், ஹிந்தி, குஜராத்தி இம் மூன்று பாஷைகளிலும் ஒவ்வோர் பிரதி அன்புடன் அனுப்பி, மற்ற் பாஷைகளில் படிக்காவிட்டாலும் குஜராத்தியிலாவது கீதாரகஸ்யத்தைப் படிக்கவேண்டு

மென்று வற்புறுத்திக் கேட்டிருந்தார். சிறைக்கு வெளியில் அதைப் படிக்க முடியவில்லை. ஆனால் சிறையில் அதை குஜராத்தி மொழிபெயர்ப்பில் படித்தேன். அதைப் படித்த வுடன் கீதையைக்குறித்து மேன்மேலும் படிக்க அவா அதிகரித்தது. அதன் சம்பந்தமான பல நூல்களை ஆராய்ந் தேன்.

1888—9 வருஷங்களில் 'எட்வின் ஆர்னல்ட்' என்னும் ஆங்கிலக் கவியின் மொழிபெயர்ப்பின்மூலம் முதன் முத லாக எனக்குக் கீதையின் பரிச்சயம் உண்டாயிற்று. அதி லிருந்து குஜராத்தி மொழிபெயர்ப்பில் படிக்க வேண்டு மென்ற பேரவா கிளம்பிற்று. என் கையில் அகப்பட்ட மொழிபெயர்ப்புகளை ஒன்று விடாமல் படித்தேன். ஆனால், இந்தப் படிப்பிலிருந்து கீதையை மற்ற ஜனங்களுக்குப் போதிக்கக்கூடிய ஒரு தனி மொழிபெயர்ப்பு செய்யும் உரிமை எனக்கு ஏற்பட்டு விடவில்லை. தவிர, நான் வட மொழியில் அல்ப ஞானமுடையவன். குஜராத்திலும் தேர்ந்தவனல்லன். இங்ஙிலையில், யான் இம்மொழிபெயர்ப் பைக் கூசாமல் ஆரம்பித்ததின் காரணம் என்ன?

கீதையில் நான் காணும் தத்துவங்களை வாழ்க்கையில் நடத்திக்காட்ட, நானும் என்னுடன் வசிக்கும் சில சகாக் களும் முயன்று வருகிறோம். எங்களுக்குக் கீதை ஆத்ம வளர்ச்சியின் அந்திம லக்ஷியங்களைக் காட்டும் நூல். அதை அனுசரித்து நடக்கும் முயற்சிகளில் ஓயாமல் தோல்வி யடைகிறோம். ஆயினும், முயற்சியை ஒரு சிறிதும் தளர விடவில்லை. தோல்வியடையுங் காலத்தும் சில வேளைகளில் வெற்றியின் கிரணங்கள் தோன்றுகின்றன. இச்சிறு கோஷ் டியாரின் விடாமுயற்சியின் லக்ஷ்யமான வாழ்க்கை முறை யானது இம்மொழி பெயர்ப்பில் விளக்கிக் காட்டப்பட்டி ருக்கின்றது.

இதன்னியில் அதிகப் படிப்பில்லாத மாதர், வைசியர், சூத்திரர் முதலானோருக்கு, மூல வடமொழியில் கீதையைக் கற்றறிய அவகாசமும், அவாவும் இல்லாமலிருந்தாலும், கீதையைப்போன்ற வழிகாட்டி இன்றியமையாததால், அவர்கள் பொருட்டு இம்மொழிபெயர்ப்பு செய்யப்படுகின்றது. குஜராத்தி மொழியில் சிறிதே ஆற்றல் பெற்றிருந்த போதிலும், எனது தாய்நாட்டாருக்கு நான் பட்டிருக்கும் கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்ற ஆவல் ஓயாமல் என்னிடம் குடிகொண்டிருக்கிறது. இழிவான நூல்கள் வெள்ளமாகப் பரவும் இந்நாட்களில் ஹிந்து மதத்தின் ஒப்பற்ற நூலின் இந்த சரள மொழிபெயர்ப்பை ஏற்றுக் கொண்டு அதன் மூலம் அவ்வெள்ளத்தைத் தடுக்க குஜராத்தி மகா ஜனங்கள் ஆற்றல் பெற வேண்டுமென்று மிகவும் விரும்புகின்றேன்.

இவ்வாசையினால் மற்ற குஜராத்தி மொழிபெயர்ப்புகளை குறைகூற வேண்டுமென்ற எண்ணம் சிறிதுமில்லை. அவைகள் எல்லாம் தம் தம் முறையில் நன்றாகவே இருக்கின்றன; ஆனால், மொழிபெயர்த்தவர்களின் சொந்த அனுஷ்டானத்தின் பேரில் அவைகள் எழுதப்பட்டனவென்று நான் நினைக்கவில்லை. இந்த மொழிபெயர்ப்பிலோ முப்பத்தெட்டு வருஷங்களாக நான் கீதையை அனுசரித்து வாழ முயற்சி செய்ததின் அனுபவம் ஆதாரமாக இருக்கின்றது. ஆகையால் தர்மத்தைக் கடைபிடித்து ஒழுக விரும்பும் ஒவ்வொரு குஜராத்தி சகோதரனும், சகோதரியும் இதைப் படித்து, ஆராய்ந்து இதிலிருந்து ஆற்றல் பெறவேண்டு மென்று அதிக அவாக் கொண்டிருக்கிறேன்.

இந்த மொழி பெயர்ப்பில் எனது சகாக்களும் என்னுடன் சேர்ந்து உழைத்திருக்கிறார்கள். எனக்கு வடமொழிப்

பயிற்சி சொல்பமானதால், பதங்களின் அர்த்தங்களை நிர்ண யிக்க எனது சொந்த சாமர்த்தியத்தில் அதிக நம்பிக்கை வைக்க முடியவில்லை. இவ்விஷயத்தில் மட்டும் இம்மொழி பெயர்ப்பு ஸ்ரீ விநோபா, காகா கலேல்கர், மகாதேவ் தேசாய், கிசோரலால் மஷ்ருவாலா முதலியவர்களால் சோதிக்கப்பட்டிருக்கிறது.

(2)

இப்பொழுது கீதையின் கருத்தைப்பற்றி ஆராய் வோம்.

கீதையை முதன்முதலாக 1888—9 வருஷத்தில் நான் படித்தபொழுதே அது ஒரு சரித்திர நூல் அல்லவென்றும், ஒரு லௌகீக யுத்தத்தை வியாஜமாகக் கொண்டு ஒவ்வொரு மனிதனுடைய உள்ளத்திலும் இடைவிடாமல் நடக்கும் அறப்போர் அதில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றதென்றும் எனக்குப் புலப்பட்டது. இவ்வறப்போரை நன்கு மனதில் பதிக்கும் வண்ணம் போர் வீரரைக் கொண்ட யுத்தம் கற் பித்துக் கதை கட்டப்பட்டிருக்கிறது. மேலாக எழுந்த இவ் வெண்ணம் தர்மத்தைப்பற்றியும், கீதையைப்பற்றியும் ஆழ்ந்து ஆராய்ந்தபொழுது வலுத்தது. மகாபாரதத்தைப் படித்த பிறகு அது நன்ருக உறுதிப்பட்டு விட்டது. இக் காலத்திய தேச சரித்திரங்களைப் போல் மகாபாரதமும் ஒரு சரித்திரமென்று நான் ஒப்புக்கொள்ளவில்லை. இதற்குப் போதிய பிரமாணம் ஆதிபர்வத்திலேயே காணலாம். மகா பாரதத்தின் நாயக நாயகிகளின் அமானுஷப் பிறப்பை வர்ணிப்பதிலிருந்தே வியாசபகவான் தனது மகாபாரதம் இவ்வுலகத்திய அரசர், குடிகளுடைய சரித்திரமென்ற எண் ணம் வரக்கூடாமல் செய்திருக்கிருர். ஒருவேளை இந்த

நாயக நாயகிகள் சரித்திர புருஷ ஸ்திரீகளை ஆதாரமாகக் கொண்டு கற்பிக்கப்பட்டிருக்கலாம். ஆனால், மகாபாரதத்தில் அவர்களுடைய சரித்திரத்தை வியாசர் எழுதவில்லை. தர்மத்தை உத்தேசிக்கவே அவர்களை உபயோகித்திருக்கிறார்.

மகாபாரதத்தின்மூலம் வியாசர் ஆயுதம்தாங்கிப் போர் புரிவதன் அவசியத்தை நிரூபிக்கவில்லை. ஜெயித்தவர்களை அழவைத்தார். அவர்களைப் பச்சாத்தாபப்படும்படி செய்வித்தார். யுத்தத்தின் முடிவில் துக்கத்தைத் தவிர வேறோர் பலனும் மிஞ்சவில்லை.

இந்தப் பெரிய நூலில், கீதை சூடாமணியாக விளங்குகின்றது. அதனுடைய இரண்டாவது அத்தியாயத்தில் போர் விவகாரங்கள் மறைந்துபோயின. அவைகளுக்குப் பதிலாக ஸ்திதப்பிரக்ஞ (நிறைமதியுடையோன்) னுடைய லக்ஷணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஸ்திதப்பிரக்ஞனுக்கு லௌகிகப் போருடன் யாதொரு சம்பந்தமும் இருக்க முடியாதென்று அவனுடைய குணங்களிலிருந்தே நன்கு விளங்குகின்றது. சாதாரணக் குடும்பச் சண்டைகளின் நியாய அநியாயங்களை நிர்ணயிக்க கீதையைப் போன்ற அபூர்வ நூல் இயற்றப்படுவதில்லை.

கீதா நாயகனான கிருஷ்ணபகவான், சம்பூரண ஞானத்தின் உருவாவான். ஆனால். அவன் கற்பனை நாயகன். சரித்திர புருஷனல்லன். கிருஷ்ணன் என்று பெயர் பூண்ட அவதார புருஷர் இருந்திருக்கலாம் என்பதை கீதை மறுக்கவில்லை. ஆனால், அதில் கண்ட பூர்ண ஞானியான கிருஷ்ணன் கற்பனா புருஷனே. அவன் சம்பூர்ண அவதார புருஷன் என்ற கொள்கை பிற்காலத்தில் கிளம்பியது.

நம்மைப்போல் உடல் தாங்கியிருந்தும், விசேஷ குண முள்ள மனிதர்களை அவதாரபுருஷர் என்று கூறுகிறோம். எல்லா ஜீவனும் ஈசனுடைய அவதாரமே. ஆயினும், உலக விவகாரத்தில் நாம் எல்லோரையும் அவதார புருஷர்கள் என்று அழைப்பதில்லை. தனது காலத்தில் மற்றோரைக் காட்டிலும் அறநெறியில் சிறந்து விளங்குவோனைப் பிற் காலத்து ஜனங்கள் அவதார புருஷனாகக்கொண்டு பூஜை செய்கின்றனர். இதில் யாதொரு குற்றமும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இப்படிச் செய்வதால் ஈசுவர னுடைய மகிமை சற்றும் குன்றாது. சத்தியத்திற்கு எவ்விதக் கேடும் விளையாது. "ஆதிமனிதனான ஆதம் கடவுள் அல்ல. ஆனால், கடவுளுடைய தன்மையிலிருந்து ஆதம் முற்றிலும் வேறு பட்டவனுமல்ல" என்ற வசனம் உண்மை. தனது யுகத்தில் பிறரைவிட அறத்தில் ஓங்கி நிற்பவன் விசேஷ அவதார புருஷன். இத்தன்மையான கிருஷ்ண பகவான் சம்பூர்ணாவதாரமாகக் கருதப்பட்டு, ஹிந்து மதத்தில் ஏக சக்கிராதிபத்தியம் அடைந்திருக்கிறான்.

இப்போக்கு மனிதன் விரும்பும் அந்திய நற்கதிக்கு அறிகுறி. அவனுடைய மனம் ஈசுவர ஸ்வரூபத்தை அடை யாமல் சமாதானப் படுவதில்லை. அதுவரையில் அவன்சாந்த நிலையும்பெறான். கடவுள் தன்மையை அடைவதற்காகச் செய் யும் முயற்சியே உண்மையான ஒப்பற்ற புருஷார்த்தம். இதுவே ஆத்ம தர்சனம்; அல்லது ஆத்ம நிலை எய்தல். எல்லா அறநூல்களின் நோக்கமும் இவ்வாத்ம நிலை எய்தலே; கீதையின் நோக்கமும் அதுவே. ஆனால் இந்த சாதாரண தத்துவத்தைப் போதிப்பதற்காக கீதையின் ஆசிரியர் அதை எழுதவில்லை. மேன்மை விரும்புவோர் தமது ஆத்ம நிலையை எய்துவதற்குச் சாதகமான ஓர் ஒப்பற்ற வழியை உபதேசிப்

பது கீதையின் முக்கிய உத்தேசம். மற்ற இந்துமதப் புஸ்தகங்களில் இங்குமங்கும் ஒவ்வொரு அம்சத்தில் காணப்படும் பொருளை கீதை பல விதமாகவும், பல சொற்களாலும், பல முறை கூறி நன்கு ஸ்தாபித்திருக்கின்றது.

இந்த ஒப்பற்ற உபாயம் கர்மத்தின் பலத்தைத் துறத்தலாம்.

இதை நடு நாயகமாகக்கொண்டு கீதையின் மற்ற மணிகள் நான்கு பக்கமும் அமைக்கப்பட்டிருக்கின்றன. சந்திரனைச் சுற்றிலுமுள்ள நக்ஷத்திரங்களைப்போல் இதைச் சுற்றிலும் பக்தி, ஞானம் முதலிய தத்துவங்கள் பிரகாசிக்கின்றன. தேகம் இருக்கும்பொழுது கர்மம் விலகாது. கர்மத்திலிருந்து விடுபட்டவன் எவனுமில்லை. ஆயினும், சரீரத்தை ஈசன் குடியிருக்கக்கூடிய கோயிலாகச்செய்து; அதன் வாயிலாக மோக்ஷம் அடையவேண்டுமென்று எல்லா சன்மார்க்கங்களும் உபதேசிக்கின்றன. ஆனல், கர்மமார்க்கத்தில் சிறிது தோஷமேனும் இருந்தே தீரும். மோக்ஷநிலையோ மாசற்றது. ஆகவே, நாம் பந்தத்திலிருந்து, அதாவது கர்மத்தின் தோஷத்திலிருந்து விடுதலை அடைவது எங்ஙனம்? இக்கேள்விக்கு கீதை ஐயமற்ற சொற்களால் கூறும் பதிலாவது—' ஆசையை ஒழித்துப் பணி செய்வதால், யக்ஞத்தின் பொருட்டே கர்மம்புரிவதால், கர்மத்தின் பலத்தைத் துறத்தலால், சகல காரியங்களையும் கிருஷ்ணனுடைய திருவடிகளில் சமர்ப்பிப்பதால், அதாவது மனம், வாக்கு, காயம் மூன்றையும் ஈசுவரனிடத்தில் ஹோமம் செய்வதால்' ஆத்மநிலை எய்தலாம்' என்பதே.

ஆனல், பற்றின்மையும், கர்மபலத்தைத் துறத்தலும், வேண்டுமென்று வாக்கால் உரைப்பதால்கிட்டிவிடமாட்டா.

கேவலம் புத்தியின் பிரயோகத்தால் அவை அடையக்கூடிய வையல்ல. உள்ளத்தைக் கடைந்து பெறவேண்டியவை. இந்த தியாகசக்தி பெறுவதற்கு ஞானம் வேண்டும். பண்டிதர்கள் ஒருவித ஞானத்தை அடைந்திருப்பது உண்மை; வேதம் முதலிய நூல்களை ஆதியோடந்தமாகச் சொல்ல ஆற்றல் பெற்றிருக்கிறார்கள். ஆனால், அவர்களில் பெரும்பாலோர் சிற்றின்பத்தில் மூழ்கியிருக்கின்றனர். ஆகையால் ஞானத்தின் வளர்ச்சி, வீண் பாண்டித்தியமாக முடியக் கூடாதென்ற கருத்துடன், கீதாசாரியர் ஞானத்துடன் பக்தியைப் பிணைத்து அதற்கு முதல் ஸ்தானத்தைக் கொடுத்திருக்கிறார். பக்தியில்லாத ஞானம் தீங்கும் விளைவிக்கும். இக்காரணத்தால் 'பக்திசெய், அப்பொழுது ஞானம் எளிதில் கைகூடும்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் பக்தியோ 'தலையை வைத்தாடும் பந்தயம்' ஆகையால் கீதாசிரியர் பக்தனுடைய லக்ஷணங்களைக் கூறும்பொழுது ஸ்திதபிரக்ஞனுடைய குணங்களையே வர்ணித்திருக்கிறார். இதன் கருத்து, கீதையில் சொல்லப்பட்ட பக்தி, வெளி ஆடம்பரமல்ல; மூட நம்பிக்கையுமல்ல; அதற்கும் வெளிச் சேஷ்டைகளுக்கும், காரியங்களுக்கும் உள்ள சம்பந்தம் மிகக்குறைவு. பக்தன் ஜபமாலை, திலகம் முதலிய சின்னங்களை வேண்டுமானால் உபயோகிக்கட்டும். ஆனால், அவை பக்திக்கு அறிகுறிகள் அல்ல. எவன் மற்றெவரிடத்தும் துவேஷம் கொள்ளமாட்டானோ, எவன் கருணைக் களஞ்சியமோ, தனது என்ற எண்ணத்தை எவன் இழந்தானோ, அகங்காரத்தை விட்டவன் எவனோ, எவனுக்கு சுகதுக்கமும், சீதோஷ்ணமும் சமமாக இருக்கின்றனவோ, பொறுமை வாய்ந்தவன் எவனோ, எவன் எக்காலமும் கவலையற்று சந்தோஷத்துடன் இருக்கின்றானோ, எவனுடைய முடிவான தீர்மானம் சஞ்சலமில்லாமல் எப்பொழுதும் ஸ்திரமாக இருக்கிறதோ, எவன் தனது மனத்

தையும், மதியையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்துவிட்டானோ, எவனைக் கண்டு ஜனங்கள் ஆத்திரமடையார்களோ, எவரிடத்திலும் அஞ்சா நெஞ்சம் படைத்தவனெவனோ, எவன் களிப்பு, துக்கம், பயம் இவைகளிலிருந்து விடுபட்டிருக்கின்றானோ, தூயோன் எவனோ, தன் பணி செய்வதில் ஆற்றல் பெற்றிருந்தும் எவன் நடுநிலைமைபெற்றிருக்கிறானோ, சுபம் அசுபம் இரண்டையும் துறந்தவன் எவனோ, எவன் தனது சத்ருக்களையும், மித்திரர்களையும் சமமாகப்பாவிக்கின்றானோ, எவன் பெருமையையும் சிறுமையையும் பொருட்படுத்துவதில்லையோ, புகழால் பூரிக்காது இகழால் வருந்தாதவன் எவனோ, எவனுக்கு மௌனத்தில் விருப்பமோ; ஏகாந்தமாக இருப்பதில் எவனுக்கு இஷ்டமோ, எவன் ஸ்திர புத்தியுள்ளவனோ அவனே பக்தன். இத்தன்மையான பக்தி பற்றற்றவனிடத்தல்லாது, இதரர்களிடம் இருப்பது சாத்தியமில்லை.

இவ்விதம் ஞானம் பெறுவதும், பக்தனாவதும் ஆத்மநிலை எய்துவதே. ஆத்ம தர்சனம் இவ்விரண்டிலும் மாறுபட்ட தனிப்பொருளல்ல. ஒரு ரூபாய் கொடுத்து விஷமும் வாங்கலாம், அமுதமும் வாங்கலாம். அம்மாதிரி ஞானத்தாலும் பக்தியாலும் பந்தனம், மோக்ஷம் ஆகிய இரண்டு நிலையும் அடைய முடியாது. இவ்விஷயத்தில் லக்ஷ்யமும், அதை அடையும் சாதனமும் மூற்றிலும் ஒரே பொருளாகாவிட்டாலும் அநேகமாக ஒன்றே. சாதனத்தின் கடைசி, எல்லையே மோக்ஷம் கீதையில் மோக்ஷம் என்ற பதத்தின் பொருள் ஆத்மாவின் பரம சாந்தநிலை.

இனி இவ்வித ஞானத்தையும், பக்தியையும் கர்மத்தின் பலத்தைத் துறத்தலென்னும் உரைகல்லில் பரீக்ஷை செய்யும்

விதம் கூறவேண்டும். சாதாரண ஜனங்கள் வெறும் பண்டிதனைக்கூட ஞானியாகக் கருதுகின்றனர். அப்பண்டிதனுக்கு சிறிய வேலை செய்யவும் கையாலாவதில்லை. ஒரு லோடாவைக் கையிலெடுப்பதுகூட கர்மபந்தனம் என்று நினைக்கிறான். எவ்வித யக்ஞகர்மங்களும் செய்யாதவன் ஞானியாகக் கொள்ளப்பட்டால், அவனிடத்தில் லோடாவை எடுப்பதைப்போன்ற அல்ப லௌகீகக் காரியங்களுக்கு இடமேது?

பொதுஜன அபிப்பிராயப்படி (துளசி அல்லது ருத்திராக்ஷ) மாலையைக் கையில் வைத்து ஜபம் செய்வதைப் போன்ற வெளி ஆசாரமுள்ளவனே பக்தனாகிறான். அவன் மற்றவர்களுக்குச் சேவைசெய்யும்பொழுதும் மாலையை ஆட்டிக்கொண்டேயிருக்கிறான். அன்னபானத்திலும், இதர போகங்களிலும் ஈடுபட்ட காலத்தில் மட்டுமே மாலையைக் கீழே வைக்கிறான். மாவரைக்கவும், நோயாளிக்கு சேவை செய்யவும்வேண்டி அவன் மாலையை ஒருநாளும்விடுவதில்லை.

இவ்விரண்டு வகுப்பாருக்கும் கீதை கண்டிப்பாய் ஐயமறச் சொல்லுவதாவது:— "கர்மம் செய்யாமல் எவனும் நற்கதி யடைந்ததில்லை. ஜனகர் முதலோர் கர்மத்தின் வழியாகவே ஞானத்தை அடைந்தார்கள். நானும் எனது வேலையை அலக்ஷியஞ்செய்து நிறுத்தி விட்டால் இவ்வுலகம் நாசமடையும்." மற்றவர்களுடைய கடமையைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமா? ஆயினும், ஒரு பக்கத்தில் தனிக் கர்மமும் பந்தனம் ஆகும் என்பதில் வாதத்திற்கிடமில்லை. மற்றொரு பக்கத்திலிருந்து பார்த்தாலோ தேகத்தை யுடையவனெவனும் இஷ்டப்பட்டோ, இஷ்டமில்லாமலோ கர்மம் செய்தவண்ணமாக இருக்கிறான். சரீரத்தாலும், மனத்தாலும்

செய்யும் காரியங்களனைத்தும் கர்மமே. அப்படியானல், கர்மத்தில் ஈடுபட்டிருக்கும் மனிதன் அதன் பந்தத்திலிருந்து விடுதலை யடைவது எப்படி? எனக்குத் தெரிந்தவரையில், இப்புதுக் கேள்விக்கு கீதையைப்போல் மற்றெந்த அற நூலும் பொருந்திய பதில் உரைக்கவில்லை. ' பலனில் பற்றை விலக்கி கர்மம் செய்,' 'ஆசையை விட்டு விட்டு உன் கடமையைத் தீர்,' 'காமமின்றி காரியத்தில் ஈடுபடு' என்று கீதை உபதேசிக்கிறது. கீதையின் இந்த கம்பீர கர்ஜனையை எவனும் அலக்ஷியம் செய்யமுடியாது. கர்மத்தைத் துறந்தவன் அதோகதி யடைகிருன். கர்மத்தைச் செய்து கொண்டு அதன் பலனைத் துறப்பவன் நற்கதி பெறுகிருன்.

கர்மபலனைத் துறக்கவேண்டும் என்ருல் துறந்தவனுக்குப் பலன் கிடைக்காதென்று பொருள் கொள்ளலாகாது. கீதையிலிருந்து இவ்வித அர்த்தம் செய்வதற்குச் சிறிதும் இடமில்லை. பலனிடத்துப் பற்றில்லாமலிருப்பதே பலத்தியாக மென்பதற்குப் பொருள் உண்மையில், பலனில் பற்றை ஒழித்தவனுக்கு ஆயிரம் மடங்கு பலன் கைகூடும். கீதையின் உபதேசப்படி பலனைத் தியாகம் செய்வதற்கு தர்மத்தில் அளவற்ற நம்பிக்கை வேண்டும். தனது கர்மத்தின் முடிவை ஓயாமல் சிந்திக்கும் மனிதன், பல தடவை தன் கடமையைச் செய்யாதொழிகிருன். அவன் தனது தைரியத்தை இழக்கிருன்; அதனல் கோபத்தின் வசப்படுகிருன்; பிறகுசெய்ய வேண்டிய கர்மங்களில் ஈடுபடாமல், ஒரு காரியத்திலிருந்து இன்னென்று, அதிலிருந்து மற்ருென்று இப்படி சஞ்சலப்பட்டு மாறிக்கொண்டே யிருக்கிருன். காரியங்களின் பரிணமத்தில் கவலைகொண்டவன் கதி, சிற்றின்பத்தில் ஆழ்ந்தவனுடைய கதியைப்போலாகிறது. கடைசியில் சிற்றின்பப்

பிரியனைப்போலவே அவனும் நன்மை, தீமை, நியாயம், அநியாயம் இவைகளின் பகுத்தறிவு இழந்து தன் காரியத்தைச் சாதிப்பதற்கு மனம் போனவாறு எந்த முறையையும் கையாளுவதுடன், அதை தர்மமென்றும் எண்ணுகிறான்.

பலனில் ஆசை வைப்பதனாலுண்டாகும் இக்கேடுகளை ஆராய்ந்தே கீதாசிரியர் பற்றின்மை அல்லது பலத்தியாகம் என்ற ஸித்தாந்தத்தை நிர்ணயித்து, மனதைக் கவரத்தக்க இனிய சொற்களில் அதை உலகுக்கு அளித்திருக்கிறார். சாதாரணமாக அறமும் பொருளும் விரோதமானவைகளாகக் கருதப்படுகின்றன. 'வியாபாரம் முதலிய உலக விவகாரங்களில் தர்மத்தை அனுசரிப்பது சாத்தியமில்லை. அவைகளில் தர்மத்திற்கு இடமில்லை தர்ம விஷயங்களில் தர்மமும், பொருள் விஷயங்களில் பொருளுமே பிரகாசிக்கும்' என்று சொல்வது வழக்கம். இந்தத் தப்பெண்ணத்தை கீதாசிரியர் போக்கடித்துவிட்டார் என்பது எனது அபிப்பிராயம். மோக்ஷத்திற்கும் லௌகீகவிவகாரத்திற்கும் நடுவில் இவ்வித பேதம் ஒன்றும் அவ்ரால் அங்கீகரிக்கப்படவில்லை. அதற்கு மாறாக தர்மத்தை உலக நடவடிக்கையில் புகுத்தியிருக்கிறார். எந்த அறநெறி, விவகாரங்களில் பயன்படுகிறதில்லையோ, அது உண்மையில் அறமல்ல. இந்ததத்துவம் கீதையில் இருப்பதாக நான்எண்ணுகிறேன். ஆகையால்,எக்காரியங்கள்பலத்தில் ஆசையின்றி செய்யக்கூடாததாக விருக்கின்றனவோ, அவையனைத்தையும் விட்டுவிட வேண்டும். இந்த அரியநியமம் மனிதனைப் பலதர்மசங்கடமான காரியங்களிலிருந்து காப்பாற்றும். இக்கொள்கையை அனுசரித்தால், கொலை, பொய், விபசாரம் முதலிய கர்மங்கள் விலக்கத் தகுந்தவைகளென்று தானாகவே ஏற்படுகின்றது. மானிட வாழ்க்கை ஆடம்பரம் ஒழிந்து சரளமாகின்றது. சரள வாழ்க்கையிலிருந்து சாந்தி

உண்டாகின்றது. பலனைத் துறக்கவேண்டு மென்பதால் எக்காரியத்திற்கு என்ன பலன் உண்டாகுமென்று நிர்ணயிப்பதில் அலக்ஷியமாக இருப்பதென்று பொருளல்ல. பலத்தின் தன்மையையும், அதை யடையும் சாதனங்களையும் பற்றி ஆலோசித்து அறியவேண்டியது அத்தியாவசியம். இப்படி முடிவு செய்தபின், பலனில் ஆசையின்றி சாதனங்களில் தன் முழு கவனத்தையும் செலுத்துபவனே பலனைத் துறந்தவனாவான்.

இவ்விதமாக ஆலோசித்துக்கொண்டு போவோமாகில், கீதையின் உபதேசத்தைத் தன் நடவடிக்கையில் கொண்டுவர விரும்பும் மனிதனுக்கு சத்தியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடித்து வாழ்தல் இன்றியமையாததென்று எளிதில் ஏற்படுகிறது. பலத்தில் ஆசையில்லாத புருஷனுக்குப், பொய்யுரைப்பதற்கும், ஹிம்சை செய்வதற்கும் விருப்பம் உண்டாகாது. பொய் அல்லது ஹிம்சையின் மூலம் செய்யப்படும் எக்காரியத்தை எடுத்துக்கொண்டாலும், அதனுடைய பரிணாமத்தைப்பற்றிய இச்சையே அதற்குக் காரணமாக இருக்கும். ஆனால், அஹிம்சா தர்மத்தை ஸ்தாபிப்பது கீதையின் நோக்கம் அன்று. கீதையின் காலத்திற்கு முன்பிருந்து, அஹிம்சை பரமதர்மமென்று கருதப்பட்டு வந்திருக்கிறது. பற்றின்றிப் பணி செய்யும் தத்துவத்தை ஸ்தாபிப்பது கீதையின் முக்கிய நோக்கம். இரண்டாவது அத்தியாயத்திலேயே இது உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்குகின்றது.

ஆனால், கீதையில் அஹிம்சை போதிக்கப்பட்டாலும் சரி, பற்றைத் துறத்தலிலிருந்து அஹிம்சை அவசியமென்று ஏற்பட்டாலும் சரி, ஒரு லௌகீகப்போரை உதாரணமாக கீதாசிரியர் ஏன் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்கலாம். கீதையின் சமயத்தில் அஹிம்சை தர்மமென்று கருதப்

பட்டபோதிலும், யுத்தம் மிகவும் சாதாரண சம்பவமான தாகையால், கீதாசாரியர் அதை உதாரணமாக எடுத்துக் கொள்ள மனங்கூசவில்லை. அவ்வித கூச்சமும் இருந்திருக்க முடியாது.

தவிர, பலத்தியாகத்தின் பெருமையை நிர்ணயிக்கும் பொழுது கீதாசிரியர் மனத்தில் என்ன எண்ணம் இருந்த தென்றுவது, அஹிம்சையின் எல்லையை அவர் எவ்வளவு தூரம் நிச்சயித்திருக்கிறார் என்னும் விஷயங்களைப் பற்றியாவது நமக்குச் சிந்திக்க அவசியமில்லை. மகத்தான தத்துவங் களை உலகிற்கு அளிக்கும்பொழுது கவி அத் தத்துவங்களின் முழுப்பெருமையும் உணர்ந்து எல்லா மனிதருக்கும் எல்லா பாஷைகளிலும் அளிக்கிறான் என்பது உண்மையல்ல. கவியிடத்தும், காவியத்திலும் உள்ள மகிமை இதுவே. கவியின் சொற்களின் அர்த்தத்திற்கு எல்லையில்லை. மனிதர்களைப் போலவே மகா வாக்கியங்களின் பொருளுக்கும் வளர்ச்சி உண்டு. பாஷைகளின் சரித்திரத்தை ஆராய்ந்தால் அரிய சொற்களில் பலவற்றின் பொருள் தினந்தோறும் புதிதாக மாறிக்கொண்டு வருவதைக் காண்கின்றோம். கீதையின் அர்த்தத்திலும் இவ்விசித்திரம் உண்டு. கீதாசாரியார் தாமே பல பெருமை வாய்ந்த பதங்களின் அர்த்தங்களை விசாலப் படுத்தியிருக்கின்றார். கீதையை மேலாகப் பார்வையிடும் பொழுதே இவ்விஷயம் நன்கு விளங்குகிறது. கீதையின் காலத்திற்குமுன் சிலவேளை யக்ஞத்தில் மிருகபலி ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கலாம். கீதையில் கூறப்பட்ட யக்ஞத்தில் அதன் நாற்றம் சிறிதுமில்லை. கீதையிலோ எல்லா யக்ஞங்களுக்கும் ஜபயக்ஞமே அரசு. பரோபகாரத்திற்காக நமது சரீரத்தை உபயோகப்படுத்துவதே யக்ஞம் என்ற பதத்தின் முக்கியமான அர்த்தம் என்று மூன்றும் அத்தி

யாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. மூன்றுவது, நான்காவது அத்தியாயங்களைச் சேர்த்துப் பார்க்கின் யக்ஞத்திற்கு மற்றும் பல அர்த்தங்கள் செய்யக்கூடும். மிருகபலி என்ற பொருள் மட்டும் செய்யமுடியாது. சன்னியாசம் அதாவது துறவு என்ற பதத்தின் சம்பந்தமாகவும் இப்படியே நடந் திருக்கின்றது. தன் கர்வத்தை விட்டுவிடுவது துறவு என்று கீதை ஒப்புக்கொள்ளவில்லை. கீதையின் சன்னியாசி பல கர்மங்களைச் செய்துகொண் டிருக்கும்பொழுதே எல்லாவற்றையும் விட்ட துறவியாகிறுன். இவ்விதம் கீதாசிரியர் பெருமை வாய்ந்த பதங்களின் பொருளை விசாலமாகச் செய்யும் சூக்ஷ்மத்தை நமக்குக் கற்பித்திருக்கிறுர். கீதையின் சொற்களிலிருந்து பலத்தில் ஆசையை முழுதும் துறந்தபிறகும் ஒருவன் யுத்தம் செய்யக்கூடும் என்று ஒருக்கால் ஏற்படலாம். ஆனுல், கீதையின் உபதேசத்தை நாற்பது வருஷகாலங்களாக எனது வாழ்க்கையில் அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று செய்த முயற்சிகளின் பலனுக, சத்தியத்தையும் அஹிம்சையையும் பூர்ணமாக அனுசரிக்காதவரையில் கர்மபலத்தியாகம் செய்வது மனிதனுக்கு அசாத்தியமென்று வணக்கத்துடன் தெரிவிக்கிறேன்.

கீதை சூத்திரங்கள் ( குறள் வாக்கியங்கள் ) அடங்கிய நூலன்று; அது ஒரு மகத்தான தர்மகாவியம். அதில் எவ்வளவு நுட்பமான பொருள்கள் காணலாமோ, அப்படியே புதிய அழகான அர்த்தங்களும் செய்துகொள்ளலாம். கீதை பாமர ஜனங்களுக்காக இயற்றப்பட்டது. அதில் ஒரே விஷயம் பலவிதமாக எடுத்துக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால், கீதையிலுள்ள மகாவாக்கியங்களின் அர்த்தம் காலத்திற்குத் தகுந்தவாறு மாறிக்கொண்டேயிருக்கும். அதன் மூலக்கொள்கை ஒருபொழுதும் மாருது. ஆனுல், அந்தக்

கொள்கையை அனுஷ்டிப்பதற்கு விரும்பும் புருஷன் மற்ற அர்த்தங்களைத் தனக்குத் தோன்றியவாறு செய்து கொள்ள லாம். ஒருகாலத்திலோ தேசத்திலோ விதியாக இருப்பது மற்றக் காலத்திலும், தேசத்திலும் விலக்காகலாம். பல னில் பற்று மட்டும் எப்பொழுதும் விலக்கு. பற்றின்மை எக்காலமும் விதி; கீதையில் ஞானத்தின் மகிமை நன்கு காப்பாற்றப் பட்டிருக்கின்றது. ஆயினும், கீதை வெறும் மதியால் அறியக் கூடியதன்று; இருதயத்தால் அறிய வேண்டியது. ஆகையால் அதனிடத்து நம்பிக்கையில்லாத வனுக்கு அது உதவாது. கீதாசிரியர் அடியிற்கண்டவாறு கூறியிருக்கின்றார்.

'எவன் தவமற்றவனோ, எவன் பக்தனில்லையோ, எவன் என்னிடம் வெறுப்புக் கொண்டிருக்கிறானோ, அவனிடம் இதைச் சொல்லாதே.' (18—67)

'ஆனால் இந்த பரம ரகஸ்யமான ஞானத்தை எவன் எனது பக்தர்களுக்கு அளிக்கின்றானோ அவன் என்னிடமுள்ள பூர்ண பக்தியின்மூலம் ஐயமின்றி முக்தியடைவான்.' (18—68)

'துவேஷமின்றி சிரத்தையுடன் இதைக் கேட் பவனும் முக்திபெற்று புண்ணியவான்கள் செல்லும் லோகங்களை அடைவான்.' (18—71)

கௌசானி (இமயமலை.)
24—6—1929.

மோகன் தாஸ் கரம்சந்த் காந்தி.

# 1. அர்ஜுன விஷாத (துக்க) யோகம்



ஞானத்தை விரும்பாதவனுக்கு அது கிடைக்காது. துக்கமின்றி சுகமில்லை. ஞானத்தைத் தேடுவோர் அனைவருக்கும் ஏதாவது ஒரு சமயம் தர்ம சங்கடம் அல்லது உள்ளக் குழப்பம் சம்பவித்தே தீரும்.]

திருதராஷ்டிரர் உரைக்கிறார் :—

*ஸஞ்ஜயா ! தர்மக்ஷேத்திரமாகிய குருக்ஷேத்திரத்தில் போர்புரிய விரும்பக் கூடிய எனது குமாரர்களும் பாண்டு புத்திரர்களும் என்ன செய்தார்கள் என்று எனக்குக் கூறுவாயாக.* (1)

குறிப்பு :—*நமது சரீரமாகிய க்ஷேத்திரம் தர்மக்ஷேத்திரம். ஏனெனில், அதன் வாயிலாகவே மோக்ஷம் அடைய வேண்டும். பாவம் இந்த சரீரமாகிய க்ஷேத்திரத்தின் உற்பத்திக்குக் காரணம். அது பாவத்தையே அனுபவிக்கிறது. ஆகையால், அது குருக்ஷேத்திரமாகும். கௌரவர் என்றால் அசுர குணங்கள் ; பாண்டு புத்திரர்கள் தெய்வீக குணங்கள். ஒவ்வொரு சரீரத்திலும் தூயனவும், தீயனவுமாகிய இருவகைக் குணங்களுக்கும் போர் நடந்துகொண்டே யிருக்கின்றது. இதை யார்தான் அனுபவிக்கவில்லை ?*

ஸஞ்ஜயர் கூறுகிறார் :—

*அத்தருணத்தில் பாண்டவர்களுடைய படை அணி வகுத்து நிற்பதைக்கண்டு துர்யோதன ராஜன் துரோணாசாரியாரிடம் சென்று உரைத்தான்.* (2)

குருவே! தங்கள் மேதாவியான சிஷ்யனும் துருபத புத்திரனுமான, த்ருஷ்டத்யும்னனால் அணி வகுக்கப்பட்ட பாண்டவர்களின் அப்பெரும் படையைப் பாருங்கள். (3)

இங்கே போரில் பீமனுக்கும், அர்ஜுனனுக்கும் சமமானவர்களும், வில்லாளிகளுமான யுயுதானர் (சாத்தியகீ), விராடர், பாரதவீரர், துருபதராஜர். (4)

திருஷ்டகேது, சேகிதானர், சூரவீரரான காசிராஜர், புருஜிதர், குந்திபோஜர், மனிதரில் சிறந்த சைப்யரும், (5)

இவ்விதமே பராக்கிரமமுள்ள யுதாமன்யு; பலவானான உத்தமௌஜர்; சுபத்திரையின் புத்திரர் (அபிமன்யு; திரௌபதியின் குமாரர்; இவர்களனைவரும் மகா ரதர்கள். (6)

பிராம்மணோத்தமரே! இப்பொழுது நம் பக்கமுள்ள போர்த் தலைவர்களையும் அறிந்துகொள்ளுங்கள். தங்கள் படையின் நாயகர்களை தங்களுக்கு நினைவூட்டும் பொருட்டு அவர்களின் பெயர்களை எடுத்துக் கூறுகிறேன். (7)

நீங்கள் ஒன்று; பீஷ்மர்; கர்ணன்; போரில் வெற்றிபெறும் கிருபாசாரியர்; விகர்ணன், சோமதத்தரின் புத்திரர் பூரிசிரவர். (8)

அப்படியே பலவித ஆயுதங்களை யணிந்து என் பொருட்டு போரில் உயிர் துறக்க வந்திருக்கும் மற்றும் பல சூரவீரர்கள்; இவர்களனைவரும் போர்த்தொழிலில் தேர்ந்தவர்கள். (9)

பீஷ்மரால் காக்கப்பட்ட நமது படையின் பலம் பூர்ணமாகவில்லை. பீமனால் ரக்ஷிக்கப்பட்ட படையோ நிறைந்திருக்கிறது. (10)

ஆகையால் நீங்கள் அனைவரும் தங்கள் தங்கள் இடத்திலிருந்து பிதாமகரான பீஷ்மரை எல்லா வழிகளாலும் காப்பாற்றுவீர்களாக. (11)

குறிப்பு :—இவ்விதம் துர்யோதனன் கூறினான்.

உடனே அவனை மகிழச்செய்யும் பொருட்டு கௌரவர்களின் பெரியோரும், பராக்கிரம சாலியுமான பீஷ்மர் சிங்க நாதம் செய்து தம் சங்கை ஊதினார். (12)

பிறகு சங்கங்கள், நகாரக்கள், முரசுகள், மிருதங்கங்கள், பேரிகைகள் ஒரேகாலத்தில் ஒலித்தன. இந்த ஒலி பயங்கரமாக விருந்தது. (13)

இதன் மத்தியில் வெண்குதிரைகள் பூட்டிய மகா ரதத்தில் வீற்றிருந்த ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ஜுனனும் தம் திவ்ய சங்கங்களை ஊதினார்கள். (14)

ஸ்ரீ கிருஷ்ணன் பாஞ்சஜன்யம் என்ற சங்கத்தை ஒலித்தார். தனஞ்ஜயனான அர்ஜுனன் தேவதத்தம் என்ற சங்கை ஊதினார். பயங்கரமான செயல்களைப் புரியும் பீமன் பௌண்ட்ரம் என்ற பெயருள்ள மகா சங்கை வாசித்தார். (15)

குந்தி புத்திரரான யுதிஷ்டிரர் அனந்த விஜயம் என்ற சங்கை ஒலித்தார். நகுலன் ஸுகோஷம் என்ற சங்கத்தையும், சகதேவன் மணிபுஷ்பகம் என்ற சங்கையும் ஊதினார்கள். (16)

மகா வில்லாளியான காசிராஜர்; மகா ரதரான சிகண்டி; திருஷ்டத்யும்னன்; விராடராஜர்; வெல்லக் கூடாத சாத்தியகி; (17)

துருபதராஜர்; துரௌபதியின் புத்திரர்; சுபத்திரையின் குமாரரான அபிமன்யு; இவர்களனைவரும், அரசனே! தங்கள் தங்கள் சங்கங்களை ஒலித்தனர். (18)

பூமியிலும் வானத்திலும் எதிரொளி முழக்கும் அந்த பயங்கரமான சப்தம் கௌரவர்களின் இருதயத்தைப் பிளந்தது. (19)

அரசனே! அநுமானைக் கொடியில் கொண்ட அர்ஜுனன், கௌரவர் சித்தமாக இருப்பதைக் கண்டு போர்புரிய ஆயத்தமாகி, தன் வில்லைக் கையிலேந்தி இருஷிகேசனிடம் இச்சொற்களை உரைத்தான்; 'அச்சுதா! என் தேரை இரு படைகளின் நடுவில் கொண்டுபோய் நிறுத்து. (20,21)

போரில் குதூகலங்கொண்டு முன்வந்து நிற்போர்களைக்கண்டு இப்போரில் எவருடன் யுத்தம் செய்ய வேண்டுமென்று அறிவேன். (22)

துர்மதியான துர்யோதனனுக்குப் போரில் உதவி புரிய விரும்பித் திரண்டுவந்துள்ளோரை நான் காண வேண்டும்.' (23)

ஸஞ்ஜயர் சொல்லுகிறார் :—

மன்னனே! அர்ஜுனன் இவ்வாறு கூறியவுடன் ஸ்ரீ கிருஷ்ணன் அம் மகா ரதத்தைச் செலுத்தி இரண்டு படைகளுக்கும் நடுவில் சகல மன்னர்களுக்கும் பீஷ்மர், துரோணர் முதலோருக்கும் முன் நிறுத்தி, 'பார்த்தா! கௌரவர்களின் கூட்டத்தைப் பார்' என்றார். (24,25)

அங்கே இரண்டு சேனைகளிலும் உள்ள பெரியோர்கள், பாட்டன்மார்கள், குருக்கள், தாயுடன் பிறந்தவர்கள், சகோதரர்கள், புத்திரர்கள், பௌத்திரர்கள், தோழர்கள், மாமன்மார்கள், நண்பர்கள் முதலியோர்களை அர்ஜுனன் கண்டான். தனது பந்துக்களான இவ் வனைவரும் தன்முன் நிற்கக்கண்டு வருந்தி மனச்சோர்வடைந்த குந்திபுத்திரன் இவ்வாறு கூறலானான். (26, 27, 28)

அர்ஜுனன் உரைக்கிறன் :—

கிருஷ்ண! போரில் ஆசைகொண்டு கூடியிருக்கும் இந்த பந்து ஜனங்களையும் நண்பர்களையும் பார்த்து என் தேகம் தளர்ச்சியடைகின்றது; முகம் வறண்டு போகின்றது; சரீரம் நடுக்குறுகின்றது; மயிர்க் கூச்சல் உண்டாகின்றது. (29)

காண்டீவம் கையிலிருந்து நழுவுகின்றது; தேகத்தில் அனலைப்போன்ற எரிச்சல் எடுக்கிறது; என்னால் நிற்க முடியவில்லை; ஏனெனில்; என் தலை சக்கரம் போல் சுழலுகின்றது. (30)

கேசவா! இதுமட்டுமல்ல. விபரீதமான குறிகளைக் காண்கிறேன். சொந்தக்காரர்களைப் போரில் மாய்ப்பதில் யாதொரு மேன்மையையும் காண்கிலேன். (31)

அவர்களைக்கொன்று வெற்றி பெற நான் விரும்பவில்லை. எனக்கு ராஜ்யமும் வேண்டாம்; சுகமும் வேண்டாம்; கோவிந்தா! ராஜ்யத்தாலும் போகத்தாலும் எனக்காகவேண்டிய காரியம் என்ன? (32)

எவர்பொருட்டு ராஜ்யத்தையும் போகத்தையும் சுகத்தையும் நாங்கள் விரும்பவேண்டுமோ அவ்வாசாரி

யர்கள், பிதாக்கள், புத்திரர்கள், பிதாமகர்கள், மாதுலர், மாமன்மார்கள், பேரன்மார்கள், மைத்துனர்கள், மற்றுமுள்ள சொந்தக்காரர்களனைவரும் உயிரின் ஆசையும் செல்வத்தின் ஆசையும் துறந்து போர்முனையில் நிற்கின்றார்கள். (33-34)

இவர்கள் என்னைக் கொன்றுபோட்டாலும் சரி; அல்லது மூன்று உலகங்களையும் நான் ராஜ்யமாக அடைவதானாலும் சரி; நான் இவர்களைக் கொல்ல விரும்பவில்லை. பூமியின் ஒரு சிறு பாகத்திற்காக இவர்களை நான் எப்படிக் கொல்லுவேன்? (35)

ஜனார்த்தனா! திருதராஷ்டிர புத்திரர்களைக் கொன்று எனக்கு என்ன ஆனந்தம் உண்டாகக்கூடும்? உயிரை வெறுத்துவந்த இவர்களைக் கொல்லுவதால் நமக்குப் பாவமே பலிக்கும். (36)

மாதவா! நமது பந்துக்களான திருதராஷ்டிர மன்னனின் புத்திரர்களை வதைப்பது உசிதமன்று. வேண்டியவர்களை மாய்த்து நாம் எவ்விதம் சுகமாக வாழ முடியும்? (37)

ஜனார்த்தனா! பேராசையால் மாசடைந்த மனத்தோர் குலங்களை நாசம் செய்வதாலுண்டாகும் தீங்கையும்; நண்பர்களுக்குத் துரோகம்செய்த பாவத்தையும் அறியாமலிருக்கக் கூடும். குலநாசத்தின் தீமையை அறிந்த நம்மவர் இந்தப் பாவத்திலிருந்து தம்மை காக்கத் தெரியாதிருப்பதேன்? (38,39)

குலத்தை அழிப்பதால் பழமையான குலதர்மங்கள் நாசமடையும். தர்மம் அழிந்தால் அதர்மம் பெருகி, குலமனைத்தையும் கவிழ்த்து விடும். (40)

கிருஷ்ணா! அதர்மம் பெருகுவதால் குலமாதர் தம் கற்புநிலை கெடுவர்; அவர்கள் கெட்டால் ஜாதிக் குழப்பம் நேரிடும். (41)

குலங்களை அழித்து இவ்வித ஜாதிக் குழப்பத்தைச் செய்தவனும், அவன் குலத்தோரும் நரகத்தில் வீழ்ந்து வசிப்பார்கள். சிரார்த்தமும் தர்ப்பணமும் இல்லாததால் அவனுடைய முன்னோர்கள் அதோகதி யடைகின்றனர். (42)

குலங்களை யழித்து இவ்வித ஜாதிக் குழப்பத்தை உண்டுபண்ணும் கொடியவர்களின் குற்றங்களால் பழமையான ஜாதிதர்மங்களும் குலதர்மங்களும் நாச மடைகின்றன. (43)

ஜனார்த்தனா! எவனுடைய குலத்தின் தர்மங்கள் அழிந்து விட்டனவோ, அவன் தப்பாமல் நரகத்தில் வசிப்பான் என்று நம் பெரியோர் சொல்லக் கேட்டு வந்திருக்கிறோம். (44)

ஐயோ! கொடிய பாவச் செயல் புரிய நாம் முன் வந்திருப்பது, அதாவது ராஜ்ய சுகத்தின் துரா சையால் பந்துக்களைக் கொல்ல ஆயத்தமாக விருப் பது, எத்துணை வருந்தத்தக்கது. (45)

எதிர்த்துப் போர்புரியாது ஆயுதமின்றி நிற்கும் என்னை ஆயுதம்பூண்ட திருதராஷ்டிர புத்திரர்கள் இப்போர்க்களத்தில் கொல்லுவரேல், அதுவே எனக் குப் பெரு நன்மையாகும். (46)

ஸஞ்ஜயர் கூறுகிறார் :—

போர்க்களத்தில் இவ்வாறு உரைத்து துக்கத்தில் மூழ்கினவனாகி, அர்ஜுனன் தனது வில்லையும், அம்பையும் எறிந்துவிட்டு, தேரின் பின்புறத்தில் உட்கார்ந்தான். (47)

ஓம் தத் ஸத்.

இவ்வாறு ஸ்ரீமத்பகவத்கீதையென்ற உபநிஷத்தில் அதாவது
பிரம்ம வித்தையுடன் கூடிய யோக சாஸ்திரத்தில்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையின் அர்ஜுன
விஷாத யோகம் என்ற
முதல் அத்தியாயம்
முற்றிற்று.

---

# 2. ஸாங்க்ய யோகம்



மோக வசப்பட்ட மனிதன் அதர்மத்தை தர்மமென்று எண்ணுகிறன். மோகத்தால் அர்ஜுனன் தனக்கும்மற்றவர்களுக்கும் பேதம் கொண்டாடினுன். இந்த பேதத்தைப் பொய்யென்று சொல்லி,தேகத்திற்கும் ஆத்மாவுக்குமுள்ள வித்தியாசத்தை ஸ்ரீ கிருஷ்ணன் விளக்குகிறர். தேகம் அநித்தியம்; அது ஒவ்வொருவருக்கும் பிரத்தியேகமானது: ஆத்மாவோ நித்தியம்; அது ஒன்றே என்று அவர் கூறுகிறர். மனிதன் தனது புருஷார்த்தத்திற்குப் பிரயத்தனப் படுவதற்கே அதிகாரி; தன் முயற்சியின் பலா பலன்களுக்கு அல்ல, இதனுல் தனது கடமையை நிச்சயித்து, கவலையற்று, அதில் முழுமனதுடன் ஈடுபட வேண்டும். இவ்விதம் சஞ்சலமின்றி ஒருவழி நின்று கடன் ஆற்றுவதால் மனிதன் மோக்ஷம் அடைவான்.]

ஸஞ்ஜயர் கூறுகிறர் :—

*இங்ஙனம் கருணையால் சோர்ந்து, கண்களில் நீர் ததும்ப, துக்கத்தால் பரிதபிக்கும் அர்ஜுனனை நோக்கி மதுசூதனன் இவ்வாறு சொல்லலானுர்.* (1)

ஸ்ரீ பகவான் சொல்லுகிறர் :—

அர்ஜுன! உத்தம புருஷர்களுக்குத் தகாததும், நற்கதியைப் போக்குவதும், அபகீர்த்தியைக் கொடுப்பதுமான இம்மோகம் இந்த நெருக்கடியான தருணத்தில் உனக்கு எங்கிருந்து வந்தது? (2)

பார்த்தா! கோழைத்தனத்திற்கு நீ இடம் கொடுக்கலாகாது. இது உனக்கு அழகன்று. பாமரருக்குரிய இம்மனத்தளர்ச்சியை ஒழித்து, ஓ பரந்தபா! நீ எழுந்திரு. (3)

அர்ஜுனன் சொல்லுகிறன் :—

மதுசூதன! போர்க்களத்தின்கண் பீஷ்மரையும் துரோணரையும் அம்பால் எவ்வாறு மாய்ப்பேன்? எதிரிகளை வெல்லுவோனே! இவர்கள் என்னல் பூஜிக்கப்பட வேண்டியவர்கள். (4)

உயர்குணத்தோரான குருக்களைக்கொன்று வாழ்வதைக்காட்டிலும், இவ்வுலகில் பிச்சை யெடுத்துப் பிழைப்பதே மேலானது. ஏனெனின் குருக்களைக் கொன்றபின், அவர்களின் இரத்தங்கலந்த பொருளையும் இன்பத்தையுமே அநுபவிக்கவேண்டி வரும். (5)

நம்மவர், அவர்களை வெல்லுதல் நலமா? அவர்கள் எங்களை வென்ருல் மேலா? இவ்விரண்டில் சிறந்ததெது என்று அறியேன். எவரைக் கொன்றபின் எனக்கு வாழ விருப்பமில்லையோ, அந்த திருதராஷ்டிர புத்திரர் இதோ என்முன் நிற்கிருர்கள். (6)

கோழைத்தனத்தால் எனது (க்ஷத்திரிய) சுபாவம் மாறிவிட்டது. என்ன செய்வதென்று அறியாமல் திகைக்கிறேன். ஆகையால், எவ்வழியில் எனக்கு நன்மை உண்டாகுமோ அதை நிச்சயித்து எனக்குத்

தெரிவிக்குமாறு உன்னை வேண்டிக்கொள்ளுகின்றேன். நான் உனது சீடன்; உன்னை சரணமடைகிறேன்; எனக்கு வழிகாட்டு. (7)

இவ்வுலகில் சீரும் செல்வமும் நிறைந்து எதிரியற்ற ராஜ்யம் கிடைக்குமேயானாலும், தேவேந்திர பதவி கிட்டுமேயானாலும், எனது புலன்களை வாட்டும் இந்த சோகத்தைப் போக்கடிக்கும் வழியைக் காண்கிலேன். (8)

ஸஞ்ஜயர் உரைக்கிறார் :—

அரசனே! குடாகேசனான அர்ஜுனன் இருஷிகேசனான கோவிந்தனிடம் இவ்வாறுரைத்து 'இனி நான் போர் புரியேன்' என்று சொல்லி முடித்தான்; இவ்விதம் சொன்னபின் மௌனமாக அமர்ந்திருந்தான். (9)

பரதகுலமன்னனே! இவ்விரண்டு படைகளுக்கும் நடுவில் உற்சாகமிழந்து வீற்றிருக்கும் அர்ஜுனனை நோக்கி இருஷீகேசன் பின்வருமாறு உரைக்கலானார். (10)

ஸ்ரீ பகவான் கூறினார் :—

துக்கப்படுவதற்குத் தகாதாரைக் குறித்து நீ துயரம் அடைகிறாய்; பண்டிதனைப்போலவும் வாதிக்கிறாய். ஆனால் பண்டிதர் இறந்தாருக்கும் இருப்பவருக்கும் வருந்தமாட்டார். (11)

ஏனெனில், உண்மையை உணரின் நானும் நீயும் இம்மன்னரும் முன்னொரு காலத்தில் இருக்கவில்லை யென்பதும், அப்படியே பின்னொரு காலத்தில் இருக்கமாட்டோம் என்பதுமில்லை. (12)

தேகத்தை யடைந்தவன் இந்த சரீரத்திலேயே பால்யம், யௌவனம், முதுமை என்ற நிலைகள் பெறுவது போலவே, வேறொரு தேகத்தையும் அடைகிறான். இவ் விஷயத்தில் அறிஞனுக்கு மதிமயக்கம் உண்டாகாது. (13)

குந்திபுத்திரா! சீதம், உஷ்ணம், சுகம், துக்கம் முதலியன புலன்களின் உணர்ச்சிகளால் உண்டாகின்றன. அவை அநித்தியம்; ஓயாமல் வருவதும் போவதுமாக இருப்பவை. அவைகளை நீ பொறுத்துக்கொள். (14)

புருஷர்களில் சிறந்தோனே! சுக துக்கங்களை சமமாகக் கருதும் அறிவுள்ள மனிதனை இவ்வுணர்ச்சிகள் துன்புறுத்தமாட்டா. அவன் மோக்ஷத்திற்கு உரியவனாகிறான். (15)

நிலையில்லாப் பொருள் நிலைத்திருக்காது. நிலையுள்ள பொருளுக்கு நாசமில்லை. இவ்விரண்டு பொருள்களையும் ஞானிகள் நிர்ணயித்திருக்கின்றனர். (16)

எதனால் இவ்வுலகனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ அதை நாசமடையாப் பொருள் என்று அறிந்துகொள். இந்த அழியாப்பொருளை அழிக்கும் வல்லமை எவருக்கும் இல்லை. (17)

தேகத்தின் நாயகன் நித்தியன், அளவற்றவன், நாசமற்றவன்; அவனது தேகங்களான இவை அழிவுள்ளவையென்று சொல்லப்படுகின்றன. ஆகையால் ஓ பார்த்தா! நீ போர் புரி. (18)

இவனைக் கொல்லுபவன் என்று நினைப்பாரும், இவன், இறப்பவன் என்று எண்ணுவாரும், இவ்விருவகுப்பாரும் அறிவிலர். இவன் (ஆத்மா) மாய்ப்பதுமில்லை; மாய்வது மில்லை. (19)

இவன் என்றும் பிறப்பதுமில்லை; இறப்பதுமில்லை. ஒருகாலத்தில் இருந்து பிறகு இல்லாமலிருப்பதுமில்லை. இதனால் இவன் பிறப்பில்லாதவன், நித்தியன், நிலை பெற்றவன், பழையோன். சரீரம் நாசமடைவதால் இவன் நாசமடையான். (20)

பார்த்தா! ஆத்மா நாசமற்றது; நித்தியமானது; பிறப்பில்லாதது; குறைவற்றதென்று அறிந்தவன் யாரை எவ்விதம் கொல்வான்? எவரால் கொல்லப்படுவான்? (21)

மனிதன் எப்படி தனது பழைய உடைகளை எறிந்துவிட்டு, புதிய வஸ்திரங்களை அணிகிறானோ, அப்படியே தேகத்தைத் தாங்குவோனும் நைந்த உடலைத் தள்ளிவிட்டு, புதிய தேகத்தை யடைகிறான். (22)

இவனை (ஆத்மாவை) ஆயுதங்கள் வெட்ட மாட்டா; அனல் எரிக்காது; ஜலம் நனைக்காது; காற்று உலர்த்தாது. (23)

இவன் வெட்டப்படான்; எரிக்கப்படான்; நனைக்கப்படான்; உலர்த்தப்படான்; நிலைபெற்றவன்; அசையாதவன்; என்றும் உள்ளவன். (24)

தவிர, இவன் நம் இந்திரியங்களுக்கும் மனத்திற்கும் எட்டாதவன்; மாறுதலில்லாதவன் என்றும் சொல்லப்படுவான். ஆகையால் இவனை இவ்வாறு அறிந்தபின் நீ துயரப்படுதல் சரியன்று. (25)

நீண்ட கையுடையோனே! இவ்விதமின்றி இவனை தினம் பிறந்து தினம் இறப்பவனாக் எண்ணினபோதிலும், நீ துக்கமடைவது உசிதமன்று. (26)

பிறந்தவன் இறக்கவே வேண்டும்; இறந்தவன் பிறந்தே தீரவேண்டும்; இதைத் தடுக்கமுடியாது; ஆதலால், விலக்கவொட்டாத விதிக்கு விசனப்படுவது நியாயமன்று. (27)

பார்த்தா! உயிர்கள் பிறப்பதற்கு முன்னும் இறந்த பின்னும் கண்களுக்குப் புலப்படமாட்டா; அந் நிலைகள் வெளித்தோன்றாதவை; நடுநிலையே தோன்றுவது; இதில் கவலைக்கு இடமேது? (28)

இவனை ஆச்சரியமென்று ஒருவன் பார்க்கிறான்; மற்றொருவன் ஆச்சரியமென்று வர்ணிக்கிறான்; இன்னுமொருவன் ஆச்சரியமென்று வர்ணிக்கப்படுவதைக் கேட்கிறான். ஆயினும், கேட்டும் கூட இவனை அறிவான் எவனுமில்லை. (29)

பார்த்தா! எல்லா உடல்களிலும் வசிப்பவனான ஆத்மா, தேகத்தை தாங்குபவனாயினும் கொல்லப்படமாட்டாதவன். இதனால் எவ்வுயிர் பொருட்டும் துக்கித்தல் நன்றன்று. (30)

குறிப்பு :—இதுகாறும் ஸ்ரீ கிருஷ்ணன் மதியின் உதவியால் ஆத்மாவின் நித்யத்தையும், தேகத்தின் அநித்யத்தையும் விளக்கிக்காட்டி, எப்பொழுதேனும் உடலை அழிப்பது உசிதமானால், அச்சமயம் தன்னைச் சேர்ந்தவர்களென்றும், பிறர்கள் என்றும் பிரிவு செய்து, கௌரவர்கள் சகோதரர்கள், அவர்களை எவ்விதம் கொல்வது என்று யோசிப்பது மோகத்தினாலுண்டாவது என்று கூறினார். இனி க்ஷத்திரிய தர்மம் என்னவென்று அர்ஜுனனுக்குக் கூறுகிறார்.

உனது சொந்த தர்மத்தை உத்தேசித்தும், நீ சஞ்சலப்படுவது சரியன்று. ஏனெனில், அறப்போரைப் போல் நற்கதி கொடுப்பது க்ஷத்திரியனுக்கு வேறொன்றுமில்லை. (31)

பார்த்தா! நீ கோராமல் வலியவந்ததும், விண்ணுலகத்தின் கதவைத்திறப்பதுமான இவ்விதயுத்தம் பாக்கியவானான க்ஷத்திரியனுக்கல்லவோ கிடைக்கின்றது. (32)

இவ்விதம் தர்மமாகக் கிடைத்த யுத்தத்தில் நீ போர் புரியாவிடின் உன் ஸ்வதர்மத்தையும், கீர்த்தியையும் இழந்து பாவம் செய்தவனாவாய். (33)

எல்லா ஜனங்களும் உன்னை நிந்திப்பார்கள். புகழ் பெற்றோனுக்கு மரணத்தைவிட அபகீர்த்தியே இழிவானது. (34)

எந்த மகாரதர்கள் இதுகாறும் உன்னை மதித்து வந்தார்களோ, அவர்களே போருக்குப் பயந்து புறங்காட்டி ஓடினவனாகக் கருதி உன்னை அவமதிப்பார்கள். (35)

தவிர, உனது சத்துருக்கள் உனது வீர்யத்தை இகழ்ந்து சொல்லத்தகாத சொற்களைக் கூறுவார்கள். இதற்குமேல் அதிகத் துயரத்தைக் கொடுக்கக்கூடியது வேறு உண்டோ? (36)

இறந்தால் விண்ணுலகம் சேர்வாய்; வெற்றியடைந்தால் பூமியாள்வாய். ஆகையால், ஓ கௌந்தேயா! போர்புரிய நிச்சயித்து எழுந்திரு! (37)

குறிப்பு:—இவ்விதம் பகவான் ஆத்மாவின் நித்யத்தையும், உடலின் அநித்தியத்தையும் காட்டினார். மேலும் தனது முயற்சியின்றிக் கிட்டிய போரைப்புரிவது

க்ஷத்திரிய தர்ம விரோதமாகா தென்று உரைத்தார். இவ்விதம் 31-வது சுலோகத்திலிருந்து பகவான் பரமார்த்தத்துடன் உபயோகத்தையும் பிணைத்திருக்கிறார். இவ்வாறு கூறியபிறகு பகவான் கீதையின் முக்கிய உபதேசத்தை ஒரு சுலோகத்தில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார்.

சுகதுக்கம், லாப நஷ்டம், வெற்றி தோல்வி இவைகளைச் சமமாகக் கருதிப் போர்புரிய ஆயத்தம் செய். இவ்வாறு செய்வாயானல் உன்னைப் பாவம் அணுகாது. (38)

இதுகாறும் நான் உனக்கு ஸாங்க்ய ஸித்தாந்தத்தை (தர்க்கவாதத்தை) அனுசரித்து உனது கடமையைக் கூறினேன். இப்பொழுது யோகவாதத்தை அனுசரித்துச் சொல்லுகிறேன் கேள். இதைக் கைக்கொள்வதால் கர்மபந்தத்தை ஒழிக்க ஆற்றல் பெறுவாய். (39)

இதில் தொடங்கிய காரியத்திற்கு அழிவு கிடையாது; கெடுதலும் வராது. இந்நெறிபற்றி ஒருவன் சிறிது தூரம் சென்றாலும் பெரும் பயத்திலிருந்து விடுவிக்கப்படுகிறான். (40)

குருநந்தன! யோகவாதியின் நிச்சயம் பெற்ற புத்தி ஓர் நிலைப்பட்டது. நிச்சயமில்லாதவர்களின் புத்திகளோ பல கிளைகளுள்ளனவும் எல்லையற்றனவுமாக இருப்பன. (41)

குறிப்பு:—எப்பொழுது புத்தி ஓர் முகமின்றிப் பலவாறாக ஆகின்றதோ, அப்பொழுது அது புதியதல்ல; வாசனையாக மாறிவிடுகின்றது. ஆகையால் புத்திகள் என்றால் வாசனைகள் என்று பொருள்.

ஞானமில்லாத வைதீகர்கள் 'இதைத் தவிர வேறொன்றுமில்லை' என்று சொல்லிக்கொண்டு, காமத்தில் அகப்பட்டு, சுவர்க்கத்தையே மேலான புருஷார்த்தமாக எண்ணி, போகத்திற்கும் செல்வத்திற்கும் விரும்பி, இறப்பையும் பிறப்பையும் கொடுக்கும் கர்மங்களை வர்ணித்து நீண்டவாதம் செய்கின்றனர். போகத்திலும் செல்வத்திலும் பற்றுள்ள இம்மனிதரின் அறிவு அழிந்துபோகிறது. இவர்களின் மதி உறுதியற்று சமாதியில் நிலை பெற்றிருக்காது. (42,43,44)

குறிப்பு :—யோகவாதத்திற்கு விரோதமான கர்ம காண்டம் அல்லது வேதவாதத்தின் வர்ணனை, மேற்கூறியமூன்று சுலோகங்களில் செய்யப்பட்டிருக்கிறது. கர்ம காண்டம் அல்லது வேதவாதம் என்பது பலன்களைத் தரக்கூடிய கணக்கற்ற வைதீக கிரியைகள். இக்கிரியைகள் வேதாந்தத்தின் ரகஸ்யமான வேதாந்தத்திலிருந்து வேறுபட்டு அல்ப பலன்களைக் கொடுப்பதால் பிரயோசன மற்றவை.

அர்ஜுனா! எந்த மூன்று குணங்களால் (சத்வ, ரஜ, தமோ குணங்கள்) வேதத்தின் கிரியைகள் தீண்டப்பட்டிருக்கின்றனவோ, அவைகளால் தீண்டப்படாமலிரு. சுகதுக்கம் முதலிய இரட்டை நோய்களிலிருந்து விடுதலை யடை. நித்தியமான உண்மைப்பொருளில் நிலைபெற்று நில். ஒரு பொருளை அடையவேண்டும், அதைக்காக்கவேண்டுமென்ற கவலையிலிருந்துவிடுபட்டு வாழ். உன் ஆத்மாவையே அவலம்பித்துக்கொள். (45)

கிணற்றினாலாகக்கூடிய காரியங்கள் அனைத்தும் ஏரியினால் அவசியம் உண்டாகும். அவ்வாறே வேதங்களில் இருக்கும் பொருள்களெல்லாவற்றையும் அறி

ஞன், பரப்பிரம்மத்தைச் சார்ந்து நிற்கும் ஆத்மாவின் அனுபவத்தால் அடைகிருன். (46)

உன் கர்மத்தைச் செய்வதில் மட்டுமே உனக்கு அதிகாரமுண்டு. அதனுல் உண்டாகும் பலவித பலன்களில் எவ்வித உரிமையுமில்லை. கடனை ஆற்றுவதில் கர்மத்தின் பலன் காரணமாதலாகாது. கர்மத்தைச் செய்ய மாட்டேனென்றும் பிடிவாதம் செய்யாதே! (47)

தனஞ்ஜயா! பற்றை ஒழித்து, வெற்றி தோல்வியில் சமபாவமடைந்தவனுய் யோகநிலையில் இருந்து கடனை ஆற்று. யோகமென்பது சமபாவத்தின் மறு பெயரே. (48)

தனஞ்ஜயா! சமத்துவ புத்தியோடு சீர்தூக்கிப் பார்க்கின், அதனுடன் கூடாத தனிக்கர்மம் மிகவும் அல்பமானது. நீ சமத்துவ புத்தியில் சரண்புகு. பலனை விரும்பிப் பணிசெய்யும் மனிதன் இரக்கப்படத் தக்கவன். (49)

புத்தியோடு கூடிய, அதாவது சமபாவத்தைப் பெற்ற புருஷனைப் பாவமும் புண்யமும் தீண்டமாட்டா. ஆகையால், சமத்துவம் பெற முயற்சிசெய். சமநிலையே கடனுற்றுவதின் நன்முறை. (50)

ஏனெனில், சமத்துவப் புத்திபெற்றோர், கர்மத்தாலுண்டாகும் பந்தத்திலிருந்து விடுபட்டு மாசற்ற மோக்ஷ பதவி அடைகின்றனர். (51)

எப்பொழுது உனது புத்தி மோகமென்னும் சேற்று நிலத்தை கடந்து செல்லுகின்றதோ, அப்பொழுது அறிந்தனவும் அறியாதனவுமான விஷயங்களைப் பற்றிய கவலை தீரும். (52)

பலவித சமயங்களைக் கேட்டு கலக்கமுறும் உனது புத்தி, சமாதியில் உறுதிபெற்று நிற்கும் பொழுதே நீ சமத்வ நிலை அடைவாய். (53)

அர்ஜுனன் கூறுகிறன் :—

கேசவா ! ஸ்திதப்பிரக்ஞன், அதாவது சமாதியில் இருப்போனுடைய குறிகள் என்ன ? ஸ்திதப்பிரக்ஞன் பேசுவது எவ்விதம் ? இருப்பதும் நடப்பதும் எங்ஙனம் ? (54)

ஸ்ரீ பகவான் உரைக்கிறர் :—

பார்த்தா ! தன் மனத்தில் உதிக்கும் சகல கர்மங்களையும் துறந்து தனது ஆத்மாவைக் கொண்டு அகமகிழ்ச்சி யடையும் மனிதனே ஸ்திதப்பிரக்ஞன் என்று கூறப்படுவான். (55)

குறிப்பு:—ஆத்மாவைக்கொண்டு அகமகிழ்ச்சி யடைவதென்ருல், ஆத்மாவின் ஆனந்தத்தைத் தனது உள்ளத்திலேயே தேடுவது என்று பொருள். சுக துக்கத்தைக் கொடுக்கத் தகுந்த வெளிப்பொருள்களை இவ்வானந்தத்திற்கு ஆதாரமாகக் கொள்ளலாகாது. ஆநந்தம் சுகத்தினின்று மாறுபட்ட விஷயம். இதை மறந்துவிடக் கூடாது. பணம் கிடைத்துவிட்டது, அதனுல் சுகமடைந்தேன் என்று கருதுதல் மோகத்தாலுண்டாகின்றது. பிச்சை எடுப்பேன், உணவின்றி வருந்துவேன், ஆயினும் திருட்டுப்போன்ற இழிதொழில் புரியேன் என்பதில் கிடைக்கும் உணர்ச்சி ஆநந்தம். அதுவே ஆத்மாவின் அகமகிழ்ச்சி.

துயரத்தால் மனமுடையாதான்; சுகத்தில் இச்சை வையாதான்; விருப்பம், பயம், ஆத்திரம் இவைகளை ஒழித்தவன்; அவனே ஸ்திரபுத்தி யுடைய முனிவன் என்று சொல்லப்படுகிறான். (56)

எங்கும் பற்றற்று, நல்லது கூடுங் காலத்து மகிழ்ச்சியும், பொல்லாதது வரும்பொழுது தளர்ச்சியும் அடையாத புருஷனுடைய மதி நிலைபெற்றது. (57)

நாலு பக்கங்களிலிருந்தும் ஆமை தனது அங்கங்களை உள்ளிழுத்துக்கொள்வது போல, வெளிப்பொருள்களிடமிருந்து தனது புலன்களை உள்ளடக்கி வைப்போனுடைய புத்தி ஸ்திரமான தென்று கூறத்தகும். (58)

உடல் பெற்றவன் உணவை ஒழிக்கின், அச்சமயம் அவனது போகம் குறையும்; ஆனால் அதன் மேலுள்ள ருசி அகலுவதில்லை. அந்த ருசியும் கடவுளைக் கண்டபொழுது ஒழியும். (59)

குறிப்பு:—இந்த சுலோகம் உபவாசம் முதலியவற்றைத் தடுக்கவில்லை. அவைகளின் உபயோகத்தின் வரம்பையே காட்டுகிறது. புலன்களின் உணர்ச்சிகளை சாந்தப்படுத்துவதற்கு உபவாசம் முதலியவை இன்றியமையாதவை. ஆனால் அவைகளுக்கு வேரான ரஸம், அல்லது ருசி ஈசுவரனைக் கண்ட பிறகே சாந்தமடையும். ஈசுவரனைக் காண்பதில் ருசி பெற்றவன் மற்ற ருசிகளை மறந்துவிடுகிறான்.

கௌந்தேயா! திறமையுள்ள புருஷன் விடா முயற்சி செய்தபோதிலும், அவனது இந்திரியங்கள் மனத்தைக் கலைத்து பலாத்காரமாகத் தங்கள் வழியே கொண்டுபோய் விடுகின்றன. (60)

யோகநிலே பெறுவோன் இப்புலன்களனைத்தையும் அடக்கி என்னிடத்தில் லயமடையவேண்டும். தனது புலன்களை அடக்கினவனது அறிவே உறுதியுள்ளது. (61)

குறிப்பு :—இதன் பொருள் : பக்தியின்றி கடவுள் கருணையின்றி—மனிதனுடைய முயற்சி வீண்.

விஷயங்களைச் சிந்திப்பதனால் மனிதனுக்கு அவற்றினிடம் பற்று உண்டாகிறது ; பற்றினால் காமம் பிறக்கிறது ; காமத்திலிருந்து கோபம் கிளம்புகிறது. (62)

குறிப்பு :—காமத்தையுடையவன் கோபத்தை விலக்க முடியாது. ஏனென்றால், அவனுடைய காமம் எப்பொழுதும் திருப்தியடைவதில்லை.

கோபத்திலிருந்து மூடத்தனம் பலிக்கிறது ; மூடத்தனத்தால் மதிக்குழப்பம் தோன்றுகிறது ; மனக்கலக்கமுள்ளவன் அறிவை இழக்கிறான் ; அறிவிழந்தவன் செத்தவனுக்குச் சமானமாகிறான். (63)

இதற்கு மாறாக எவன் மனத்தைத் தன் வசப்படுத்தி வைக்கிறானோ, விருப்பையும் வெறுப்பையும் அகற்றித் தன் இந்திரியங்களை அதன் கீழ்ப்படுத்தி வைத்திருக்கின்றானோ, அம்மனிதன் தனது இந்திரியங்களால் கர்மங்களைச் செய்துகொண்டே அகமலர்ச்சி யடைகிறான். (64)

அகமலர்ச்சி யடைவதால் அவனது துயரம் அழிவடைகிறது. அகமலர்ச்சி உடையவனது புத்தி ஸ்திரமாகிறது. (65)

சமத்துவமில்லாதவனுக்குப் பகுத்தறிவில்லை. அவனுக்குப் பக்தியுமில்லை. பக்தியில்லாதவனுக்குச் சாந்தி

யில்லை. சாந்தி யில்லாதவனுக்குச் சுகம் எங்கிருந்து கிடைக்கும்? (66)

விஷயங்களை நோக்கிச்செல்லும் புலன்களின் பின்னால் எவனது மனம் தாவுகின்றதோ, அம்மனம் நீரில் மிதக்கும் படகைக் காற்றுத்தள்ளுவதுபோல் அவனது புத்தியை அங்கு மிங்கும் இழுத்துச் செல்லுகின்றது. (67)

நீண்ட புயத்தோனே! எவனது புலன்கள் நான்கு திக்குகளிலுமுள்ள விஷயங்களிலிருந்து நீங்கி, தன் வசப்படுகின்றனவோ, அவனது அறிவே ஸ்திரமாகின்றது. (68)

மற்ற உயிர்கள் உறங்கும்பொழுது புலன்களை அடக்கி யுள்ளவன் விழித்திருக்கிறான். மற்றவர்கள் விழிக்கும் பொழுதே அறிஞனான முனிவன் தூங்குகிறான். (69)

குறிப்பு:—போகத்தில் ஈடுபட்ட மனிதர்கள் இரவு பன்னிரண்டு அல்லது ஒரு மணி வரை நர்த்தனம், நாடகம், அன்னபானம் முதலியவைகளில் காலங்கழித்து காலை ஏழெட்டு மணிவரை உறங்குகிறார்கள். இந்திரியங்களை ஜயித்தோன், இரவு ஏழெட்டு மணிக்குப் படுத்து, நடுநிசியில் எழுந்து கடவுளைத் தியானம் செய்கிறான். தவிர, போகத்தில் பிரியமுடையவன் தனது உலக விவகாரங்களைப் பெருக்கிக் கடவுளை மறக்கிறான். ஞானியோ உலக வாழ்க்கையில் கவலையற்று ஈசுவரனைக் காண்கிறான். இவ்விருவருடைய நெறிகள் வெவ்வேறென்று இந்தச் சுலோகத்தில் பகவான் காட்டியிருக்கிறார்.

பல நதிகள் பாய்ந்து நீரால் நிரம்பியும் கடல் அசைவற்றிருப்பதுபோல, இவ்வுலக இன்பங்கள் யாவும்

எந்த மனிதனைச் சேர்ந்து வேகமழிந்து போகின்றனவோ, அவனே சாந்த நிலை அடைகிறான். ஆனால் காமமுடையோனுக்கு அந்நிலை கிட்டாது. (70)

எல்லா ஆசைகளையும் துறந்த எப்புருஷன், விருப்பம், மமதை, அகங்காரம் இவைகளை விலக்கித் தன் கடன் ஆற்றுகிறானோ அவனே சாந்தி பெறுகின்றான். (71)

பார்த்தா! ஈசுவரனை அறிந்தவன் நிலை இவ்விதமிருக்கும். அந்நிலை பெற்றவன் மோகத்தின் வசமாகான். தன் மரண காலத்தும் இந்நிலையிலிருப்பானுகில் அவன் பிரம்ம மயமான நிர்வாண மடைவான். (72)

ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதை யென்னும் உபநிஷத்தில்
அதாவது பிரம்மவித்தையோடு கூடிய யோக
சாஸ்திரத்தில்—ஸ்ரீ கிருஷ்ணனுக்கும்
அர்ஜுனனுக்கும் நடந்த சம்பா
ஷணையின் ஸாங்கிய
யோகம் என்ற
இரண்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

# 3. கர்ம யோகம்



[கீதையின் உட்கருத்தை அறிவதற்கு இவ்வத்தியாயம் திறவுகோலெனத் தகும். இதில், கர்மத்தை எவ்விதம் செய்ய வேண்டும்; எக்கர்மத்தைச் செய்ய வேண்டும்; உண்மையான கர்மமெனப்படுவது எது; இவ்விஷயங்கள் விளக்கிக் காட்டப்பட் டிருக்கின்றன. மெய்யான ஞானம் நற்கருமத்தில் பரிணமிக்க வேண்டுமென்றும் கூறப்பட் டிருக்கின்றது.]

அர்ஜுனன் சொல்லுகிறன் :—

*ஜனார்த்தன! கர்மத்தைவிட புத்தி மிகவும் மேலான தென்று கருதுகிறாய். அப்படியிருக்க என்னை இக் கொடூர வேலையில் ஏன் வீழ்த்துகிறாய்?* (1)

குறிப்பு :—*புத்தியென்றால் சமத்துவ புத்தி.*

*பலவழி காட்டும் உனது சொற்களால் என் மனதில் சந்தேகத்தை உண்டுபண்ணுகிறாய்போல் தோன்றுகிறது. ஆகையால் இவ்விரண்டில் எது எனக்கு நன்மை பயக்குமென்று முடிவு செய்து ஐயமற உரைப்பாயாக.* (2)

குறிப்பு :—*அர்ஜுனனுக்கு மனக்குழப்பம் ஏற்பட்டது. ஒருபக்கம் மனத்தளர்ச்சி யடைந்ததற்காக பகவான் அவனை நிந்தித்தார். மற்றொரு பக்கத்திலோ இரண்டா*

வது அத்தியாயம் 49-50 சுலோகங்களில் கர்மத்தியாகத்தை உபதேசித்ததாகக் காணப்படுகிறது. ஆழ்ந்து ஆலோசனை செய்தால், இக்குழப்பத்திற்குக் காரணம் இல்லை என்று மேலே கூறுகிறார்.

ஸ்ரீ பகவான் உரைக்கிறார் :—

தீச்செயல் துறந்தோனே! இவ்வுலகத்தில் அடையக்கூடிய இரண்டு நிலைகளை நான் முன்பு தெரிவித்தேன்; ஒன்று ஞானயோகத்தின் மூலம் அடையப்படும் ஸாங்க்யர்களின் நிலை; இரண்டாவது கர்மயோகத்தினால் பெறக்கூடிய யோக நிலை. (3)

மனிதன் கர்மத்தை ஆரம்பிக்காமலிருப்பதால் நிஷ்கர்மத்தை அனுபவிக்கான்; தவிர, வெளிக் கர்மங்களைத் தியாகம் செய்வதால் மோக்ஷத்தை அடையான். (4)

குறிப்பு :—நிஷ்கர்மம் என்பது மனம், வாக்கு, காயம் இவைகளால் எவ்வித வேலையும் செய்யாதிருத்தல். இவ்வித நிஷ்கர்மத்தின் அனுபவம் கர்மத்தைத் துறப்பதால் பெற முடியாது. அப்படியானால், இதன் அனுபவம் எப்படிக் கிட்டும் என்று மேலே பார்ப்போம்.

உண்மையில் ஒரு க்ஷணநேரமாவது எவனும் கர்மம் செய்யாமலிருக்க முடியாது. ஒவ்வொரு மனிதனும் தன் சுபாவ குணங்களால் கட்டுப்படுத்தப்பட்டு கர்மத்தைச் செய்ய வேண்டியவனாகிறான். (5)

எந்த மனிதன் தன் கர்மங்களிலிருந்து இந்திரியங்களைத் தடுத்துவிட்டு, அவைகளின் விஷயங்களை மனத்தால் சிந்தித்துக் கொண்டிருக்கின்றானோ அவனை மூடனென்றும் பொய்யனென்றுமே கூறுதல் பொருந்தும். (6)

குறிப்பு:—வாக்கை மட்டும் அடக்கிக்கொண்டு மனத்தால் பிறரைத் தூஷிப்பது நிஷ்கர்மம் அல்ல; மித்யாசாரமே; இதனால் மனத்தை அடக்க முடியாதவன் சரீரத்தை அடக்குவது உபயோகமில்லை என்று கொள்ளக்கூடாது. சரீரத்தை அடக்காமல் மனத்தைச் சிறிதும் கட்டுப்படுத்த இயலாது. ஆனால், சரீரத்தை அடக்குவதோடு மனத்தையும் கூடவே அடக்கியாள முயலவேண்டும். பயம் முதலிய வெளிக்காரணங்களால் சரீரத்தை அடக்கி மனத்தை அடக்காமலும், அதுமட்டுமன்றி மனத்தால் விஷயங்களை அனுபவித்துக் கொண்டும், சந்தர்ப்பம் கிடைத்தபொழுது சரீரத்தாலும் போகத்தை அனுபவிக்கும் பொய்யர்களே இவ்விடம் நிந்திக்கப்படுகிறார்கள். இதற்கு மாறுபட்ட மனோபாவத்தை மேல் சுலோகத்தில் காண்பிக்கிறார்.

அர்ஜுனா! ஆனால் எம்மனிதன் தனது புலன்களை மனத்தால் அடக்கி, பற்றில்லாதவனாய் கர்மம் புரிய வேண்டிய இந்திரியங்களால் கர்ம யோகத்தைத் தொடங்குகின்றானோ அவனே சிரேஷ்ட புருஷனாவான். (7)

குறிப்பு:—இதில் உள்ளும் புறமும் கலந்திருக்கிறது மனத்தைக் கட்டிவைத்த பிறகும் மனிதன் தன் சரீரத்தால், அதாவது கர்மேந்திரியங்களின் மூலம் ஏதாவது செய்தே தீருவேன். ஆயினும், கட்டப்பட்ட மனத்தையுடைய புருஷன் காதால் கேட்ட வம்புகளைக்கேளாது ஈசுவர பஜனையைக் கேட்பான்; நல்லோர்களின் குணங்களைக் கூறுவோர்க்குச் செவி கொடுப்பான்; மனத்தைத் தன் வசப்படுத்தியவன் விஷய பதார்த்தங்களில் ருசிகொள்ளான்; இவ்வித மனிதன் ஆத்மாவுக்கு அழகான வேலையைச் செய்வான். இவ்வித கர்மங்களைச்

செய்வதே கர்மமார்க்கம். எம் முயற்சியால் ஆத்மா சரீரத்தின் பந்தத்திலிருந்து விடுபட வழி பிறக்குமோ, அதுவே கர்மயோகம். இதில் விஷயங்களில் பற்று வைப்பதற்கு இடமே இல்லை.

ஆகையால் நீ உனக்கு உரிய நியதமான கடமையைச் செய். கர்மம் செய்யாதிருப்பதைக் காட்டிலும் அதைச் செய்வதே மேலானது; கர்மமின்றி உனது சரீர நிர்வாகம்கூட நடக்காது. (8)

குறிப்பு:—'நியதமான' என்ற சொல் மூல சுலோகத்திலிருக்கிறது. பின் சுலோகத்துடன் அதற்கு சம்மந்தம் உண்டு. அதில் மனத்தைக் கொண்டு இந்திரியங்களை நல்வழியில் செலுத்தி, பற்றின்றிப் பணிசெய்வோர் புகழப்படுகின்றனர். இவ்விடம் நியதமான காரியத்தின்—அதாவது இந்திரியங்களை நல்வழி நிறுத்தி செய்யப்படும் கர்மத்தின்—அவசியம் வற்புறுத்தப்படுகிறது.

யக்ஞத்தின் பொருட்டு செய்யப்படும் கர்மங்களைத் தவிர்த்து இதர கர்மங்களால் இவ்வுலகு பந்தப்படுகின்றது. ஆகையால், ஓ கௌந்தேயா! நீ ஆசையை ஒழித்து யக்ஞத்திற்காகக் கர்மத்தை செய். (9)

குறிப்பு:—யக்ஞம் என்றால் பரோபகாரத்திற்காகவும், ஈசுவரனுக்காகவும் செய்யப்படும் காரியம்.

யக்ஞத்துடன் கூடவே மனிதரை உண்டாக்கி, உலக நாயகனான பிரம்மன் கூறினான்:—இந்த யக்ஞத்தின் வாயிலாக நீங்கள் வளர்ச்சியடைவீர்களாக. இது உங்களுடைய மனத்திற்கினிய பலனைக் கொடுக்கட்டும். (10)

யக்ஞத்தின் மூலம் தேவதைகளைப் போஷியுங்கள். தேவதைகள் உங்களைக் காப்பாற்றட்டும். இவ்விதம் இருவரும் ஒருவரையொருவர் பரிபாலித்துக்கொண்டு நீங்கள் உயர்ந்த நன்மைகளை அடைவீர்களாக. (11)

யக்ஞத்தால் திருப்தியடைந்த தேவதைகள் உங்களுக்கு இஷ்டமுள்ள போகங்களைத் தருவார்கள். பிரதி உபகாரம் செய்யாமல் அவர்களால் கொடுக்கப் பட்ட நன்மைகளை அனுபவிப்பவன் திருடன். (12)

குறிப்பு :—இவ்விடம் தேவதை யென்றது ஈசுவரனுடைய சேதன சிருஷ்டி. உயிருள்ள ஜீவன்களுக்குத் தொண்டுபுரிதல் தேவசேவை. அதுவே யக்ஞம்.

யக்ஞம் செய்து மிச்சத்தை உண்ணுவோர் பாவத்திலிருந்து விடுபடுவார்கள். தன் வயிற்றுக்கு மட்டும் உணவு சமைப்போர் பாவத்தை அருந்துகின்றனர். (13)

அன்னத்தால் உயிர்கள் உண்டாகின்றன. அன்னம் மழையால் உண்டாகின்றது. மழை யக்ஞத்தால் பெய்கிறது. யக்ஞம் கர்மத்தால் ஆகிறது. (14)

கர்மம் சுபாவத்தால் ஏற்படுகிறது; சுபாவம், அழியாத பிரம்மத்தினின்று உண்டாகின்றது: இதை நீ அறிந்துகொள். இதனால் எங்கும் உள்ள பிரம்மம் எப்பொழுதும் யக்ஞத்தில் இருக்கின்றது. (15)

பார்த்தா! இவ்வாறு சுழன்று வரும் சக்கரத்தை எவன் அனுசரிப்பதில்லையோ, அவன் தனது வாழ்க்கையைப் பாவம் நிறைந்ததாகச் செய்கிறான்; புலன்களின் சிற்றின்பங்களில் சிக்கிக்கொண்டு வீணாகக் காலங் கழிக்கிறான். (16)

இதற்கு மாறாக, தனது ஆத்மாவில் இன்புற்று, அதைக்கொண்டே திருப்தியடைந்து அவ்விடத்தே சந்தோஷத்தைக் காண்பவனுக்குச் செய்யவேண்டிய காரியம் ஒன்றுமில்லை. (17)

கர்மத்தைச் செய்வதிலும் செய்யாதொழிவதிலும் அவனுக்கு யாதொரு தன்னலமும் இல்லை: எவ்வுயிரிலும் அவன் தனக்குச் சொந்த பிரயோசனத்தைக் காண்பதில்லை. (18)

இக்காரணத்தால், பற்றைவிட்டு ஓயாமல் கடமையான கர்மத்தை செய். பற்றின்றிப் பணி செய்யும் புருஷன் மோக்ஷம் பெறுவான். (19)

ஜனகர் முதலோர் கர்மத்தாலே பரமபதத்தையடைந்தனர். உலகத்தின் நன்மையை நோக்கியும் நீ கர்மம் புரியவேண்டும். (20)

உத்தம புருஷன் செல்லும் நெறியை மற்றவர் அனுசரிக்கின்றனர். அவன் எதைக் கடமையாகச் செய்கிறானோ, அதையே இதர ஜனங்கள் பின்பற்றுகின்றார்கள். (21)

பார்த்தா ! எனக்கு இம்மூன்று உலகங்களிலும் செய்யவேண்டிய காரியம் ஒன்றுமில்லை. அடையக் கூடிய பொருள் அடையாமலிருப்பதொன்றுமில்லை. ஆயினும், நான் கர்மத்தில் ஈடுபட்டிருக்கிறேன். (22)

குறிப்பு :—சூர்யன், சந்திரன், பூமி முதலியவை ஓய்வின்றியும் வழி தவறாமலும் செல்லுவது ஈசுவரனுடைய கர்மத்தைக் குறிக்கின்றது. இக்கர்மங்கள் மனத்தால் செய்யப்படாதன ; சரீரத்தால் செய்யப்படுவனவாகக் கருதப்படலாம். கடவுளுக்கு உருவமில்லாதிருப்பதால்

அவர் உடலாலாகும் காரியங்களை எங்ஙனம் செய்யக் கூடும் என்ற சந்தேகத்திற்கு இடமில்லை. ஏனெனில் அவர் அசரீரியாகவிருந்தும் சரீரமுள்ளவரைப் போல் வேலைசெய்து வருவதைப் பிரத்யக்ஷமாகக் காண்கிறோம். இக்காரணத்தால் கர்மம் புரிந்துகொண்டே அகர்மியாகவும், கர்மத்தால் தூஷிக்கப்படாதவராக வும் இருக்கிறார். ஈசுவரனுடைய ஒவ்வொரு சக்தியும் இயந்திரததைப்போல் வேலைசெய்து வருகின்றது; அவ்விதமே மனிதனும் தனது கர்மங்களை புத்தி பூர்வமாகச் செய்வதோடு, இயந்திரத்தைப்போலவே நியமத்துடன் செய்ய வேண்டும். இயந்திரத்தின் போக்கை அலக்ஷியம் செய்து, தன் இஷ்டம்போல் செய்வதில் மனிதனுக்கு யாதொரு பெருமையுமில்லை. தனது கடமையை நன்கு ஆராய்ந்து நிர்ணயித்தபின் இயந்திரம்போலவே காரியம் செய்யவேண்டும். கர்மத்தில் ஒட்டாமல் பற்றின்றி இயந்திரத்தைப் போல் பணி செய்வதால் அவன் கவலையற்றிருப்பான். சாவதற்கும் அவன் சித்தமாக விருப்பான். தேகத்தின் நியமத்தின்படி உடல் தன் காலம் வந்ததும் நாசமடையும். ஆனல், அதனுள்ளிருக்கும் ஆத்மா என்றும் தனது நிலை மாறாமலிருக்கும்.

பார்த்தா! களைப்பாறுவதற்கென்று கூடச் சிறிதும் நிறுத்தாமல் நான் என் வேலையைச் செய்யேனாகில், உலகத்தார் எல்லாவழிகளிலும் எனது முறையைப் பின்பற்றத் தொடங்குவார்கள். (23)

நான் என்வேலையைச் செய்யாவிடின், இவ்வுலகம் நாசமடையும்; நான் குழப்பத்திற்குக் காரணமாவேன். இந்த ஜகத்திலுள்ள உயிர்களைக்கொல்லுபவனாவேன். (24)

பார்த்தா! அறிவில்லாதவர்கள் பற்றுடன் கர்மம் புரிவதுபோலவே. அறிஞன் பற்றை ஒழித்து உலகத்தின் நன்மைக்காகத் தொண்டு செய்யவேண்டும். (25)

கர்மத்தில் பற்றுடைய அறிவிலரின் புத்தியை ஞானி கலக்கலாகாது. ஆனால், தான் சமத்துவபுத்தியுடன் சகல கர்மங்களையும் நன்கு செய்துகொண்டு அவர்களையும் எல்லாக் காரியங்களிலும் ஈடு படுத்த வேண்டும். (26)

எல்லாக்கர்மங்களும் இயற்கையின் குணங்களால் செய்யப்படுகின்றன. அகங்காரத்தால் மதியிழந்த மானிடன் நான் செய்கிறேன் என்று எண்ணுகிருன். (27)

குணம், கர்மம் இவ்விரண்டின் ரகஸ்யத்தை அறிந்தவன் 'குணங்கள் மற்ற குணங்களோடு குலாவுகின்றன' என்று சிந்தித்து அவைகளில் பற்றுவைக்க மாட்டான். (28)

குறிப்பு :—மூச்சு விடுதல் முதலிய கிரியைகள் தாமாகவே நடைபெறுகின்றன. அவைகளில் மனிதன் பற்று வைப்பதில்லை. அவனது அங்கங்கள் நோய்பட்ட பொழுதே அவைகளைப் பற்றிக் கவலைப்படுகிருன். இல்லாவிடில், அந்த அங்கங்கள் இருப்பதைக்கூட கவனிப்பதில்லை. இவ்வாறே, சுபாவமான கர்மம் தானகவே நடந்து வந்தால், அதில் பற்று உண்டாகாது. உதார சுபாவமுள்ளவன் தனது உதார குணத்தை அறியான். ஆனல், அவனல் தானம் செய்யாமலிருக்க சாத்தியப்படாது. இத்தகைய பற்றின்மை அப்பியாசத்தாலும் ஈசனருளாலும் கிடைக்கும்.

இயற்கையின் குணங்களால் மயக்கமடைந்த மனிதன், அக்குணங்களால் செய்யப்படும் காரியங்களில் பற்றுள்ளவனாகிறான். இவ்விதம் அறிவில்லாத மந்த மதியுள்ளோரை ஞானியானவன் சஞ்சலம் செய்யக் கூடாது. (29)

ஆத்மானுபவத்தை இலக்காகக் கொண்டு, கர்ம மனைத்தையும் எனக்கு அர்ப்பணம் செய்து, பற்றின்றி 'எனது' என்ற கர்வத்தை விடுத்து, ஆசையை ஒழித்து நீ போர் புரிவாயாக. (30)

குறிப்பு:—உடலிலிருக்கும் காலத்தே, தன் ஆத்மாவை யறிந்து, அது பரமாத்மாவின் அம்சமென்று உணர்வோன் தன்னைச் சேர்ந்த எல்லாவற்றையும் பரமாத்மாவிடம் அர்ப்பணம் செய்துவிடுகிறான். வேலைக்காரன் தன்து எஜமானுடைய பெயரால் காரியஞ்செய்து அதன் பலனை எஜமானனுக்கே அளிப்பது இதற்கு உதாரணம்.

நம்பிக்கை வைத்து, துவேஷத்தைப் போக்கி, எம் மனிதன் இக்கொள்கைவழியே நடக்கின்றானோ அவனும் கர்மத்தின் பந்தத்திலிருந்து விடுபடுகிறான். (31)

இதற்கு மாறாக, எவன் தனது இந்தக் கொள்கையைக் குறைகூறி அதைப் பின்பற்றவில்லையோ அவன் அறிவில்லாத மூடன். அவன் நாச மடைவான் என்பதைத் தெரிந்துகொள். (32)

ஞானியும் தனது இயற்கையை அனுசரித்து ஒழுகுகிறான். மற்ற உயிர்களும் தங்கள் சுபாவங்களை ஒட்டி நடக்கின்றன. இதில் பலாத்காரம் என்ன செய்யும்? (33)

குறிப்பு :—இந்த சுலோகம் இரண்டாவது அத்தியாயத்தின் 61-வது அல்லது 68-வது சுலோகத்திற்கு விரோத மல்ல; சாகும் வரையில் புலன்களை அடக்கிவாழ முயற்சி செய்துகொண்டே இருக்கவேண்டும். ஆனால், அப்பொழுதும் தனது முயற்சி பலிக்காவிட்டால், நிக்கிரகம் அல்லது பலாத்காரம் பயன்படாது. இதில் இந்திரிய நிக்ரகம் நிந்திக்கப்படவில்லை; இயற்கையின் சாம்ராஜ்யமே விளக்கப் பட்டிருக்கிறது. 'இதுவே எனது இயற்கை' என்றுசொல்லிக்கொண்டு, எவனாவது தீங்கு செய்யத் தலைப்பட்டால், அவன் இந்த சுலோகத்தின் பொருளை அறியாதவன். நாம் இயற்கை வழி போவதில்லை. நமது வழக்கங்க ளெல்லாம் இயற்கையன்று. ஆத்மாவின் சுபாவம் மேல் நோக்கிச் செல்லுதலே. ஆகையால், ஆத்மா கீழே விழும் பொழுது அதை நேர்வழி கொண்டுவருதல் நமது கடமை. இதை அடுத்த சுலோகம் தெளிவாகப் புலப் படுத்துகிறது.

இந்திரியங்களுக்கு தங்கள் தங்கள் விஷயங்களின் சம்பந்தத்தால் விருப்பமும், வெறுப்பு முண்டாகின்றன. மனிதன் அப்புலன்களை தன் வசப்படுத்த வேண்டும். இல்லாவிடில் அவைகள் அவனுடைய நற்கதிக்குக் கேடு விளைவிக்கின்றன. (34)

குறிப்பு :—காதின் விஷயம் கேட்டல். காதுக்கினிமையாக இருக்கும்பொழுது அதைக் கேட்பதில் இச்சை, அதாவது விருப்பம் அல்லது ராகமாகும். அதற்கு மாறாக கர்ண கடூரமாக இருப்பதைக் கேட்பதில் வெறுப்பு அல்லது த்வேஷம். 'இது இயற்கை' என்று சொல்லி ராகத்திற்கும் த்வேஷத்திற்கும் வசப்படக் கூடாது.

அவைகளை எதிர்க்கவேண்டும். ஆத்மாவின் சுபாவம் சுகதுக்கத்தால் தீண்டப்படாமை. அந்த சுபாவத்தை மனிதன் மீண்டும் பெறவேண்டும்.

பிறர் தர்மம் இலேசாக இருப்பினும், தன்னுடைய தர்மம் குணத்திற் குறைந்திருந்தாலும், சொந்தக் கடமையே சிறந்ததாகும். சொந்தக் கடமையை இயற்றுவதே மேலானது. மற்றவர் கடமை பயத்தை விளைவிக்கும். (35)

குறிப்பு :—சமாஜத்தில் குப்பை அள்ளுவது ஒரு மனிதனுடைய கடமையாகவும், கணக்கு வைத்துக் கொள்வது மற்றொருவன் கடமையாகவும் இருக்கிறது. கணக்கெழுதுதல் உயர்ந்த வேலையாக நினைக்கப்பட்டாலும் குப்பை யள்ள வேண்டியவன் தனது கடமையை விட்டுவிடின், அவன் தர்ம மிழந்தவனாகிறான். சமாஜத்திற்கும் கேடு விளைகிறது. கடவுள் முன்னிலையில் இவ்விருவரின் தொண்டுகளும் அவர்களின் மனப் பான்மையை அனுசரித்து சீர்தூக்கிப் பார்க்கப் படுகின்றன. வேலைகளின் பெறுமானம் ஒன்றே. இருவரும் பலன்களை ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்யும் மனோபாவத்துடன் தங்கள் கடனை ஆற்றுவாராயின், சமமாகவே மோக்ஷத்திற்கு உரிமை யுடையவராவர்.

அர்ஜுனன் கூறுகிறான் :—

வார்ஷ்ணேயா! தான் இச்சிக்காமலே பலாத்காரமாக மனிதனைத் தீச்செயல்கள் புரிவிக்கும் காரணம் யாது? (36)

ஸ்ரீ பகவான் உரைக்கிறர் :—

அது ரஜோகுணத்திலிருந்து உண்டாவது; அதுவே காமம்; குரோதமும் அதுவே; அதன் வயிறு எப்பொழுதும் நிரம்புவதில்லை. அதுவே கொடிய பாவி. இவ்வுலகத்தில் அதை உன் எதிரியாக அறியக்கடவாய். (37)

குறிப்பு :—நமது உண்மையான சத்துரு உள்ளத்திலிருக்கிறது. அதைக் காம மென்றும் கூறலாம், குரோத மென்றும் சொல்லலாம்.

புகையால் நெருப்பும், அழுக்கால் முகக்கண்ணுடியும், கருப்பையால் கர்ப்பமும் மூடப்பட்டிருப்பது போலவே, காமமென்ற எதிரியால் மெய்யறிவு மூடப்பட்டிருக்கிறது. (38)

கௌந்தேயா ! என்றும் திருப்தியடையாத அனலைப்போன்ற இக்காமம் அழியா நிலையின் சத்துருவாகும். அறிஞனுடைய ஞானம் அதனுல் மூடப்பட்டிருக்கிறது. (39)

இந்திரியங்கள், மனம், புத்தி இவைகள் இவ் விரோதி வசிக்குமிடங்கள். இவைகளின் வாயிலாக அறிவை மூடி, இவ்வெதிரி மனிதனுக்கு மயக்கத்தை உண்டாக்குகின்ருன். (40)

குறிப்பு :—இந்திரியங்களில் காமம் பரவியிருந்தால், மனம் மாசடையும். அதனுல் பகுத்தறிவு குறைந்து, ஞானம் நாசமடைகிறது. இரண்டாவது அத்தியாயம் 62, 64-சுலோகங்களைப் பார்க்க.

பரதரேறே! ஆகையால், முதலில் நீ உன் புலன்களை அடக்கி வசத்தில் வைத்து, ஞானத்தையும், ஆத்மானுபவத்தையும் நாசம் செய்யும் இவ் வெதிரியைத் தாமதமின்றி துரத்திவிடு. (41)

இந்திரியங்கள் நுண்மையான பொருள்கள்; மனம் அவைகளிலும் நுண்ணியது; அதைக் காட்டிலும் புத்தி அதிக நுண்மையுள்ளது. புத்திக்கும் மிகுந்த நுட்பமான பொருள் எதுவோ அதுவே ஆத்மா. (42)

குறிப்பு:—இந்திரியங்களை வசப்படுத்திவிட்டால் சூக்ஷ்மமான காமத்தை வெல்லுதல் எளிதாகும் என்று பொருள்.

நீண்ட புயத்தோனே! இங்ஙனம் புத்திக்கு மேலான ஆத்மாவை அறிந்து, அதனைக் கொண்டு மனத்தை வசப்படுத்தி வெல்லுதற்கரிய காமமென்ற எதிரியைக் கொல்லக்கடவாய்! (43)

குறிப்பு:—மனிதன் தன் உடலுக்குள்ளிருக்கும் ஆத்மாவை அறிவானாகில், மனம் இந்திரியங்களின் வசமில்லாது, அவன் வசப்படும். தன் மனத்தை வென்றவனுக்கு காமம் என்ன செய்யக்கூடும்?

ஓம் தத் ஸத்.

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதையென்னும் உபநிஷத்தில்—அதாவது பிரம்மவித்தையோடு கூடிய யோக சாஸ்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையின் கர்மயோகம் என்ற மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

## 4. ஞானகர்ம ஸந்யாஸ யோகம்



இவ் வத்தியாயத்தில் மூன்றுவது அத்தியாயத்திற் காணப்பட்ட விஷயங்கள் விரித்துக் கூறப்படுகின்றன. வெவ்வேறு விதமான பல் யக்ஞங்களும் வர்ணிக்கப்படுகின்றன.]

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

*அழிவற்ற இந்த யோகத்தை நான் விவஸ்வானுக்கு (சூர்யனுக்கு) உபதேசித்தேன். அவர் மனுவுக்கும், மனு இக்ஷ்வாகுவுக்கும் உபதேசித்தார்.* (1)

*இங்ஙனம் பரம்பரையாகக் கிடைத்து ராஜரிஷிகளால் அறியப்பட்டு வந்த இந்த யோக நெறி நீண்ட காலம் கழிந்ததனால் நஷ்டமடைந்து விட்டது.* (2)

*நீ என்பது பக்தன். இந்த யோகம் மிகச்சிறந்த தத்துவம். ஆனதால் இப்பழமையான யோகத்தை இன்று உனக்கு உரைத்தேன்.* (3)

அர்ஜுனன் கூறுகிறான் :—

*நீங்கள் இக்காலத்தில் பிறந்தவர்கள். விவஸ்வானோ முன்காலத்தவர். நீங்கள் அவருக்கு முன்னால் இதை உபதேசித்தீர்கள் என்று நான் கொள்ளுவது எங்ஙனம் ?* (4)

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

அர்ஜுனா ! எனக்கும் உனக்கும் பல ஜன்மங்கள் கழிந்திருக்கின்றன. அவைகளை நான் அறிவேன். நீ அறியாய். (5)

நான் பிறப்பற்றவனும் அழிவில்லாதவனும் உயிர்களனைத்திற்கும் ஈசனாகவு மிருந்தும், எனது இயற்கையைக் கொண்டு சொந்த மாயாசக்தியால் ஜன்மம் எடுக்கிறேன். (6)

பார்த்தா ! தர்மம் குறையும் காலத்தும், அதர்மம் பெருகும்பொழுதும் அவ்வப்போது அவதரிக்கின்றேன். (7)

நல்லோர்களை ரக்ஷித்து, துஷ்டர்களை நாசம் செய்து, தர்மத்தைப் புத்துயிர் கொடுத்துப் பரிபாலிக்கும் பொருட்டு ஒவ்வொரு யுகத்திலும் ஜன்மம் எடுக்கிறேன். (8)

குறிப்பு :—இவ்விடம் நம்பிக்கை யுள்ளவர்களுக்குத் தேறுதல் கூறுகிறார் ; ஸத்யமும் தர்மமும் என்றும் நிலைநிற்பவை என்னும் வாக்குறுதி அளிக்கிறார். உலகில் அதர்மம் சில வேளைகளில் பரவியபோதினும் முடிவில் தர்மமே வெற்றியடைகிறது. சாதுக்கள் நாசமடையார். ஏனெனில், பொய் நிலைநிற்காது. இதை உணர்ந்த மனிதன் தனது சக்தியில் கர்வங்கொண்டு இம்சை செய்யாதிருக்கக் கடவன் ; தீயவழி செல்லாதிருக்கக் கடவன். நமக்குத் தெரியாமல் ஈசனது மாயை தனது வேலையைச் செய்து தீரும். இதுவே அவதாரம் அல்லது ஈசுவரனுடைய ஜன்மம் என்று கூறப்படுகின்றது. வாஸ்தவத்தில் கடவுள் ஜன்மம் எடுப்பதில்லை.

அர்ஜுனு! இவ்வாறு எனது திவ்ய ஜன்மங்களின் ரகஸ்யத்தையும், என் கர்மங்களின் சூக்ஷ்மத்தையும் அறிவோன் தனது சரீரத்தை விட்டகன்று மறுபிறப்பின்றி என்னை அடைகிருன். (9)

குறிப்பு:—இது எப்படியெனில், கடவுள் சத்தியத்தை வெல்லச் செய்வாரென்ற உறுதியான நம்பிக்கை ஏற்பட்டவுடன், மனிதன் சத்தியத்தை நழுவவிடான்; தைரியத்தைக் கைக்கொள்வான்; துயரத்தைப் பொறுமையுடன் ஏற்றுக்கொள்வான்; தனது என்ற அபிமானம் இல்லாமல், பிறப்பு இறப்பு என்னும் ஸம்ஸார ஸாகரத்திலிருந்து தப்பி, பரம்பொருளைத் தியானித்து அதனிடம் லயமடைவான்.

ஆசை, பயம், கோபம் இவைகளை விலக்கி, என்னைத் தியானித்துச் சரண்புகுந்து, அறிவென்னும் தவத்தால் தூயோரான பல பெரியோர் எனது நிலையைப் பெற்றிருக்கின்றனர். (10)

என்னை எவ்வழியில் ஒருவன் சரண்புகுகின்ருனே, அதற்குத் தகுந்தவாறே நான் அவனுக்குப் பலனைக் கொடுக்கிறேன். பார்த்தா! எச்சமயத்தோனும் என் வழியையே நாடி எனது ஆட்சிக்குட்பட்டிருக்கிருன். (11)

குறிப்பு:—கடவுளின் கட்டளையை எவனும் கடக்கமுடியாதென்று பொருள். விதைப்பதுபோலவே ஒவ்வொருவனும் அறுப்பான். செய்வதுபோலவே பலன் கிடைக்கும். ஈசுவரனுடைய கர்மத்தின் விதியை அதாவது கர்மத்தின் நியமத்தைத் தப்பக்கூடியது ஒன்றுமில்லை. தனது யோக்கியதைக்குத் தகுந்தவாறு நியாயம் கிடைக்கும்.

கர்மத்தின் பயனை விரும்புவோர் இவ் வுலகில் தேவதைகளைப் பூஜிக்கின்றனர். இதனுல் அவர்களுக்கு கர்மத்திலிருந்து கிடைக்கும் பலன் இந்த மனுஷ்ய லோகத்திலேயே சீக்கிரம் கிடைக்கின்றது. (12)

குறிப்பு :—தேவதை என்ருல் விண்ணுலகில் இருக்கும் இந்திரன், வருணன் முதலிய திவ்ய புருஷர்களல்ல. ஈசனுடைய அம்சமான சக்தியே தேவதை என்று கூறப்படுகிறது. இவ்வர்த்தத்தில், மனிதனும் தேவதையே. மேகம், மின்னல் முதலிய மகா சக்திகள் தேவதைகளே. அவைகளை அறிந்து உபயோகிப்பதால் இவ்வுலகில் உடனே பலன் கிடப்பதைக் காண்கிருேம். அந்தப் பலன் ஒரு க்ஷணநேரமே நிற்பது ; ஆத்மாவிற்கு அது சந்தோஷத்தைக் கொடாது. மோக்ஷத்தைக் கொடுப்பதற்கு அதனிடம் சக்தி ஏது ?

குணம், கர்மம் இவைகளின் பிரிவுகளை அனுசரித்து நான்கு வர்ணங்களையும் உண்டாக்கினேன். இவைகளைச் சிருஷ்டித்தவன் ஆனபோதிலும், அழிவில்லாதவன், ஒன்றும் செய்யாதவன் என்று என்னை நீ அறியக்கடவாய் ! (13)

என்னைக் கர்மம் அணுகாது. அதன் பலனில் எனக்கு ஆசை இல்லை. இவ்விதம் என்னை நன்கு உணர்வோன் கர்மத்தின் பந்தத்தில் அகப்படான். (14)

குறிப்பு :—ஏனெனில், மனிதன் கர்மம் செய்துகொண்டே காம மில்லாதவனுக விருப்பதற்கு இதுவே மிகச்சிறந்த உதாரணம். எல்லாக் காரியங்களுக்கும் கர்த்தா கடவுள். நாம் நிமித்த காரணங்கள். இப்படியிருக்க, 'நான் இதைச் செய்பவன்' என்று மனிதன் அபிமானம் கொள்வதற்கு இடமேது ?

இவ்வித முணர்ந்து முன் காலத்தில் மோக்ஷத்தை விரும்பிய நல்லோர் கர்மம் செய்தனர். முன்னோர் எக்காலமும் செய்து வந்திருக்கும் இம்முறைப்படியே நீயும் செய்யக்கடவாய்! (15)

கர்மமென்பது என்ன, அகர்மம் என்பது எது என்ற விஷயத்தில் அறிவாளிகள்கூட மயக்கமுறுகின் றார்கள். அந்தக் கர்மத்தைப்பற்றி உனக்குத் தெளி வாகக் கூறுகின்றேன். அதை அறிந்து தீவினையி னின்று தப்புவாய். (16)

கர்மம், விலக்கப்பட்ட காமம், அகர்மம் இவை களின் பேதங்களை உணர வேண்டும். கர்மத்தின் போக்கு நுட்பமானது. (17)

கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத் தையும் காண்பவனே உலகத்தில் புத்திமானாகக் கொண்டாடப்படுவான். அவனே யோகி; அவன் தனது கர்மத்தைப் பூர்த்தி செய்தவனாவான். (18)

குறிப்பு:—கர்மத்தைச் செய்துகொண்டே தான் கர்த்தா வென்ற அபிமானம் கொள்ளாதவனுடைய கர்மம் அகர்மமாகும். வெளிப்படையாகக் கர்மத்தைத் துறந்தும் மனத்தால் கோட்டை கட்டிக்கொண்டிருப் பவனுடைய அகர்மம் கர்மமாகும். பார்சவாயுவால் பீடிக்கப்பட்டவன் அசைக்கமுடியாத தன் அங்கத்தை முயற்சிசெய்து — அதாவது அபிமானத்துடன் — அசைக்கும்பொழுதே அது சற்று அசையும். இவ் வியாதியால் அவன் தன் அங்கத்தை அசைப்பதின் கர்த்தாவாகி விட்டான். ஆத்மாவின் குணம் அகர்த்தா வாக விருத்தல். எவன் மோகத்தால் விழுங்கப்பட்டு,

தன்னை கர்த்தாவென்று எண்ணுகிறானோ, அவனது ஆத்மாவிற்கு பார்சவநோய் பிடித்தது போலாகும். அச்சமயம் அவன் அபிமானத்துடன் காரியம் செய்கிறான். இம்மாதிரியான கர்மத்தின் போக்கை அறியும் புருஷனை, புத்திமான், யோகி, தன் கடமையைச் செய்வோன், என்று கொண்டாடுகிறார்கள். 'நான் கர்த்தா' என்று எண்ணுபவன் கர்மம், அகர்மம் இவைகளின் பேதத்தை மறந்து தனது சாதனங்களின் நன்மை தீமையைப்பற்றி ஆராய மாட்டான். ஆத்மாவின் போக்கு இயற்கையில் மேல் நோக்குவதால், அறநெறி தப்பிச் செல்லும் பொழுது மனிதனுக்கு அகங்காரம் உண்டாகிறதென்று கூறத்தகும். அபிமானமில்லாத புருஷனுடைய கர்மம் சுபாவமாகவே சாத்வீக குணமுடையதாக விருக்கும்.

எவனது கார்யாரம்பங்கள் காமத்தினாலும், 'நான் கர்த்தா' வென்ற அபிமானத்தாலும் தீண்டப்படாம லிருக்கின்றனவோ அவனுடைய கர்மங்கள் ஞானமாகிற நெருப்பால் சாம்பலாகின்றன. அவனை அறிஞர் பண்டிதன் என்று அழைக்கின்றனர். (19)

கர்மத்தின் பலத்தைத் துறந்தவன் ; எக்காலமும் அகமகிழ்ச்சியுடன் இருப்பவன் ; எதற்காகவும் பிறர் முகம் நோக்காதவன் ; இவ்வித புருஷன் கர்மங்களில் அதிகமாக ஈடுபட்டிருந்தபோதிலும், அவன் ஒன்றும் செய்வதில்லை என்று சொல்லக்கூடும். (20)

குறிப்பு:—அதாவது கர்மத்தின் பலனை அவன் அனுபவிக்க வேண்டி இராது.

ஆசையை விலக்கித் தன் மனத்தை வசப்படுத்தி எல்லாப் பொருள்களையும் விட்டுவிட்டும், சரீரத்தால் மட்டுமே கர்மம் செய்பவன், தனது கர்மத்தால் எவ்வித தோஷத்தையும் அடையான். (21)

குறிப்பு:—அபிமானத்துடன் செய்யப்படும் காரியங்கள் அனைத்தும் எவ்வளவு நல்லனவாக விருப்பினும், மனிதனைக் கட்டுப் படுத்துவனவாகவே இருக்கும். மனதால் ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்யப்பட்டு, அபிமானமின்றிச் செய்யப்படும் கர்மமே பந்தமில்லாததாக இருக்கும். எவனுக்கு 'நான்' என்ற எண்ணம் முற்றிலும் குன்றி சூன்யமாகிவிட்டதோ, அவனது சரீரம் தானே தனது எல்லாக் காரியங்களையும் செய்துகொள்ளும். தூங்கும் மனிதனுடைய சரீரம் தனது காரியங்களைத் தானே செய்கிறது. எவன் கைதியாகி, தன் இஷ்டமின்றி வேலை செய்கிறானோ, அவனது உடலே சகல காரியங்களையும் செய்து கொள்ளுகிறது. எவன் இஷ்டப்பட்டு மனப்பூர்வமாக ஈசுவரனுடைய கைதியாகத் தன்னைச் செய்துகொள்ளுகின்றானோ, அம்மனிதனுடைய சரீரமும் தன் காரியத்தைத் தானே செய்துகொள்ளுகிறது. தான் சூன்யமாகிவிடுகிறான். ஈசுவரனே பிரேரகன் (தூண்டுபவன்) ஆகிறான்.

கிடைத்த லாபத்தைக்கொண்டு சந்தோஷமடைபவன்; சுகதுக்கம் முதலிய இரட்டை நோய்களால் பீடிக்கப்படாதவன்; எதனைக் குறித்தும் வெறுப்பில்லாதவன்; தன் கர்மத்தின் பலன் கிட்டியபொழுது நடுநிலைமை வகித்திருப்பவன்; இவ்வித புருஷன் கர்மத்தைச் செய்துகொண்டும் பந்தத்தில் அகப்படான். (22)

பற்றின்றி, சித்தம் ஞானமயமாகி, முக்தனாய், யக்ஞத்தின் பொருட்டே பணி செய்பவனுடைய கர்மங்களெல்லாம் தாமே அழிவடைகின்றன. (23)

ஹோமம் செய்யும் கர்மமும் பிரம்மம்; ஹோமம் செய்யப்படும் பொருளும் பிரம்மம்; பிரம்ம மயமான அக்னியில் ஹோமம் செய்பவனும் பிரம்மமே. இவ்விதம் கர்மத்துடன் பிரம்மத்தைச் சேர்த்துக் கொள்ளுவோன் பிரம்மத்தையே சேருகிறான். (24)

பல யோகிகள் தேவதைகளைப் பூஜித்து அவ்வழி யக்ஞம் செய்கின்றனர். வேறு பலர் பிரம்மத்தின் ஸ்வரூபமாகிய அக்னியில் யக்ஞக் கிரியைகள் கொண்ட யக்ஞத்தை ஹோமம் செய்கிறார்கள். (25)

மற்றும் பலர் காது முதலிய புலன்களை அடக்கி, இந்திரிய நிக்கிரகமாகிய யக்ஞத்தைச் செய்கின்றனர். சிலர் சப்தம் முதலான இந்திரியங்களின் விஷயங்களை புலன்களாகிய நெருப்பில் ஹோமம் செய்கிறார்கள், (26)

குறிப்பு:—ஒரு பக்கம் காதால் கேட்டல் முதலிய காரியங்களை அடக்குதல்; மற்றொரு பக்கம் இப்புலன்களை உபயோகித்து அதன் விஷயங்களை ஈசுவரனுக்குப் பிரியமுள்ள பஜனை செய்தல் முதலான காரியங்களைச் செய்தல். உண்மையில் இரண்டும் ஒன்றே.

வேறு பலர் தம் இந்திரிய கர்மங்களையும், பிராண கர்மங்களையும், ஞானத்தால் பிரகாசிப்பதாயும், புலன்களை அடக்கும் யோகமாயும் உள்ள அக்னியில் ஹோமம் செய்கிறார்கள். (27)

குறிப்பு :—அதாவது பரமாத்மாவிடம் லயமாகிறார்கள்.

இவ்வாறே சிலர் யக்ஞத்தின் பொருட்டு பொருள் கொடுக்கின்றனர். சிலர் எட்டு அங்கங்களுடைய யோக சாதனத்தைத் தேடுகின்றனர். பலர் அத்யயனம் செய்தும், ஞானத்தைத் தேடியும் யக்ஞம் செய்கின்றனர்; இவ்விதம் கடின விரதங்கள் பூண்டு முயற்சி செய்து வரும் யாவரும் யக்ஞம் செய்பவர்கள். (28)

பலர் பிராணாயாமத்தில் மூழ்கினவர்களாய் அபான வாயுவை பிராண வாயுவில் ஹோமம் செய்கிறார்கள்; பிராண வாயுவை அபானத்தில் ஹோமம் செய்கின்றனர்; பிராண அபான வாயுக்கள் இரண்டையும் நிறுத்துகின்றனர். (29)

குறிப்பு :—பிராணாயாமம் ரேசகம், பூரகம், கும்பகம் என்று மூன்று வகைப்படும். ஸம்ஸ்கிருதத்தில் பிராணவாயு வென்பது குஜராத்தியில் உள்ள அர்த்தத்திற்கு விரோதமானது. இந்த சுலோகத்தில் உள்ள பிராணவாயு உள்ளிருந்து வெளியே விடப்படுவது. நாம் வெளியிருந்து உள்ளே இழுத்துக் கொள்வதை பிராண வாயுவென்று கூறுகிறோம்.

மற்றும் சிலர் தனது உணவைக் குறைத்து இந்திரியங்களைப் பிராணனில் ஹோமம் செய்கிறார்கள். யக்ஞத்தின் மூலம் தமது பாவங்களை நசிக்கச் செய்தவர் அனைவரும் யக்ஞத்தை அறிந்தவர்களே. (30)

கௌரவ சிரேஷ்டனே! யக்ஞம் செய்து மிஞ்சிய அமிர்தத்தை உண்போர் என்றும் அழியாத பிரம்மத்தை அடைவார்கள். யக்ஞம் செய்யாதவர்களுக்கு

இவ் வுலகில் நல் வாழ்க்கை இல்லை. பரலோகம் எங்கிருந்து கிடைக்கும்? (31)

மேற் கூறியவாறு வேதத்தில் பலவித யக்ஞங்கள் வர்ணிக்கப்பட் டிருக்கின்றன. இவைகளெல்லாம் கர்மத்திலிருந்து உண்டாக வேண்டியவை என்று அறியக் கடவாய். இவ்விதம் எல்லாவற்றையும் அறிந்தால் மோக்ஷ மடைவாய். (32)

குறிப்பு:—இவ்விடத்தில் கர்மத்திற்குப் பரந்த பொருள் செய்யப்பட் டிருக்கின்றது. அதாவது உடல், மனம், ஆத்மா இவைகளால் செய்யப்படும் கர்மங்கள். இவ்வித கர்மங்கள் செய்யாமல் யக்ஞமில்லை. யக்ஞமின்றி மோக்ஷமு மில்லை. இவ்வாறு அறிதல்; இதன் பிரகாரம் நடத்தல்; இதுவே யக்ஞத்தை அறிதல் என்று உரைக்கப்படுகிறது. மனிதன் தனது சரீரம், புத்தி, ஆத்மா இவைகளைக்கொண்டு ஈசுவரனைப் பிரீதி செய்வதற்கு—அதாவது உலகத்திற்குத் தொண்டு செய்வதற்காக—கர்மங்களைச் செய்யானாகில் அவன் திருடன் என்பது இந்த சுலோகத்தின் கருத்து. எவன் தனது புத்தி சக்தியை மட்டும் உபயோகித்து, உடல், ஆத்மா இவைகளால் ஒன்றும் செய்யாமல் ஏமாற்றுகிறானோ அவன் பூர்ணமாக யக்ஞம் இயற்றியவனாகான். இந்த சக்திகளைக்கொண்டு தன் கடமையைச் செய்யாமல் அவனால் பரோபகாரம் செய்ய இயலாது. ஆகையால், ஆத்ம சுத்தியின்றி உலக சேவை சாத்தியமில்லை. தொண்டன் தனது சரீரம், புத்தி, ஆத்மா அல்லது அறநெறி பற்றி வாழும் சக்தி, இம் மூன்றையும் சமமாகவே விலாசப்படுத்தி வளர்க்க வேண்டியது கடமை.

பரந்தபா! பொருளால் செய்யப்படும் யக்ஞத்தைக் காட்டிலும், அறிவால் செய்யப்படும் யக்ஞமே உயர்ந்தது. ஏனெனில், ஓ பார்த்தா! கர்மம் ஞானத்தால் முடிவடைகிறது. (33)

குறிப்பு :—பரோபகாரத்தின் பொருட்டுக் கொடுக்கப்படும் பொருள் அறிவுடன் அளிக்கப்படாவிடில் பலவேளை தீமை விளைவிக்கும். இது யாருக்கு அனுபவமில்லை? ஞானத்துடன் சேர்ந்தபொழுதே நல்ல நோக்கத்துடன் செய்யப்படும் காரியங்களும் பிரகாசிக்கின்றன; ஆகையால் வெறுங்கர்மம், ஞானத்தில் ஹோமம் செய்யப்படவேண்டும்.

தத்துவங்களை அறியும் ஞானிகளுக்குப் பணிவிடை செய்து, வணங்கி விவேகத்துடன் பன்முறை கேட்டு நீ இதை உணர வேண்டும். உனது ஞான தாகத்தை அவர்கள் திருப்தி செய்வார்கள். (34)

குறிப்பு :—ஞானத்தை யடைவதற்கு மூன்று நியந்தனைகள் உண்டு. வணக்கம், விரும்பிக்கேட்டல், பணிவிடை செய்தல். விவேகத்தோடு கூடிய வணக்கத்தை பிரணிபாதம் என்று கூறப்பட்டிருக்கிறது; அடிக்கடி கேட்டல் பரிபிரச்னம்; சேவையில்லாத வணக்கம் முகஸ்துதியில் முடிகின்றது; தவிர, தேடுலொழிய ஞானம் கிட்டாது. ஆனதால், தன் மனதில் பதியும் வரை சீடன் தனது குருவிடம் வணக்கத்துடன் விடாமல் கேட்டுத் தெரிந்துகொள்வதே ஞானத்தின் விருப்பத்திற்கு அடையாளம். இதற்கு நம்பிக்கை இன்றியமையாதது. நம்பிக்கை யில்லாதவரிடம் உண்மையான வணக்கம் உண்டாகாது. அப்பொழுது அவருக்கு எவ்வாறு பணிவிடை செய்ய முடியும்?

பாண்டவா! இந்த ஞானத்தை அடைந்த பின் உனக்கு இவ்வித மோகம் ஏற்படாது. இந்த ஞானத்தினுல் எல்லா உயிர்களையும் உன் ஆத்மாவிலும், என்னிடத்திலும் காண்பாய். (35)

குறிப்பு :—பிண்டத்தைப் போலவே பிரமாண்டத்திலும் என்று சொல்வதன் பொருள் இதுவே. ஆத்ம தர்சனம் கூடியகாலத்தில் தன் ஆத்மாவுக்கும் பிறர் ஆத்மாக்களுக்கும் பேதம் தோன்ருது.

எல்லாப் பாவிகளிலும் கொடிய பாவியாக விருப்பினும், ஞானமாகிய படகின் உதவியால் சகல பாவங்களையும் கடந்து செல்வாய். (36)

அர்ஜுனு! பெரிதும் மூட்டப்பட்ட நெருப்பு விறகை எரித்துச் சாம்பல் செய்வதுபோல் ஞானமாகிய தீ எல்லாக் கர்மங்களையும் சாம்பலாகச் செய்கின்றது. (37)

இவ் வுலகில் ஞானத்திற்குச் சமமான தூய்மை வாய்ந்தது யாதொன்று மில்லை. யோகத்தில்—அதாவது சமத்துவத்தில்—பூர்த்தி யடைந்தவன் தானுகவே கொஞ்சகாலத்தில் இந்த ஞானத்தைப் பெறுவான். (38)

சிரத்தையுடன் கூடினவன் ; கடவுளைச் சரண் புகுந்தவன் ; புலனை அடக்கியவன் ; இவ்வித புருஷன் ஞானம் அடைகிருன் ; ஞானம் பெற்றவுடன் பரம சாந்த நிலை எய்துகிருன். (39)

ஞானமும், சிரத்தையு மின்றி ஐயத்திலாழ்ந்தவன் நாச மடைகிருன். சந்தேகத்தால் சூழப்பட்டவனுக்கு இவ்வுலகமு மில்லை, பரலோகமு மில்லை ; சுகமும் கிடைக்காது. (40)

தனஞ்ஜய! சமத்துவ மென்னும் யோகத்தால் கர்மங்களை—அதாவது கர்ம பலன்களைத் துறந்து, ஞானத்தால் ஐயத்தைக் களைந்து ஆத்மாவைக் காண் பவனைக் கர்மம் கட்டுப்படுத்துவ தில்லை. (41)

பார்த்தா! ஆகையால் உன் உள்ளத்தில் அறியா மையின் காரணமாக உண்டாயிருக்கும் ஐயத்தை ஆத்ம ஞான மென்ற வாளால் வெட்டி யொழித்து யோகமென்னும் சமத்துவத்தை ஏற்று எழுந்து நிற்கக் கடவாய். (42)

ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில் —
அதாவது பிரம்ம வித்தையோடு கூடிய யோகசாஸ்தி
ரத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையின் ஞான கர்ம
ஸந்யாஸ யோகம் என்ற
நான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

---

# 5. கர்ம ஸந்யாஸ யோகம்



[கர்ம யோகமின்றி கர்ம ஸந்யாஸம் இல்லை; உண்மையில் இரண்டும் ஒன்றே என்று இவ் வத்தியாயத்தில் கூறப்படுகிறது.]

அர்ஜுனன் கூறுகிறன் :—

கிருஷ்ணு! கர்ம யோகம், கர்ம ஸந்யாஸம் இரண்டையும் புகழ்கிறீர்கள். இவ்விரண்டில் மேலானது எது? இதை நன்கு நிச்சயித்து எனக்கு உரைக்க வேண்டும். (1)

ஸ்ரீ பகவான் சொல்லுகிறர் :—

கர்மத்தைத் துறப்பது, கர்மத்தை யோக முறையில் செய்வது, இவ்விரண்டும் மோக்ஷத்தைக் கொடுப்பனவே இவைகளில் கர்ம ஸந்யாஸத்தைக் காட்டிலும் கர்ம யோகமே சிறந்தது. (2)

விருப்பு, வெறுப்பு இவ்விரண்டும் இல்லாதவன் நித்ய ஸந்யாஸி யென்று அறியக்கடவாய். சுகதுக்கம் முதலிய இருவினைகளிலிருந்து விடுதலை பெற்றவன் எளிதில் பந்தத்திலிருந்து விலகுகிறன். (3)

குறிப்பு:—ஸந்யாஸத்திற்கு விசேஷ லக்ஷணம் கர்மத்தை விட்டுவிடுவ தன்று. இருவினைகளுக்கு எட்டாத நிலை அடைவதே யென்பது இதன் பொருள். கர்மம் செய்து கொண்டும் ஒரு மனிதன் ஸந்யாஸியாக

விருக்கலாம். மற்ருருவன் ஒரு வேலேயும் செய்யா திருந்தும் மித்யாசாரனுக விருத்தல் கூடும். மூன்ரு வது அத்தியாயம் 6-ம் சுலோகம் பார்க்க.

ஸாங்க்யம், யோகம்—அதாவது ஞானமும், கர்ம மும் — இவ்விரண்டும் ஒன்றிற்கொன்று முரணுன பொருள்களென்று அறிவில்லாதவரே கூறுவர். பண்டி தர்கள் அவ்வாறு உரைக்கமாட்டார்கள். ஏதாவது ஒன்றில் ஸ்திரமாக விருப்பவன் இரண்டு முறைகளின் பலன்களேயும் அடைகிருன். (4)

குறிப்பு :—ஞானயோகியானவன் உலக சேவை செய்வதா லுண்டாகும் கர்மயோக பலத்தைத் தனது நியமத்தால் பெறுகிருன். கர்மயோகியோ தனது பற்றின்மையின் காரணமாக கர்மம் செய்துகொண்டும், ஞானயோகி யின் சாந்தியை எளிதில் அனுபவிக்கிருன்.

ஸாங்க்ய நெறியைச் சார்ந்தவன் எப்பதம் சேரு கிருனே அதையே யோகியும் பெறுகிருன். ஸாங்க்ய மும். யோகமும் ஓர் முகப்பட்டவை என்று காண் பவனே அறிஞன். (5)

பெரும் புயத்தோனே! கர்மயோகமின்றி கர்ம ஸந்யாஸம் இலகுவில் சாத்தியமாகுவதில்லே. ஆனுல் சமத்துவ புத்தியுள்ள முனிவன் சீக்கிரத்தில் மோக்ஷ மடைகிருன். (6)

யோகத்தைக் கைப்பற்றி, இருதயத்தைத் தூய் மைப்படுத்தி தன் மனத்தையும் இந்திரியங்களேயும் தன் வசப்படுத்தி உயிரனேத்தையும் தன்னேப்போலவே கருதும் மனிதன் கர்மத்தைச் செய்துகொண்டும் அதனுல் தீண்டப்படாமல் விலகி நிற்கிருன். (7)

பார்த்தும், கேட்டும், தொட்டும், நுகர்ந்தும், உண்டும், நடந்தும், உறங்கியும், மூச்சுவிட்டும், பேசியும், துறந்தும், எடுத்தும், கண்ணைத் திறந்தும், மூடியும் இவ்வாறு பல கர்மங்கள் செய்துகொண்டே உண்மை யறிந்த யோகி தன் புலன்கள் தம் காரியத்தைச் செய்து வருகின்றனவென்று உணர்ந்து 'நான் ஒன்றும் செய்வதில்லை' என்று அறிகிறான். (8-9)

குறிப்பு:—அபிமான முள்ளவரையில் இவ்விதப் பற்றில்லா நிலை கிடைக்காது. ஆகையால், சிற்றின்பத்தில் அவாக் கொண்ட மனிதன், 'நான் விஷயபோகங்களை அனுபவிக்கவில்லை; எனது இந்திரியங்களே தம் காரியங்களைச் செய்கின்றன' என்று கூறித் தப்பமுடியாது. இப்படி அர்த்தத்தை அநர்த்தமாகச் செய்வோன் கீதையின் கருத்தை உணரான்; தர்மத்தையும் அறியான், இவ்விஷயத்தை அடுத்த சுலோகம் தெளிவாக்கும்.

கர்மங்களைப் பிரம்மத்தினிடம் அர்ப்பணம் செய்து, பற்றை ஒழித்துத் தன் கடமையைச் செய்பவன் தாமரை இலைமேல் நீர்த்துளி ஒட்டாம லிருப்பது போல், பாபத்தினால் தீண்டப்படான். (10)

யோக நெறிபற்றி ஒழுகுவோர், பற்றில்லாமல் ஆத்ம சுத்தியின் பொருட்டு உடல், மனம், புத்தி, இந்திரியங்கள் இவைகளால் கர்மம் செய்கின்றனர். (11)

சமபாவ முள்ளவன் கர்ம பலத்தைத் துறந்து பரம சாந்தியடைகிறான். ஸ்திர புத்தியின்றி ஆசையால் வாட்டப்படும் புருஷன் பலன்களாகிய வலையில் சிக்கிப் பந்தத்தில் அகப்பட்டுக் கொள்ளுகிறான். (12)

புலன்களை அடக்கிய மனிதன் எல்லாக் காரியங்களையும் மனத்தால் தியாகம் செய்து ஒன்பது துவாரங்கள் கொண்ட உடலாகிய பட்டணத்தில் வசித்துக் கொண்டிருக்கும் காலத்தும் ஒன்றும் செய்வதில்லை, எதையும் செய்விப்பது மில்லை. (13)

குறிப்பு :—இரண்டு மூக்கு துவாரங்கள், இரண்டு காது, இரண்டு கண்கள், மலத்தைக் கழிக்கும் ஸ்தானங்கள் இரண்டு, வாய் இவை முக்கிய துவாரங்கள். இவ்விதமே தோலின் கணக்கில்லாத ஓட்டைகள் உடலின் கதவுகள் ; இவ்வாயில்களைக் காப்போன் இவைகளின் வழி வருவதற்கும் வெளியில் போவதற்கும் அதிகார முள்ளவற்றையே வரப்போகவிட்டால், இப்போக்குவரத்து நடந்துகொண்டிருந்தும் அவனுக்கு எவ்வித பொறுப்பு மில்லை ; அவன் கேவலம் ஓர் சாக்ஷியே. இதனுல் அவன் செய்வது மில்லை, செய்விப்பது மில்லை.

ஜகத்தின் நாயகன், கர்மத்தைச் செய்விப்பதில்லை, தாமே செய்வதுமில்லை, கர்மத்தைப் பலத்தோடு இணைப்பது மில்லை, இயற்கை ஒன்றே இவ்வனைத்தையும் செய்கின்றது. (14)

குறிப்பு :—ஈசுவரன் கர்த்தாவன்று. கர்மத்தின் நியமம் மாறுதல் அடையாதது ; தடுக்ககூடாதது ; எவன் எவ்விதம் செய்கின்றுனோ, அவன் அதற்கேற்றவாறே அனுபவிக்கிறுன். இதில் ஈசுவரனுடைய தயவும், நியாயமும் விளங்குகின்றன. மாசற்ற நியாயத்தில் குறைவற்ற கருணையும் அடங்கியிருக்கின்றது. நியாயத்திற்கு விரோதமாக விருக்கும் கருணை, கருணையன்று ;

கொடுமையே. ஆனால், மனிதன் முக்காலத்தையும் அறிய வல்லவனல்லன். ஆதலால் அவனுக்கு தயை-அதாவது பொறுமையே — நியாயமாகும். அவன் எக்காலமும் தானே நியாயத்திற்குப் பாத்திரனாகி தயைக்காகக் கெஞ்சவேண்டி யிருக்கிறது. ஆகையால் பொறுமையின் மூலமாகவே பிறருக்கு நியாயம் செய்யவேண்டும். பொறுமை வளர வளர முடிவில் அகர்த்தா—யோகி—சம புத்தியுள்ளவன்—கர்மத்தில் திறமையுள்ளவன்— ஆகிறான்.

ஈசுவரன் எவனுடைய பாபத்தையோ, புண்யத்தையோ தன்பேரில் ஏற்றுக்கொள்ளுவதில்லை. அறியாமையால் ஞானம் மூடப்பட்டு, இவ்வுலகம் மோகத்தின் வலையில் அகப்படுகிறது. (15)

குறிப்பு :—அறிவின்மையால் 'நான் செய்கிறேன்' என்று எண்ணிச் செய்யும்பொழுது மனிதன் கர்மபந்தத்தில் வீழ்கிறான். தவிரவும், தனக்குக் கிடைக்கும் நல்ல அல்லது கெட்ட பலன்களை ஈசுவரன் தலையில் போடுகிறான். இது மோக வலை.

எவனுடைய அஞ்ஞானம் மெஞ்ஞானத்தால் நாசம் செய்யப்படுகிறதோ, சூரியனைப்போல் ஜோதி மயமான அந்த ஞானம் அவனுக்குப் பரம்பொருளைக் காட்டுகின்றது. (16)

ஞானத்தால் தனது பாபங்களைப் போக்கடித்தவன், ஈசுவரனைத் தியானம் செய்பவன், பிரம்ம மயமாகி அதிலேயே நிலைபெற்றிருப்பவன், அதையே தனது சகல சம்பத்தாக நினைப்பவன், இவ்வித மனிதனே மோக்ஷத்தை அடைகிறான். (17)

வினயத்துடன் கூடிய அறிஞனான பிராம்மண னிடத்தும், பசுவினிடத்தும், நாய் மாமிசத்தை உண் ணும் மனிதனிடத்தும், ஞானி சமபாவ முள்ளவனாக இருப்பான். (18)

குறிப்பு :—இவர்களெல்லோருக்கும் அவர்களின் தேவைக் குத் தகுந்தபடி தொண்டு புரிகிறான் என்று பொருள் ; பிராம்மணனையும் சண்டாளனையும் ஒரே சமமாகக் கருதுவது எவ்விதமென்பதற்கு உதாரணம் :—பிராம் மணனைப் பாம்பு கடித்தால் அவனுடைய காயத்தி லுள்ள விஷத்தை உறிஞ்சி எப்படி அவனைப் பிரியத் துடன் காப்பாற்ற முயல்வானோ, சண்டாளனைப் பாம்பு கடித்தபொழுதும் அவனுக்கும் ஞானியான வன் அவ்வாறே தொண்டு செய்வான்.

சமநிலை பெற்ற மனத்தோன் இவ்வுடலில் இருந்த வண்ணமே ஸம்ஸாரத்தை வென்றவனாகிறான். பிரம் மம் களங்கமற்ற சமநிலை யுள்ளது. ஆதலால் அவன் பிரம்மத்தில் நிலைபெறுகிறான். (19)

குறிப்பு :—எவ்விதம் எதைப்பற்றி சிந்திக்கிறானோ மனிதன் அப்படியே ஆகிறான். ஆகையால் சமத்துவத்தைச் சிந்தனைசெய்து, மாசற்றவனாய் சமத்துவ சொரூப மான தோஷமில்லாத பிரம்மத்தை அடைகிறான்.

எவனது புத்தி ஸ்திரநிலை பெற்றதோ, மோகத்தை ஒழித்தவன் எவனோ, எவன் பிரம்மத்தை அறிந் தவனோ, அந்தப் பிரம்மத்தையே சரண்புகுந்தவன் எவனோ, அவன் தனக்கிஷ்டமான பொருளை அடைந்து விட்டதால் மகிழ்ச்சி யடையான் ; கஷ்டத்தை யடைந்ததால் துயரப்படான். (20)

வெளியுள்ள விஷயங்களில் பற்றுவைக்காது தனது உள்ளத்தில் அகமகிழ்ச்சி யடையும் புருஷன் பிரம்மத்தைச் சரணமடைந்தவனைப் போலவே என்று மழியாத ஆநந்தத்தை அனுபவிக்கிறான். (21)

குறிப்பு :—தன் உள்ளத்தை நோக்குபவன் ஈசுவரனைப் பார்க்கிறான். அவனுக்கே பிரம்மானந்தம் பலிக்கும். விஷயங்களில் பற்றின்றி கர்மம் புரிவதும் பிரம்ம சமாதியில் ஆநந்தமடைவதும் வெவ்வேறான காரியங்க ளன்று, ஒரு காசின் இருபக்கங்கள் போல் ஒரே வஸ்துவின் இரு தோற்றங்கள்.

கௌந்தேயா ! வெளிப் பொருள்களால் உண்டாகும் போகம் நிச்சயமாய் துக்கங்களுக்குக் காரணமாகும். அவைகளுக்கு ஆதியும் அந்தமும் உண்டு. அறிஞன் அவைகளில் மனத்தைச் செலுத்தான். (22)

சாவதற்கு முன்னமே இந்தத் தேகத்தில் காமத்தையும் குரோதத்தையும் அடக்கியாளும் ஆற்றல் பெறும் மனிதனே சமத்துவத்தை அடைந்து சுகம் பெறுகிறான். (23)

குறிப்பு :—உயிர் போனபின், சரீரத்திற்கு விருப்பும் வெறுப்பும் எவ்வித மில்லையோ, சுகதுக்கமும் இல்லையோ, அவ்வாறே உயிருட னிருக்கும்பொழுதும் பிணத்திற்குச் , சமானமாக — ஜடப்பொருள்களைப் போல்-தேகத்தில் பற்றற்று இருப்பவன் ஸம்ஸாரத்தை ஒழித்து உண்மையான இன்பத்தைப் பெறுகிறான்.

உள்ளத்தில் ஆனந்தமும், இருதயத்தில் சாந்தியும் கூடி ஆத்ம ஞானத்தை அடைந்தவன் பிரம்மத்தின்

தன்மை பெற்று, யோகியாகிப் பிரம்ம நிர்வாண சுகத்தை அடைகிருன். (24)

தீச்செயலற்று, ஐயங்களொழிந்து, மனத்தைத் தன் வசப்படுத்தி எல்லா உயிர்களுக்கும் நன்மை புரிவோன் பிரம்ம நிர்வாண மடைகிருன். (25)

தன் சொருபத்தை உணர்ந்து, காமத்தையும் குரோதத்தையும் வென்று, மனத்தை வசப்படுத்திய முனிவர் பிரம்ம நிர்வாண சுகத்தால் சூழப்படுகின்றனர். (26)

வெளி உலகத்திய போகங்களைத் தள்ளிவிட்டு, பார்வையைப் புருவங்களின் நடுவில் நிறுத்தி, மூக்கு வழி புகுந்து வெளிவரும் பிராண, அபான வாயுக்களின் போக்குகளைச் சமமாகச் செய்து, இந்திரியங்கள், மனம், புத்தி இவைகளைத் தன் வசப்படுத்தி, இச்சை, பயம், கோபம் இவைகளை விலக்கி, மோக்ஷத்தை நாடி நிற்கும் முனிவன் எக்காலமும் மோக்ஷ நிலையில் இருப்பான். (27-28)

குறிப்பு :—பிராணவாயு உள்ளிருந்து வெளியே போவது, அபானவாயு வெளியிருந்து உள்ளே போவது; இந்த சுலோகத்தில் பிராணுயாமம் முதலிய யோக கிரியைகள் ஆதரிக்கப்படுகின்றன. பிராணுயாமம் முதலிய வெளிச் செய்கைகள், சரீரத்தைச் சீர்படுத்தி பரமாத்மா வசிப்பதற்கு உரிய கோயிலாகச் செய்வதில் உபயோகப்படுகின்றன. போகிக்கு தேகப்பயிற்சியாலாகும் பயன், யோகிக்கு பிராணுயாமத்தால் கிடைக்கிறது. தேகப்பயிற்சி முதலியவை போகிக்குத் தனது இந்திரியங்களின் உணர்ச்சிகளைக் கூர்மையாகச் செய்

வதில் சகாயம் செய்கின்றன. பிராணுயாமம் முதலி யவை யோகியின் உடலை நோயின்றித் திடமாகச் செய்வதுடன் சாந்தநிலை அடைவதற்கும் உதவி புரி கின்றன. இந் நாட்களில் பிராணுயாமம் முதலிய விதிகளைச் சிலரே அறிவார்கள். அவர்களிலும், அவை களை நல்ல உபயோகம் செய்பவர் மிகச் சிலரே. எவ னுக்குத் தனது இந்திரியங்கள், மனம், புத்தி இவை களின்பேரில் வெற்றி யுண்டாகவில்லையோ, எவனுக்கு மோக்ஷத்தில் அளவற்ற ஆசையோ, எவன் விருப்பை யும் வெறுப்பையும் ஒழித்துப் பயத்தை அகற்றிவிட் டானே, அவனுக்கே பிராணுயாமம் முதலியவை பயன் பட்டு உதவும். உள்ளத் தூய்மை யில்லாதவனுடைய பிராணுயாமம் முதலிய அனுஷ்டானங்கள் அவனைப் பந்தம் செய்ய சாதனங்களாகி மோகக் கிணற்றில் அதிக ஆழத்தில் கொண்டுபோய் விடும். அப்படியே செய்கின்றன வென்பது பலருடைய அனுபவம். இக் காரணத்தால் யோகீந்திர ரான பதஞ்சலி, யமம், நிய மம் முதலியவைகளுக்கு முதல் ஸ்தானம் கொடுத்து அவைகளின் வழியாக மோக்ஷத்தை அடைய விரும்பு வோனுக்கு உதவிகளாக பிராணுயாமம் முதலிய வற்றைக் கருதி யிருக்கின்ருர். யமம் ஐந்து; அஹிம்சை, சத்தியம், பிறர்பொருளை விரும்பாதிருத் தல், பிரம்மசர்யம், பிறர்முகம் நோக்காதிருத்தல். நியமம் ஐந்து; சௌசம், சந்தோஷம், தவம், வேதாத் தியயனம், கடவுள் வணக்கம்.

யக்ஞத்திற்கும் தவத்திற்கும் யஜமானனும், இவ் வுலகங்க ளெல்லாவற்றிற்கும் மகேசுவரனும், உயி

ரணத்தையும் ரக்ஷிப்பவனுமான என்னை யறிந்து, முனிவன் சாந்தியடைகிறான். (29)

குறிப்பு:—இவ் வத்தியாயத்தின் 14, 15 முதலிய சுலோகங்களுக்கு இந்த சுலோகம் விரோதமென்று நினைக்கலாகாது. ஈசுவரன் சர்வ சக்திமானாக விருப்பதால், கர்த்தாவும் அகர்த்தாவும் அவனே; அனுபவிப்பவனும், விலகியிருப்பவனும் அவனே; மற்ற விதங்களில் கூறப்படுபவனும், அவற்றிற்கு மாறாக விருப்பவனும் அவனே. அவன் வர்ணிக்கத் தகாதவன், மனித மொழிக் கெட்டாதவன்; ஆகையால் அவனிடத்தில் பரஸ்பரம் விரோதமான குணங்களையும் சக்திகளையும் கற்பித்து மனிதன் அவனை அறிய முயலுகிறான்.

ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பகவத்கீதை என்ற உபநிஷத்தில் அதாவது
பிரம்ம வித்தையுடன் கூடிய யோக சாஸ்திரத்தில்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையின் கர்ம ஸந்யாஸ யோகம்
என்ற ஐந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

# 6. தியான யோகம்



இவ் வத்தியாயத்தில் யோக சாதனத்திற்கு— அதாவது சமத்துவம் அடைவதற்கு பல முறைகள் கூறப்படுகின்றன.]

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

*கர்ம பலத்தில் பற்றில்லாமல் எம்மனிதன் தனக்குறிய கர்மத்தைச் செய்கிறானோ அவனே ஸந்யாஸி; அவனே யோகி; தனது அக்நியையும், குலக் கிரியைகளையும் துறப்பவன் இரண்டு மல்லன்.* (1)

குறிப்பு :—*அக்நி யென்பது எல்லா சாதனங்களையும் குறிக்கிறது. அக்நியின் வழியாக ஹோமம் செய்யப்படும் பொழுது நெருப்பின் அவசியம் ஏற்படுகிறது. இந்த யுகத்தில் ராட்டினம் உலக சேவையின் சாதனமாக விருக்கிற தென்று நினைத்தால் அதை விட்டு விடுவதால் ஒருவன் ஸந்யாஸி யாகமாட்டான்.*

*பாண்டவா! எதை ஸந்யாஸமென்று உரைக்கிறார்களோ அதை யோகமென்று அறியக்கடவாய். மனதில் உதிக்கும் இச்சைகளைத் துறக்காமல் எவனும் யோகி ஆக முடியாது.* (2)

*யோகத்தை அடைவதற்குக் கர்மம் சாதனம்; அதைப் பெற்றவனுக்கு சாந்தியே சாதனம்.* (3)

குறிப்பு :—எவனுக்கு ஆத்ம சுத்தி உண்டாய் விட்டதோ, எவன் சமத்துவ புத்தி அடைந்தானோ, அவனுக்கு ஆத்ம தரிசனம் எளிதில் கிடைக்கிறது. யோக நிலை பெற்றவன் உலக நன்மைக்குப் பணிசெய்ய வேண்டிய தில்லை யென்பது இதற்குப் பொருள் அன்று. உலக நன்மைக்காகக் கர்மம் புரியாமல் அவன் ஜீவித்திருக்க முடியாது. தொண்டு புரிதல் அவனுடைய இயற்கை யாகிறது. வெளித் தோற்றத்திற்காக அவன் ஒன்றும் செய்வதில்லை. இதை அத்தியாயம் 3, 4-வது சுலோகம், அத்தியாயம் 5, 2-வது சுலோகங்களுடன் சேர்த்துப் படிக்கவும்.

மனிதன் எப்பொழுது புலன்களின் விஷயங்களில் அல்லது கர்மங்களில் பற்றை அறுத்து எல்லா இச்சைகளையும் ஒழிக்கின்றானோ அப்பொழுது அவன் யோக நிலை பெற்றவன் என்று கூறப்படுவான். (4)

தனது ஆத்மாவால் தன் ஆத்மாவை உயர் வழி செல்லும்படி செய்ய வேண்டும்; இழி வழியில் செல்ல விடக்கூடாது. ஆத்மாவே தனக்கு பந்துவாகக் கூடும்; ஆத்மாவுக்கு ஆத்மாவே எதிரியும் ஆகலாம். (5)

தனது சக்தியால் மனத்தை வென்றவனுக்குத் தன் ஆத்மா பந்துவாகும். எவன் அவ்விதம் மனத்தை அடக்கவில்லையோ அவன் தனக்கே எதிரி போல் நடந்து கொள்ளுகிறான். (6)

மனத்தை வென்று பூர்ண சாந்தி அடைந்தவனுடைய ஆத்மா சீதோஷ்ணம், சுக துக்கம், மான அவமானம் இவைகளில் ஒரேவித மனோ பாவத்துடன் இருக்கும். (7)

ஞானத்தாலும், அனுபவத்தாலும் திருப்தி யடைந்தவன்; புலன்களை அடக்கியவன்; மண் கல், தங்கம் இவைகளை ஒரேவிதமாக நோக்குவோன்; ஈசுவரனைச் சரண் புகுந்தவன்; இவ்வித புருஷனை யோகி யென்று கூறுவார்கள். (8)

தனக்கு நன்மை விரும்புவோனையும், நண்பனையும், சத்துருவையும், பக்ஷபாத மில்லாதவனையும், இரண்டு கக்ஷிக்கும் நன்மை கோருவோனையும், துவேஷமுள்ளவனையும், பந்துவையும், சாதுவையும், பாவியையும் சமானமாக நினைப்பவனே சிரேஷ்ட மனிதன். (9)

சித்தத்தை ஸ்திரப்படுத்தி, வாசனைகளையும் பொருள்களையும் தியாகம் செய்து, தனிமையாக ஓர் ஏகாந்தமான விடத்தில் வசித்துக்கொண்டு யோகியானவன் தன் ஆத்மாவைப் பரமாத்மாவுடன் சேர்க்க வேண்டும். (10)

பரிசுத்தமான விடத்தில் தர்ப்பைப்புல், மான் தோல், துணி இவைகளை ஒன்றின்மேல் ஒன்று பரப்பி அதிகத் தாழ்மையும், உயரமும் இல்லாத ஸ்திரமான ஆஸனத்தில் அமர்ந்து, மனத்தை ஓர் வழிப்படுத்தி, புலன்களை வசமாக்கி ஆத்ம சுத்தியின் பொருட்டு யோகம் செய்யவேண்டும். (11-12)

முதுகு, கழுத்து, தலை இவைகளை நேராகவும் அசைவின்றியும் வைத்துக்கொண்டு இங்குமங்கும் பார்க்காமல் தனது மூக்கு நுனியில் பார்வையை நிறுத்திப் பூர்ண சாந்தியுடன், பயமின்றி, பிரம்மசர்யத்தை நழுவவிடாது, மனத்தை அடக்கி என்னிடம் சரண் புகுந்த யோகி என்னைத் தியானம் செய்துகொண்டே உட்கார்ந்திருப்பான். (13-14)

குறிப்பு:—மூக்கு நுனியென்று கூறியதன் அபிப்பிராயம் புருவங்களுக்கு நடுபாகம். அத்தியாயம் 5. 27 - வது சுலோகத்தைப் பார்க்கவும். பிரம்மசாரி விரதமென்பது வீர்யத்தைக் கட்டுவதுமட்டு மல்ல. அத்துடன் பிரம்மத்தை அடைவதற்கு வேண்டிய அஹிம்ஸை முதலிய எல்லா விரதங்களும் அதில் அடங்கி யிருக்கின்றன.

இவ்வாறு தன் மனத்தை அடக்கி யாளும் யோகி தன் ஆத்மாவைப் பரமாத்மாவுடன் பிணைத்து என்னை அடைவதாலுண்டாகும் மோக்ஷ மென்னும் பரம சாந்த நிலை எய்துகிறான். (15)

அர்ஜுனா! மிதமிஞ்சி உண்பவனுக்கு இந்த யோக நிலை கிட்டாது. அதிக உபவாச மிருப்பவனுக்கும் அது கிடைக்காது. அவ்விதமே மிதமிஞ்சித் தூங்குபவனுக்கும், அளவுக்குமேல் விழித்திருப்பவனுக்கும் அது கைகூடாது. (16)

தனது உணவிலும், இன்புறுவதிலும், மற்ற கர்மங்களிலும், தூங்கி விழிப்பதிலும் அளவுடன் இருப்பவனுடைய யோகம் துயரத்தை விலக்கும். (17)

மனம் எப்பொழுது தன் வழிபட்டு ஆத்மாவில் ஸ்திரமாக விருக்கின்றதோ, மனிதன் தனக்கு இஷ்டமுள்ள பொருள்களின் நடுவில் எப்பொழுது விருப்பமின்றி அமர்ந்திருக்கின்றானோ, அப்பொழுதே அவன் யோகி யென்று அழைக்கப்படுகிறான். (18)

கலங்கா மனத்துடன் ஆத்மாவைப் பரமாத்மாவுடன் சேர்க்க முயன்றுவரும் யோகியின் நிலை காற்

றில்லாத இடத்தில் அசைவற்றிருக்கும் விளக்கை ஒத்திருக்குமென்று சொல்லப்பட்டிருக்கிறது. (19)

எப்பொழுது யோகத்தைப் பின்பற்றித் தன் மனத்தை அடக்கி சாந்தி அடைவானோ; ஆத்மாவால் ஆத்மாவை யறிந்து அவ் வாத்மாவிலேயே இன்புறுவானோ; இந்திரியங்களுக் கெட்டாது புத்தியா லுணரக்கக்கூடிய ஆனந்தத்தை எப்பொழுது அனுபவிப்பானோ; எந்நிலையிலிருந்து மூலதத்துவத்தை யடைந்து சஞ்சல மற்றிருப்பானோ; எதை யடைந்தவுடன் மற்ற எந்த லாபத்தையும் பொருட்படுத்தானோ; எதில் ஸ்திரமாக விருப்பின் பெருந் துக்கங்களால் மனக் கலக்க முறுனோ; துயரத்தின் லேசமு மில்லாத அந்நிலையே யோகமென்று அறியக்கடவாய். இந்த யோகத்தைத் தளர்ச்சி யடையாமல் உறுதியுடன் தேடவேண்டும். (20-21-22-23)

சங்கல்பத்தால் (இச்சா சக்தியால்) உண்டாகும் எல்லாக் கர்மங்களையும் முழுதும் துறந்து, மனத்தால் புலன்களை எல்லாப் பக்கங்களிலும் நன்றாகக் கட்டுப்படுத்தி, கலங்கா மதியுடன் யோகியானவன் படிப்படியாக அதிக சாந்தி பெறவேண்டும்; மனத்தை ஆத்மாவில் நிறுத்தி வேறொன்றும் நினையாதிருக்க வேண்டும். (24-25)

ஸ்திரமில்லாத மனம் சஞ்சலப்பட்டு அங்குமிங்கும் செல்லும்பொழு தெல்லாம், அதைத் திருப்பித் தன்வசம் கொண்டுவரவேண்டும். (26)

மனம் சாந்த நிலைபெற்று, அம்மனத்தில் தோன்றும் விகாரங்கள் மறைந்து, பிரம்ம மயமாகி, பாப மற்ற யோகி உத்தமமான சுகத்தை அடைகிறான். (27)

ஓயாது தனது ஆத்மாவை இந்த யோகநிலையில் நிறுத்தி, தீச்செயல்களை அறவே ஒழித்த யோகி எளிதில் பிரம்மத்தை யடைந்து எல்லையற்ற சுகத்தை அனுபவிக்கிறான். (28)

எங்கும் சமபாவமுடைய யோகியானவன் தன்னை எல்லா உயிர்களிடத்திலும், உயிர்களனைத்தையும் தன்னிடத்திலும் காண்கிறான். (29)

என்னை எல்லாவிடத்திலும், இப்பிரபஞ்ச முழுவதையும் என்னிடத்திலும், எவன் பார்க்கிறானோ அவன் என் கடாக்ஷத்திலிருந்து விலகுவதில்லை; நானும் அவனது பார்வையிலிருந்து மறைவதில்லை. (30)

என்னிடத்தில் சரணமடைந்து எல்லா உயிர்களிலும் வசிக்கும் என்னைத் தொழும் யோகி எவ்வாறு வாழ்ந்து வரினும் என் வழியே நடக்கிறான். (31)

குறிப்பு :— 'தான்' என்ற எண்ணம் எதுவரையில் இருக்குமோ அத்தருணம் வரையில் பரமாத்மா 'பரம்' (வேறு) ஆகவிருக்கும். 'தான்' என்ற நினைவு குன்றி, சூன்யமானவுடன் ஒரே பரமாத்மாவை எங்கும் காண்கிறான். 13 அ. 23 சுலோகத்தின் கீழ் உள்ள குறிப்பைப் பார்க்க.

அர்ஜுனா! தன்னைப் போலவே எல்லோரையும் பாவித்து, இன்பம் துன்பம் இரண்டையும் சமானமாகக் கருதும் யோகியே உத்தம புருஷனாக மதிக்கப் படுவான். (32)

அர்ஜுனன் கூறுகிறன் :—

மதுசூதனு ! மனத்தின் சஞ்சலத்தின் காரணத்தால் தாங்கள் இதுகாறும் உபதேசித்த சமத்துவ நிலையிலுள்ள யோகத்தை அடைய எனக்கு ஆற்றலில்லை. (33)

கிருஷ்ணு ! மனம் நிலையில்லாத குணமுடையது ; மனிதனைக் கடைந்து கொண்டிருப்பது ; அதிக பலமுள்ளது. காற்றை அடக்குவது எவ்வளவு அசாத்தியமோ மனத்தை வசப்படுத்துவதும் அவ்வளவு கடினமென்று நினைக்கிறேன். (34)

ஸ்ரீ பகவான் கூறுகிறுர் :—

பெரும்புயத்தோனே ! நீ சொல்வது உண்மை. மனம் சஞ்சல குணமுடையதாதலால், அதை வசப்படுத்துவது மிகவும் கஷ்டமே, ஆனல், ஓ கௌந்தேயா ! அப்பியாசத்தாலும், வைராக்கியத்தாலும் அதை வ்சமாக்க இயலும் (35)

மனத்தை அடக்கித் தன் வ்சமாக்காதவன் யோக நிலை பெறுவது அசாத்தியமென்பது எனது கொள்கை ; மனத்தைக் கட்டி முயற்சி செய்வோன் நன்னெறியால் அதை அடையமுடியும். (36)

அர்ஜுனன் கூறுகிறன் :—

கிருஷ்ணு ! சிரத்தையுடன் கூடியும் முயற்சியின் குறைவால் யோக நிலை தவறியவன் சித்தியடையாது எக்கதி யடைகிருன் ? (37)

நீண்ட கரத்தோனே! யோக மார்க்கத்திலிருந்து நழுவியவன் பிரம்ம மார்க்கத்தையும் தவறி, சின்ன பின்னமாகச் சிதைந்த மேகத்தைப்போல் நாசமடைவானு? (38)

கிருஷ்ணு! இந்த சந்தேகத்தை நிவர்த்திக்க வேண்டும். இந்த ஐயத்தைப் போக்கத் தகுந்தவர் உங்களைத் தவிர வேருெருவரும் அகப்படார். (39)

ஸ்ரீ பகவான் கூறுகிறர் :—

பார்த்தா! இம்மனிதர் இவ்வுலகத்திலும் அழிவதில்லை; பரலோகத்திலும் நாசமடைவதில்லை. அன்பனே! நல்வழி நடப்போர் என்றும் இழிவடையார். (40)

யோக நிலை தவறிய புருஷன் புண்யம் செய்தவர் செல்லும் உலகத்தை யடைந்து, அங்கு வெகுகாலம் வசித்து, தூய்மை வாய்ந்த பெரியோர் வீட்டில் பிறப்பான். (41)

அல்லது ஞானமுள்ள யோகியின் குலத்தில் பிறப்பான். இவ்வுலகில் இவ்விதப் பிறப்பு மிகவும் அரிது! (42)

குருநந்தனு! அங்கு அவனுக்குத் தனது முன் ஜன்மத்தின் வினைப்பயனுன நல்லறிவு கூடி அவ்விடமிருந்து அவன் மோக்ஷத்தை அடைகிருன். (43)

தன் பூர்வ அப்பியாசத்தின் காரணத்தால் அவன் நிச்சயமாக யோகத்தின் வழி இழுக்கப்படுகிருன். யோகத்தை அறிய விரும்புவோனும் பலனை விரும்பி வைதீக கர்மங்களைச் செய்பவனுடைய நிலையைக் கடந்து செல்லுகின்றுன். (44)

தளரா முயற்சியுள்ள யோகி பாபத்திலிருந்து விடுபட்டு, பல ஜன்மங்களில் தூய்மைபெற்று பரம பதத்தைச் சேருகிறான். (45)

தவம் புரிவோர்களைவிட யோகி சிறந்தவன்; ஞானியைக் காட்டிலும் அவன் மேலானவனாகக் கருதப்படுகிறான். கர்ம காண்டத்தை அனுசரிப்போரிலும் அவன் உயர்ந்தவன். ஆகையால், ஓ அர்ஜுனா! நீ யோகியாகக் கடவாய். (46)

குறிப்பு :—இங்கு பலனை விரும்பித் தவம் புரிவோன் குறிக்கப்பட்டிருக்கிறான். ஞானியென்ற பதத்திற்கு அனுபவஞானமின்றித் தர்க்க ஞானமுடையவன் என்று பொருள் கொள்ளவேண்டும்.

எல்லா யோகிகளுக்குள்ளும் என்னிடம் மனதைச் செலுத்தி சிரத்தையுடன் என்னைப் பூஜிப்பவனையே மிகச் சிறந்தவனாக நான் மதிக்கிறேன். (47)

ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில் —
அதாவது பிரம்ம வித்தையோடு கூடிய யோகசாஸ்தி
ரத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையின் தியான யோகம்
என்ற ஆறும் அத்தியாயம்
முற்றிற்று.

---

# 7. ஞான விக்ஞான யோகம்



[இவ் வத்தியாயத்தில் ஈசுவர தத்துவமும், கடவுள் பக்தியும் எத்தன்மையது என்ற ஆராய்ச்சி தொடங்கப்படு கிறது.]

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

*பார்த்தா! என்னிடம் மனதைச் செலுத்தி என்னைச் சரணமடைந்து யோகத்தை அடைய முயன்று வரும் காலை நீ என்னை நிச்சயமாகவும், பூர்ணமாகவும் அறியும் வகையைச் சொல்லக் கேட்பாய்.* (1)

*அனுபவத்தோடு கூடிய இவ்வறிவை முழுதும் உனக்குரைப்பேன். இதை உணர்ந்தபின் இவ்வுலகில் அறியவேண்டிய பொருள் அதிகமிராது.* (2)

*ஆயிரம் மனிதர்களில் ஒருவரிருவரே சித்தி யடைய முயலுகின்றார்கள். அவ்வாறு சித்திக்காகப் பாடுபடுவோர்களில் வெகு சிலரே எனது உண்மை சொரூபத்தை யறிகின்றனர்.* (3)

*பூமி, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாசம், மனம், புத்தி, அகங்காரம் என எனது இயற்கை இவ்வெட்டு அம்சங்கள் கொண்டது.* (4)

குறிப்பு :—இவ்வெட்டு தத்துவங்களுடன் கூடிய சொரூபம் க்ஷேத்ரம் அல்லது அழிவுள்ள அம்சம் என்று சொல்லப் படும். 13 அத். 5 சு. 15 அத். 16 சு. பார்க்க.

இது எனது சாமான்ய இயற்கை. ஜீவ சொரூப மாயிருப்பது இதைவிட உயர்ந்தது. பெரும் புஜத் தோனே! இவ்வுலகம் இதன் ஆதாரத்தின்பேரில் சுழன்று வருகிறது. (5)

இவ்விரண்டுமே எல்லா உயிர்களின் உற்பத்திக் குக் காரணமென்று அறியக் கடவாய். இப்பிரபஞ்ச மனைத்தும் உற்பத்தி யாவதற்கும் அழிவதற்கும் காரணம் நானே. (6)

தனஞ்ஜய! என்னைவிட உயர்ந்த பொருள் ஒன்று மில்லை. மணிகள் நூலில் கோர்க்கப்பட் டிருப் பது போல் எல்லாப் பொருள்களும் என்னிடம் கோர்க்கப்பட் டிருக்கின்றன. (7)

கௌந்தேயா! நான் நீரிலுள்ள சுவை; சூர்ய சந் திரர்களில் பிரகாசிக்கும் ஜோதியும் நானே; நான் எல்லா வேதங்களிலும் ஓங்காரம்; வானில் சப்தமும் யான்; புருஷர்களின் ஆண்மையும் யானே. (8)

மண்ணில் நல்வாசனை நான்; தீயில் ஒளியும் யான்; பிராணிகளின் உயிர் நான்; தவத்தோர்களின் தவமும் நானே. (9)

பார்த்தா! நான் எல்லா ஜீவன்களுக்கும் அழி யாத வித்தென்று உணர்வாய். அறிஞர்களின் அறிவு நான்; காந்தியுடையோரின் காந்தியும் யானே. (10)

காமத்தையும் அபிமானத்தையும் இல்லாத வீரர்களின் வல்லமை நான்; பரதரேறே, பிராணிகள் அற நெறிக்கு மாறுபாடின்றிச் செய்யும் காமமும் நான். (11)

இவ்வுலகில் காணப்படும் சத்துவ, ரஜ, தமோ குணங்கள் யாவும் என்னிடமிருந்து உண்டானவை யென்று அறிவாய்! நான் அவைகளில் இருக்கவில்லை; அவைகள் என்னிட மிருக்கின்றன. (12)

இம் மூன்று குணங்களால் இப் பிரபஞ்சமெல்லாம் மயக்கமுற் றிருக்கின்றது. இதனால் அதிலிருந்து வேறுபட்டு உயர்ந்து ஓங்கும் நித்தியமான என்னை இவ்வுலக மறியாது. (13)

இம் மூன்று குணங்கள் பொருந்திய எனது தெய்விக மாயையைத் தாண்டலரிது. ஆனால் என்னைச் சரணமடைந்தவன் இம்மாயைக் கடக்கிறான். (14)

தீ நெறி செல்வோன், மூடன், நீசன் இவர்கள் என்னைச் சரண் புகார். அவர்கள் அசுர த்தன்மை வாய்ந்தவர்கள். மாயையால் அவர்கள் அறிவிழக்கின்றனர். (15)

அர்ஜுனா! நன்னெறி நடப்போரில் நான்கு வகையார் என்னைப் பூஜிக்கின்றனர்; துக்கத்தை யடைந்தவர், ஞானத்தைத் தேடுவோர், ஒரு பொருளை அடைய விரும்புவோர், ஞானிகள். (16)

அவர்களில் என்றும் சமநிலை நின்று, தனிப் பரம் பொருளைத் தொழும் ஞானியே உயர்ந்தோன். ஞானிக்கு நான் மிகவும் அன்பன்; அவனும் எனக்கு அன்பன். (17)

இந்த பக்தர்களனைவரும் நல்லோர்கள். ஆயினும் ஞானியோ என் ஆத்மாவே யென்பது எனது கொள்கை. ஏனெனின் என்னை அடைவதைத் தவிர மேலான நற்கதி ஒன்றுமில்லை. இதையறிந்தே யோகி என்னைச் சரண மடைகிறான். (18)

பல ஜன்மங்களின் இறுதியில் ஞானி யென்னைச் சேருகிறான். எல்லாம் வாஸுதேவ மயமென்று அறியும் மகாத்மா கிடைப்பதற்கரியன். (19)

பல காமங்களால் கலக்கப்பட்ட அறிவையுடைய மனிதன் தனது இயற்கைக் குணங்களின்படி வெவ்வேறு நியமங்களை அனுசரித்து மற்ற தேவதைகளைச் சரண மடைகிறான். (20)

எம்மனிதன் எந்த சொரூபத்தை நம்பிக்கையுடன் பக்தி செய்கிறானோ, அந்தந்த சொரூபத்தில் அவனுடைய நம்பிக்கையை நான் உறுதி செய்கிறேன். (21)

சிரத்தையுடன் அந்த சொரூபத்தை அவன் பூஜித்து அதன் மூலம் என்னால் நிர்ணயிக்கப்பட்டதும், தான் விரும்புவதுமான ஆசைகளைப் பூர்த்தி செய்கிறான். (22)

அச்சிறு மதி படைத்தோர்கள் அடையும் பலன் அழிவுள்ளதாகவிருக்கும். மற்ற தேவதைகளை நாடுவோர் அவைகளை யடைவார்கள். என்னைப் பூஜிப்பவன் என்னை அடைவான். (23)

எனது பரம, நாசமற்ற, ஒப்பில்லாத சொரூபத்தை உணராத அறிவீனர்கள் புலன்களுக் கெட்டாத என்னைத் தமது புலன்களால் அடையக் கூடியவனென்று கருதுகின்றனர். (24)

எனது யோக மாயையால் மூடப்பட்டிருக்கும் நான் எல்லோருக்கும் புலப்படேன். பிறப்பு மிறப்பு மில்லாத என்னை இந்த மூட உலகம் நன்கு அறிய மாட்டாது. (25)

குறிப்பு :—நம் முன் தோன்றும் உலகை உண்டாக்கியும், அதனால் தீண்டப்படாம லிருக்கும் காரணத்தால், பரமாத்மாவின் மறைந்திருக்கும் தன்மை யோக மாயையாகும்.

அர்ஜுனா! இறந்தவை, இருப்பவை; இனி பிறப்பவை ஆகிய எல்லா உயிர்களையும் நான் அறிவேன். ஆனால், என்னை யாரும் அறியார். (26)

பார்த்தா! ஓ பரந்தபா! விருப்பும் வெறுப்பும் தரக்கூடிய சுகதுக்கம் முதலிய இருவினைகளின் மோகத்தால் உலகத்துள்ள உயிரெல்லாம் மயக்கமுற்றிருக்கின்றன. (27)

தீச்செயலற்று, இரட்டை நோய்களின் மோகத்திலிருந்து விடுபட்டு, நழுவா விரதம் பூண்ட நல்லோர் என்னை நாடுகின்றனர். (28)

என்னைச் சார்ந்து, முதுமை, மரணம் இவைகளிலிருந்து விடுதலையடையும் பொருட்டு முயற்சி செய்வோர் பூர்ண பிரம்ம சொரூபத்தையும், தன் ஆத்ம நிலையையும், எல்லாக் கர்மங்களையும் அறிவார்கள். (29)

அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம், இவைகளுடன் கூடினவன் என்று என்னை அறிவோர், சமநிலை பெற்றுச் சாகும் தருணத்திலும் என்னை மறவார். (30)

குறிப்பு :—அதிபூதம், முதலிய இவைகளின் பொருள் 8-வது அத்தியாயத்தில் வருகிறது. இவ்வுலகில் ஈசுவரனைத் தவிர மற்றொன்று மில்லை. எல்லாக் கர்மங்களுக்கும் அவனே கர்த்தா, போக்தா வென்பது இந்த சுலோகத்தின் பொருள். இவ்வித மறிந்து, சாகும் பொழுதும் சாந்த நிலையில் ஈசுவரனிடம் தன்மயமாகி வாசனைகளனைத்தையும் போக்கடித்தவர்களே அவனை அறிந்தவர்கள்; அவர்கள் மோக்ஷ மடைவார்கள்.

ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பகவத்கீதை என்ற உபநிஷத்தில் அதாவது
பிரம்ம வித்தையுடன் கூடிய யோக சாஸ்திரத்தில்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையின் ஞான விக்ஞான யோகம்
என்ற ஏழாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

# 8. அக்ஷர பிரம்ம யோகம்



[இவ் வத்தியாயத்தில் ஈசுவர தத்துவம் விரித்துக் கூறப்படுகிறது.]

அர்ஜுனன் கூறுகிறன் :—

புருஷோத்தமா! இந்தப் பிரம்மத்தின் சொரூபம் என்ன? அத்யாத்மம் என்பது யாது? காமம் எது? அதிபூதமென்று எதைச் சொல்லுகிருர்கள்? அதி தைவம் எனப்படுவது யாது? (1)

மதுசூதனு! இந்தத் தேகத்தில் அதியக்ஞம் என்பது என்ன? அது எவ்வாறு செய்யக்கூடியது? இந்திரியங்களை வென்றவன் மரண காலத்தில் தங்களை எப்படி அறிகிருன்? (2)

ஸ்ரீ பகவான் கூறுகிறர் :—

எல்லாவற்றிலும் உயர்ந்தது, அழிவில்லாமலிருப்பது பிரம்மம்; உயிர்களுக்கு ஆதாரமாய் அவைகளில் இருப்பது அத்யாத்மம். அவ்வுயிர்களைச் சிருஷ்டிக்கும் வேலை கர்மம் என்று சொல்லப்படுகிறது. (3)

சிறிது காலமிருந்து அழிவடையும் சொரூபம் அதிபூதம்; அதிலிருக்கும் ஜீவசொரூபம் அதிதைவதம். மனித சிரேஷ்டனே! இந்தச் சரீரத்தில் இருந்து கொண்டு யக்ஞத்தின் வாயிலாகத் தூய்மை பெற்ற ஜீவஸ்வரூபமே அதியக்ஞமெனப்படுவது (4)

குறிப்பு :—நமது அறிவுக்கெட்டாத பரப்பிரம்மமுதல் நம் கண் முன் தோன்றி மறையும் அற்பப்பொருள் வரையுள்ள உலகு முழுவதும் பரமாத்மாவே. இவையெல்லாம் அவன் செயல். அப்படியிருக்கையில், பிராணிகளில் ஒருவனுன மனிதன் தான் கர்த்தாவென்று அபிமானம் கொள்வதைவிட்டு, பரமாத்மாவின் சேவகனுய் தனது கர்ம முழுதும் அதற்கே அர்ப்பணம் செய்வது அவசியமல்லவா?

இறுதிக்காலத்தில் என்னை நினைத்தவண்ணமே தனது தேகத்தைத் துறப்பவன் என் சொரூபத்தையடைகிருன். இதில் எள்ளளவும் சந்தேகமில்லை. (5)

கௌந்தேயா! அப்படியின்றி. வேறு எந்த சொரூபத்தை மனிதன் ஓயாமல் தியானம் செய்துகொண்டிருக்கிருனே அதையே சாகும் தருணத்திலும் சிந்தித்துக்கொண்டு உடலை விட்டு நீங்குகிருன். இதனுல் பிறகும் அந்த சொரூபத்தையே அவன் பெறுகிருன். (6)

ஆகையால் சதாகாலமும் என்னையே நினைத்துக்கொண்டு போர் புரியக் கடவாய். இவ்வாறு உனது மனத்தையும், மதியையும் என் பேரில் நிலை நிறுத்துவதால் என்னையே நிச்சயமாக அடைவாய். (7)

பார்த்தா! தனது சித்தத்தை விடாமுயற்சியால் ஸ்திரப்படுத்தி, மற்ற விஷயங்களில் செல்லாமல் தடுத்து என்னிடம் ஓர் முகப்படுத்தும் மனிதன் ஜோதி மயமான பரம புருஷனைச் சேருகிருன். (8)

சலிக்காத மனத்தோனாகி, பக்தி பரவசனாகி, யோக பலத்தால் புருவங்களின் நடுவில் நன்கு பிராணனை நிறுத்தி, சர்வக்ஞனும், பழமையானவனும், அடக்கி ஆள்பவனும், அதிக நுட்பமானவனும், எல்லோரையும் காப்பவனும், மனதிற் கெட்டாதவனும், சூரியனைப்போல் ஒளிமயமானவனும், அஞ்ஞானமான இருளுக்கப்பால் இருப்பவனுமான சொரூபனைத் தனது முடிவு காலத்தில் நினைப்பவன் திவ்ய பரமபுருஷனை அடைகிறான். (9-10)

எதை வேதமறிந்தோர் அக்ஷரம் (அழிவில்லாதது) என்ற சொல்லால் குறிப்பிடுகிறார்களோ, தனது கர்மங்களை ஒழித்த முனிவன் எதில் லயமடைகிறானோ, எதை இச்சித்துப் பலர் பிரம்மசர்யத்தை அனுஷ்டிக்கிறார்களோ அப்பதத்தை உனக்கு சுருக்கமாகச் சொல்லுகின்றேன். (11)

இந்திரிய துவாரங்களனைத்தையும் தடுத்து, மனத்தை இருதயத்தில் நிறுத்தி, தலையில் பிராணனை ஸ்தம்பிக்கச் செய்து, சமாதியிலாழ்ந்து, ' ஓம் ' என்ற ஒரே சொல்லை உச்சரித்து என்னைச் சிந்தித்தவண்ணமே தனது தேகத்தைத் தியாகம் செய்பவன் பரமகதியை அடைகிறான். (12-13)

பார்த்தா ! மனத்தை வேறிடம் போகவொட்டாது எக்காலமும் ஓயாமல் என்னையே தியானம் செய்யும் யோகி எளிதில் என்னைச் சேருகிறான். (14)

என்னிடம் சேர்ந்து மோக்ஷபதமடைந்த மகான்கள் துக்கத்தின் வீடாயும், நிலையற்றதுமாயுமுள்ள மறுபிறப்பை யடையார்கள். (15)

கௌந்தேயா ! பிரம்மலோகத்தி லிருப்பவர் முத லான அனைவரும் திரும்பத் திரும்பப் பிறப்பவர்கள். ஆனால் என்னை யடைந்தபின் மனிதன் புனர் ஜன்மம் எடுக்கான். (16)

ஆயிரம் யுகம் கொண்டது பிரமனின் ஓர் பகல். அவனுக்கு இரவும் ஆயிர யுககாலம். இதை யறிந்தவரே இரவையும் பகலையும் அறிந்தவர். (17)

குறிப்பு :—இதன்பொருள் இருபத்தினான்கு மணியுள்ள நமது தினம் இப்பிரபஞ்சத்தின் கால சக்கிரத்தில் ஒருக்ஷணத்திலும் சிறியது. ஆகையால், இந்தத் தினத்தில் அடையக்கூடிய போகம் வானமலரைப் போன்று நமது மதிமயக்கமே ஒழிய வேறொன்று மில்லை. இதை உணர்ந்து அதை அலக்ஷியம் செய்து, நமக்குக் கிடைக்கும் காலத்தைக் கடவுள் வணக்கத்தி லும், உலகத்தொண்டிலும் கழித்து, நமது வாழ்க் கையைப் பயனுள்ளதாகச் செய்வதோடு, இன்று ஆத்ம தர்சனம் கிடைக்காவிடினும் தைர்யத்துடன் இருக்கவேண்டும்.

(பிரமனின்) தினம் உதிக்குங்கால் அவ்யக்தமாக (மறைவாக) இருந்த பொருள்கள் தோன்றுகின்றன ; இரவில் பிரளய மடைகின்றன. அதாவது அவ்யக் தத்தில் லயமடைகின்றன. (18)

குறிப்பு :—இவ்வாறறிந்தும் மனிதன் தன்கையில் சிறிதளவு சக்தியிருக்கின்றதென்று உணரவேண்டும். பிறப்பும் இறப்பும் ஜோடியாகச் சேர்ந்தே காணப்படுகின்றன.

பார்த்தா! பிராணிகளின் இச்சமுதாயம் இவ்வாறு இரவு வந்ததும் பிரளயத்தில் மூழ்கி, பகல் தோன்றும் பொழுது வெளி வருகின்றன. (19)

இந்த அவ்யக்த பொருளுக்குமேல் மற்ெருரு அழியாத அவ்யக்த பொருள் இருக்கின்றது. மற்றப் பிராணிகளெல்லாம் நாசமடையும் பொழுதும் இவ்வழியாப் பொருள் நசிப்பதில்லை. (20)

எதை அவ்யக்தமென்றும் அக்ஷரமென்றும் கூறுகின்ருர்களோ அதையே பரம கதியென்றும் சொல்லுகின்றனர். எதையடைந்து மறுபடியும் பிறக்கவேண்டியதில்லையோ அதுவே எனது பரமபதம். (21)

பார்த்தா! வேறிடம் நோக்கார்த பக்தியால் இவ்வுத்தம புருஷனைக் காணலாம். இவனிடத்தில் உயிரனைத்தும் நிலைநிற்கின்றது. இப்பிரபஞ்ச முழுதும் இவனுல் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. (22)

பரதரேறே! எச்சமயம் இறந்தால் யோகி மோக்ஷமடைவானென்றும், எக்காலத்தில் உயிர் துறந்தால் மறு ஜன்மம் எடுக்க வேண்டி வருமென்றும் உனக்கு உரைப்பேன். (23)

உத்தராயணத்தின் ஆறுமாதங்களில், சுக்ல பக்ஷத்தில், பகலில், அக்னி ஜ்வாலை எழும் சமயத்தில் மரணமடைபவன் பிரம்மத்தை யறிந்தவன்; அவன் பிரம்மத்தை யடைவான். (24)

தக்ஷிணுயனத்தின் ஆறுமாதங்களில், கிருஷ்ண பக்ஷத்தில், இரவில், புகை எழும்பும் காலத்தில் இறக்கும் மனிதன் சந்திரலோகத்தை யடைந்து மறு ஜன்மம் எடுக்கிருன். (25)

குறிப்பு :—மேலுள்ள இரண்டு சுலோகங்களின் தாத்பர்யம் எனக்கு நன்கு விளங்கவில்லை. இவைகளின் சொற்கள் கீதையின் உபதேசத்துடன் பொருந்தவில்லை. அதன் பிரகாரம் பக்தியுள்ளவன், உலகத்தொண்டு புரிபவன், ஞானம் பெற்றபின் எப்பொழுது மரணமடைந்தாலும் மோக்ஷத்தையே அடைகிறான். இவ்வுபதேசத்திற்கு இந்த சுலோகங்களின் சொற்கள் விரோதமாக விருக்கின்றன. இதன் கருத்து அடியிற்கண்டவாறு கொள்ளவேண்டும். யக்ஞம் செய்வோன், பரோபகாரம் செய்து தனது ஆயுளைக்கழிப்பவன், ஞானமடைந்தவன், பிரம்மத்தின் தன்மையை யுணர்ந்தவன், இவ்வித புருஷன் மரண காலத்தில் தன் நிலைக்குன்றாதிருப்பின் மோக்ஷமடைவான். இதற்கு மாறாக யக்ஞம் செய்யாது, அறிவின்றி, பக்தியின் பெருமையை உணராது, இருப்பவன் சந்திரலோகத்தை அதாவது அல்ப காலமிருக்கும் லோகத்தை அடைந்து பின் ஸம்ஸாரத்திற்கு மறுபடியும் திரும்பிவருகிறான். சந்திரனுக்குச் சொந்த ஒளி இல்லை.

இவ்வுலகில் ஞானம், ஞானமில்லாமை யென்ற இரண்டு வழிகளும் பரம்பரையாக வந்துகொண்டிருக்கின்றன. ஒன்றால் — ஞானமார்க்கத்தால்—மனிதன் மோக்ஷம் அடைகிறான். மற்றொன்றால்—ஞானமில்லாத இருள்வழியால்—புனர் ஜன்மம் பெறுகின்றான். (26)

பார்த்தா ! இவ்விரண்டு வழிகளையும் அறிந்த யோகி மோகத்தி லகப்படான். ஆதலால், ஓ அர்ஜுனா ! நீ எக்காலமும் யோகத்தோடு கூடி வாழக் கடவாய். (27)

குறிப்பு :—இவ்விரண்டு வழிகளையும் அறிந்து சமநிலை பெற்றவன் இருள் அதாவது ஞானமில்லாத வழியில் செல்லான். இதையே "மோகத்தில் அகப்படான்" எனக் கூறப்பட்டிருக்கிறது.

வேதம், யக்ஞம், தவம், தானம் இவைகளால்
அடையக் கூடியனவாகச் சொல்லப்பட் டிருக்கும்
பலன்களை உணர்ந்து அவைகளைக் கடந்த யோகி ஆதி
மூலத்தை அடைகிறான். (28)

குறிப்பு :—ஞானம், பக்தி, சேவை இவ்வகளால் சமநிலையடைந்தவன் மற்ற புண்ணியங்களின் பலன்களை மட்டும் அடைவதில்லை. பரமபதத்தையும் அடைகிறான்.

ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பகவத்கீதை என்ற உபநிஷத்தில் அதாவது
பிரம்ம வித்தையுடன் கூடிய யோக சாஸ்திரத்தில்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையின் அக்ஷர பிரம்ம யோகம்
என்ற எட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

# 9. ராஜவித்யா ராஜகுஹ்ய ரகஸ்ய யோகம்



இதில் பக்தியின் மகிமை போற்றப்பட்டிருக்கிறது.]

ஸ்ரீ பகவான் கூறுகிறர் :—

*நீ மாசற்றவன்; ஆதலால் பரம ரகஸ்யமானதும் அனுபவத்தோடு கூடியதுமான ஞானத்தை உனக்குத் தருகிறேன். அதையறிந்து சகல தீமைகளிலிருந்தும் தப்புவாய்.* (1)

*எல்லா வித்யைகளுக்கும் இது அரசு, சூக்ஷ்ம தத்துவங்களுள் உயர்ந்தது. இவ்வித்யை தூய்மை வாய்ந்தது; உத்தமமானது; பிரத்தியக்ஷ அனுபவத்தில் அறியத்தக்கது; அறநெறியைக் காட்டுவது; நடவடிக்கையில் கொண்டுவர சுலபமானது; அழியாப் பலனைக் கொடுக்க வல்லது.* (2)

*பரந்தபா! இந்த தர்மத்தில் நம்பிக்கையில்லாதவர் என்னையடையாமல் நிலையில்லாத இந்த ஸம்ஸாரத்தில் அடிக்கடி வீழ்ந்து துயரப்படுகின்றனர்.* (3)

எனது அவ்யக்த சொரூபத்தால் இவ்வுலக முழுதும் நிரம்பி இருக்கின்றது. எல்லாப் பிராணிகளுக்கும் நானே ஆதாரம்; எனக்கு அவைகள் ஆதாரமல்ல. (4)

அப்படியிருந்தும், உயிர்கள் என்னிடம் இல்லை என்று சொல்லக்கூடும். இது எனது யோகபலமென்று உணர்வாய். நான் பிராணிகளைப் பாதுகாக்கின்றேன்; ஆகிலும் நான் அவைகளில் இல்லை. ஆனால், அவைகளுக்கு உற்பத்திக் காரணம் யானே. (5)

குறிப்பு:—எல்லா உயிர்களும் என்னிடம் இருக்கின்றனவென்றும், இல்லையெனவும் சொல்லலாம். அவ்வாறே நான் அவைகளிடம் இருக்கின்றேன். இல்லையென்று இருவிதமாகவும் உரைக்கலாம். இது ஈசுவரனது யோக பலம், மாயை, அல்லது விசித்திர சக்தி; பகவானும் ஈசுவரனுடைய சொரூபத்தை மனித மொழியால் வர்ணிக்க வேண்டியிருந்தது. ஆதலால் பலவித சொற்களைப் பிரயோகித்து அர்ஜுனனுக்குச் சந்தோஷத்தைச் செய்கிறார். இருப்பவை யாவும் ஈசுவர மயம். ஆகையால் எல்லாம் அவனிடத்தே இருக்கின்றன. அவன் அவைகளால் தீண்டப்படுவதில்லை. நடக்கும் காரியங்களுக்கு அவன் கர்த்தாவல்ல. ஆகையால் ஜீவன்கள் அவனிடமில்லை யென்று சொல்லத்தகும். ஆனால் அவனிடத்தில் பக்தியுள்ளவனிடம் அவன் நிச்சயமாக இருக்கின்றான். நாஸ்திகன் அவனைத் தன் நம்பிக்கையின் பிரகாரம் தன்னிடம் காணுவதில்லை. இது ஈசுவரனுடைய விசித்திர சக்தி; இல்லையெனின் இதை என்னவென்று சொல்வது?

எவ்வாறு எல்லா விடங்களிலும் சஞ்சரிக்கும் காற்று ஆகாயத்தில் என்று மிருக்கிறதோ, அவ்வாறே பிராணிகளனைத்தும் என்னிடம் நிலைபெற்றிருக்கின் றன. இதை அறிவாய். (6)

கௌந்தேயா! கல்பத்தின் முடிவில் பிராணிக ளெல்லாம் என்னிடம் லயமாகின்றன; அடுத்த கல்பத் தின் ஆரம்பத்தில் மறுபடியும் நான் அவைகளை உண் டாக்குகின்றேன். (7)

எனது மாயையின் பலத்தால் தம்தம் இயற்கை யைப் பின்பற்றி நடக்கும் உயிர்களின் சமூகம் முழுமையும் நான் அடிக்கடி சிருஷ்டி செய்கிறேன். (8)

தனஞ்சய! இக்கர்மங்கள் என்னைக் கட்டுப்படுத்த மாட்டா. ஏனெனில் அவைகளிடம் நான் நடுநிலைமை வகித்தும், சமானமாகவும் பற்றின்றியு மிருக்கின் றேன். (9)

கௌந்தேயா! எனது விதியின்படி ஸ்தாவர ஜங்கமப் பொருள்களை இயற்கை உண்டாக்குகின்றது. இக்காரணத்தால் பிரபஞ்சம் சக்கரத்தைப் போல் சுழன்று வருகின்றது. (10)

உயிர்களுக் கெல்லாம் மகேசுவரனான என்னை அறி யாத மூடர்கள், மனித உடலை ஏற்றுவந்த என்னை அல க்ஷியம் செய்கிறார்கள். (11)

குறிப்பு:—கடவுளின் சக்தியை அறியாதவர்கள் தமது உட லுக்குள் அந்தர்யாமியாக விருக்கும் பரம்பொருளைக் காணமாட்டார்கள். அவர் இருப்பதையே நம்பாமல் நாஸ்திகர்களாகிறார்கள்.

வீண் ஆசைகளை விரும்புவோர், உதவாக் கர்மங்களைப்புரிவோர், பயனில்லா ஞானத்தை நாடுவோர்—, ஆகிய மூடர்கள் மோகத்தில் அழுத்தும் ராக்ஷஸ—அசுர—இயற்கையை அடைகின்றனர். (12)

பார்த்தா! இதற்கு மாறாக மகாத்மாக்கள் தெய்வீக இயற்கையைச் சார்ந்து என்னைப் பிராணிகளின் ஆதி காரணமென்றும் நாசமற்றவனென்றும் உணர்ந்து சஞ்சலமின்றி ஒரே நிலையில் இருந்துகொண்டு என்னைப் பூஜிக்கின்றனர். (13)

அவர்கள் திடமுள்ள கொள்கை யுடையவர்கள். ஓயாமல் விடாமுயற்சியுடன் என்னைப் போற்றுகின்றனர். பக்தியுடன் என்னை வணங்குகின்றனர். தினந்தோறும் என்னைத் தியானித்து வழிபடுகின்றனர். (14)

மற்றும் பலர் பன்மையற்ற அத்வைத சொரூபத்தாலும், இரண்டு அம்சங்களடங்கிய துவைத சொரூபத்தாலும், பல அம்சங்களுள்ள சொரூபத்தாலும், எங்கும் நிறைந்துள்ள என்னை ஞானத்தின் வாயிலாக வழிபடுகின்றனர். (15)

யக்ஞத்திற்காகச் செய்துகொள்ளும் விரதம் நான்; யக்ஞமும் நான்; யக்ஞத்தின்மூலம் முன்னோர்களைக் காப்பாற்றுவதும் நான்; யக்ஞத்திற்கு வேண்டிய காய் கனிவகைகளும் நான்; யக்ஞத்தின் மந்திரம் நான்; அதில் போடப்படும் ஆகுதியும் நான்; தீயும் நான்; ஹோமம் செய்யப்படும் பொருளும் நானே. (16)

இவ் வுலகத்தின் தந்தை நான்; தாயும் நான்; தாங்குபவன் நான்; பாட்டன் நான்; அறியத் தகுந்தவன் நான்; தூய ஓங்காரம் நான்; ருக் வேதம், யஜுர் வேதம், சாமவேதம் இம் மூன்றும் நானே. (17)

இவ்வுலகின் கதி நான் ; இதன் போஷகன் நான்; இறைவன் நான் ; சாக்ஷி நான் ; இருப்பிடம் நான் ; இது நாடும் பதம் நான் ; நன்மைசெய்பவன் நான் ; ஆக்குவதற்கும் அழிப்பதற்கும் காரணம் நான், இதன் நிலை நான் ; களஞ்சியம் நான் ; இதன் அழியா வித்தும் நானே. (18)

நானே உஷ்ணத்தைக் கொடுக்கின்றேன் ; மழையைச் சேகரித்துவைத்துக் காலத்தில் பெய்யச் செய்கின்றேன் ; சாவில்லாமை நான் ; சாவும் நான் ; அர்ஜுனா ! இருப்பனவும் இல்லாதனவும் யானே. (19)

மூன்று வேதங்களில் கூறப்பட்டுள்ள கர்மங்களைச் செய்வோர், சோமபானம் செய்து பாவத்தைப் போக்கி, யக்ஞத்தின் மூலம் என்னை வழிபட்டு விண்ணுலகை வேண்டுகின்றனர். அவர்கள் தூய தேவலோகத்தை அடைந்து சுவர்க்கத்தில் மேலான போகங்களை அனுபவிக்கின்றனர். (20)

குறிப்பு :—எல்லா வைதீகக்கிரியைகளும் பலன்களைப் பெறுவதற்காகவே செய்யப்படுகின்றன. அவைகளில் சிலவற்றில் சோமரஸம் அருந்தப்படுகின்றது. அக்கிரியைகள் இங்கே குறிக்கப்பட் டிருக்கின்றன. இக்கிரியைகள் எவை ? சோமரஸம் என்ன ? இவ்விஷயங்களை இக்காலத்தில் எவரும் சரிவர உரைக்க முடியாது.

விசாலமான சுவர்க்கத்தில் இவ்வாறு போகங்களை அனுபவித்து, தங்கள் புண்ணியம் செலவழிந்தவுடன் இம் மிருத்யுலோகத்திற்குத் திரும்பி வருகின்றனர். இவ்விதம் மூன்று வேதங்களின் பலன்களை விரும்பிச் செய்வோர் பிறப்பு இறப்பு என்னும் சக்கரத்தில் அகப்பட்டுச் சுழல்கின்றனர். (21)

வேறொன்றையும் கருதாது என்னையே சிந்தித்து வழிபடுவோராகி, எக்காலமும் என்னிடத்தே வசிக்கும் யோகிகளின் யோகக்ஷேமத்தை நானே ஏற்றுக்கொள்ளுகின்றேன். (22)

குறிப்பு :—இந்தப் பிரகாரம் யோகிகளை அறிந்து கொள்வதற்கு மூன்று அழகான குறிகள் உண்டு ; சமத்துவ புத்தி, கடமை செய்வதில் ஆற்றல், சஞ்சலமில்லாது ஓர் முகப்பட்ட பக்தி. இம்மூன்று குணங்களும் பாவு, ஊடைபோல் கலந்து நெய்யப்பட் டிருக்கவேண்டும். பக்தி சமத்துவமின்றிக் கிட்டாது. சமத்துவமும் பக்தி யில்லாமல் கிடைக்காது. தன் கடனை ஆற்றுவதில் வல்லமை யில்லாத பக்தியும், சமத்துவமும் வெளித் தோற்றங்களென்றே பயப்படவேண்டும். யோகக்ஷேமம் என்பதன் அர்த்தம்—யோகம் என்றால் பொருளை சம்பாதித்தல். க்ஷேமம் என்றால் சம்பாதித்த பொருளை ரக்ஷித்தல்.

கௌந்தேயா ! விதியை அனுசரிக்காது சிரத்தையுடன் இதர தேவதைகளை வழிபடுவோர்களும் என்னையே பூஜிக்கின்றனர். (23)

குறிப்பு :—விதியை அனுசரிக்காமலிருப்பதாவது ; மாசற்று, உருவமற்று, தனிப்பொருளாக இருக்கும் என்னை அறியாதிருப்பது.

எல்லா யக்ஞங்களையும் அனுபவிக்கும் எஜமானன் என்று எனது உண்மை சொரூபத்தை அறியாதவர் வீழ்வார். (24)

தேவதைகளை வழிபடுவோர் தேவலோகத்தை அடைவார்; முன்னோர்களை வழிபடுவோர் பிதுர்லோகத்தைச் சேருவர்; பூதங்களையும், பிரேதங்களையும் பூஜிப்பவர் அவைகளின் உலகங்களை அடைவார்கள்; என்னை வழிபடுவோர் என்னையே சேருவார்கள். (25)

இலை, பூ, கனி, நீர்; இவற்றில் எதையேனும் பக்தியை முன்னிட்டுத் தளரா முயற்சியுடன் அளிப்பரேல், பக்தியால் அளிக்கப்பட்ட அப்பொருளை நான் ஏற்றுக்கொள்வேன். (26)

குறிப்பு:—தொண்டு புரியும் எண்ணத்துடன் கொடுக்கும் பொருள்களை, அதை ஏற்றுக்கொள்ளும் பிராணியில் அந்தர்யாமியாக வசிக்கும் பகவான் அதை அங்கீகாரம் செய்துகொள்ளுகிறார் என்பது இந்த சுலோகத்தின் பொருள்.

கௌந்தேயா! ஆதலால் நீ செய்வதையும், உண்பதையும், தீயில் ஹோமம் செய்வதையும், தானமளிப்பதையும், தவம் புரிவதையும், எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்யக்கடவாய்! (27)

இவ்வாறு செய்வதால் நல்ல அல்லது தீய பலனைப் பயக்கும் கர்ம பந்தங்களிலிருந்து விடுபட்டு, பலனைத் துறத்தலால் சமத்துவ புத்தி பெற்று, ஜனனம் மரணம் இவைகளிலிருந்து விடுதலை யடைந்து என்னைச் சேருவாய். (28)

எல்லாப் பிராணிகளிடத்தும் நான் சமபாவத்துட னிருக்கின்றேன். எனக்கு ஒருவரும் அன்பருமில்லை; அன்பரல்லாதவருமில்லை. என்னைப் பக்தியுடன் பூஜிப்பவர்கள் என்னிடமிருக்கின்றனர். நானும் அவரிடம் இருக்கிறேன். (29)

கொடிய தீ வழி செல்லுவோனும் என்னை ஓர் வழி நின்று பக்தி செய்வானாகில் அவன் சாதுவா னென்று உணரவேண்டும். ஏனெனில் இப்பொழுது அவனது இச்சைகள் நல்வழி நிற்கின்றன. (30)

குறிப்பு:—இதற்குக் காரணம், கடவுளிடத்து ஓர் வழிப் பட்டு பக்தி செய்தல் தீய குணங்களைப் போக்கும்.

அவன் சீக்கிரத்தில் தர்மாத்மாவாகிறான். இடை விடாத சாந்தியைப் பெறுகிறான். கௌந்தேயா! எனது பக்தன் ஒருபொழுதும் நாசமடையான் என ஐயமற அறியக்கடவாய். (31)

பார்த்தா! தீய குலத்திற் பிறந்தோரும், மாதர்க ளும், வைசியர்களும், கடை வருணத்தார்களும், என்னிடம் சரண் புகுந்து பரம கதியை அடைவார்கள். (32)

தூய குலத்தில் பிறந்து அறநெறி செல்லும் பிராம்மணர்களும், ராஜ ரிஷிகளும் என்னிடம் பக்தர்க ளாகில் அவர்களின் கதியைக் கூறவும் வேண்டுமா? ஆகையால், அநித்தியமான, சுகமில்லாத இவ் வுலகத் தில் பிறந்திருக்கும் நீ என்னை வழிபடுவாயாக! (33)

என்னிடம் உன் மனத்தை நிலை நிறுத்து; எனது பக்தனாயிரு; என்னை வணங்கு; இவ்வாறு செய்வாயாகில் என்னைச் சரண மடைந்து உன் ஆத்மாவை என்னுடன் பிணைத்து என்னையே கூடுவாய். (34)

ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில் — அதாவது பிரம்ம வித்தையோடு கூடிய யோகசாஸ்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையின் ராஜவித்யா ராஜகுஹ்ய ரகஸ்ய யோகம் என்ற ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

# 10. விபூதி யோகம்



[ஏழு, எட்டு, ஒன்பதாம் அத்தியாயங்களில் பக்தி முதலியவற்றை விரித்துரைத்த பின் இவ்விடம் பகவான் பக்தர்களின் பொருட்டு தனது எல்லையற்ற சக்தி வடிவங்களை சுருக்கமாகத் தெரிவிக்கிறார்.]

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

*பெரும்புயத்தோனே! மறுபடியும் எனது உயர் மொழிகளைக் கேளாய்! நீ எனக்கு அன்பனாதலால் உனது நன்மைக்காக உரைக்கின்றேன்.* (1)

*தேவர்களும் மகரிஷிகளும் எனது பிறப்பைக் கண்டதில்லை. ஏனெனில், விண்ணுலகத்தோருக்கும், பெருந் தவத்தோர்க்கும் எல்லா விதத்திலும் ஆதி காரணம் நானே.* (2)

*பூமியில் சாவுள்ள மானிடனாக இருக்கும் பொழுதே என்னை சர்வலோக மகேசுவரனாகவும், பிறப் பற்றவனாகவும் அறிவோன், எல்லாப் பாபங்களும் தீர்ந்து தூய்மை யடைகிறான்.* (3)

மதி, அறிவு, மயக்கமில்லாமை, பொறுமை, சத்தி, யம், புலன்களை அடக்கல், சாந்தி, இன்பம், துன்பம், பிறப்பு, இறப்பு, பயம், பயமின்மை, அஹிம்சை, சமத்துவம், சந்தோஷம், தவம், தானம், கீர்த்தி, அபகீர்த்தி, இவ்விதமாகப் பிராணிகளிடம் காணப்படும் பலவித மனோபாவங்களும் என்னிட மிருந்தே உண்டாகின்றன. (4-5)

சப்த ரிஷிகளும், அவர்களுக்குமுன் ஸனகாதி முனிவர்களும், (பதினான்கு) மனுக்களும் என் இச்சையால் தோன்றினர். இவ் வுலகனைத்தும் அவர்களிடமிருந்து உண்டாயிற்று. (6)

எனது மகிமையையும், வல்லமையையும் உள்ளவாறு உணர்வோன் கலங்காத சமத்துவ புத்தியைப் பெறுவான். இதில் ஐயமில்லை. (7)

எல்லாப் பொருள்களுக்கும் நானே உற்பத்தி காரணம். என்னிடமிருந்தே அவையனைத்தும் உதிக்கின்றன. இதை யறிந்த மேதாவி மனப்பூர்வமாக என்னை வழிபடுவான். (8)

தங்கள் சித்தங்களை என்னிடம் பதித்து, தங்கள் வாழ்க்கைகளை எனக்கு அர்ப்பணம் செய்யும் புருஷர்கள் ஒருவர்க்கொருவர் தத்துவத்தை போதித்துக் கொண்டும், என்றும் எனது பெருமையைப் பாடிக் கொண்டும் திருப்தி யுள்ளவர்களாய் ஆனந்தத்துடன் வசிப்பார்கள் (9)

இவ்வாறு என்னிடம் புகுந்து பிரிவின்றி அன்புடன் வழிபடுவோருக்கே நான் ஞானத்தை அளிக்கின்றேன். அதைக்கொண்டு அவர்கள் என்னைச் சேருவார்கள். (10)

அவரிடம் கருணைகூர்ந்து அவர்களின் இருதயத்தில் இருந்து ஞானமென்னும் ஒளியால் அறியாமையென்னும் இருளை நாசம் செய்கின்றேன். (11)

அர்ஜுனன் கூறுகிறான் :—

பகவானே! பரப்பிரம்மம் நீர்; பரமபதம் நீர்; பரம புண்ய புருஷரும் நீர்; தேவ முனிவரான நாரதர், அஸிதர், தேவலர், வியாசர் முதலிய முனிவரனைவரும் உம்மை நாசமற்றவர், திவ்ய புருஷர், ஆதிதேவர், பிறப்பற்றவர், கடவுள் சொரூபமென்று சொல்லுகின்றனர். நீங்களும் அப்படியே உரைக்கின்றீர்கள். (12-13)

கேசவா! நீங்கள் சொல்வதை சத்தியமென்று நம்புகின்றேன். பகவானே! உமது சொரூபத்தை தேவர்களும் அறியார். அசுரர்களும் உணரார். (14)

புருஷோத்தமா! உயிர்களின் தந்தையே! பிராணிகளின் ஈசுவரா! தேவர் தேவனே! ஜகத்தின் நாயகனே! தங்களைத் தாமே அறிவீர். (15)

இவ்வுலகை எந்தெந்த சக்தி வடிவங்களாய் வியாபித்து நிற்கின்றீர்களோ, உமது அத்திவ்ய வடிவங்களனைத்தையும் எனக்கு உரைக்கக் கடவீர். (16)

யோகபுருஷனே! உம்மை ஓயாமல் சிந்தித்து எவ்வாறு உணர்வேன்? பகவானே! எந்தெந்த வடிவங்களில் உம்மை சிந்திக்க வேண்டும்? (17)

ஜனார்த்தனா! உமது சக்தியையும், வடிவங்களையும் இன்னொருக்கால் விரித்துரைக்க வேண்டுகிறேன். தேனினுமினிய உமது சொற்களை கேட்கக் கேட்க என் அவா பெருகுகின்றது. (18)

ஸ்ரீ பகவான் கூறுகிறர்:—

குரு சிரேஷ்டனே! நன்குரைத்தாய். நான் எனது முக்கியமான திவ்ய வடிவங்களை உனக்குக் கூறுவேன். விரிப்பின் அவைகளுக்கு முடிவு கிடையாது. (19)

குடாகேசா! எல்லாப் பிராணிகளிடத்தின் இருதயத்தில் இருக்கும் ஆத்மா நான். உயிரனைத்திற்கும் முதல், மத்தி, முடிவு இம்மூன்றும் யானே. (20)

ஆதித்தியர்களில் நான் விஷ்ணு; வானத்தின் ஜோதிகளில் நான் ஒளியில் ஓங்கிய சூரியன்; வாயு தேவதைகளில் நான் மரீசி; நக்ஷத்திரங்களுள் நான் சந்திரன். (21)

வேதங்களில் நான் சாமவேதம்; தேவர்களுக்குள் நான் தேவேந்திரன்; புலன்களுள் நான் மனம்; பிராணிகளுக் குள்ளிருக்கும் உணர்வு யான். (22)

ருத்திரர்களில் சங்கரன் நான்; யக்ஷ ராக்ஷஸர்களில் யான் குபேரன்; வஸுக்களில் நான் அக்னி; மலைகளில் யான் மேருமலை. (23)

பார்த்தா! புரோகிதர்களில் என்னை பிரகஸ்பதியாக உணர்வாய். போர்த் தலைவர்களில் நான் ஷண்முகன். ஏரிகளுக்குள் நான் சாகரம். முனிவர்களில் யான் பிருகு; சொற்களில் ஓரெழுத்தான ஓங்காரம் நான்; யக்ஞங்களில் ஜபயக்ஞம் நான்; ஸ்தாவரங்களில் யான் இமயமலை. (24-25)

மரங்களுக்குள் நான் அரச மரம்; தேவ ரிஷிகளில் நான் நாரதர்; கந்தர்வர்களில் யான் சித்திரரதன்; சித்தர்களில் கபில முனியாவேன். (26)

குதிரைகளுக்குள் என்னை அமிர்தத்திலிருந்து உண்டான உச்சைசிரவமென்று உணர்வாய். யானைகளில் ஐராவதம் யான்; மனிதருள் அரசன் யானே. (27)

ஆயுதங்களுக்குள் வச்சிரம் யான்; பசுக்களில் நான் காமதேனு; மக்கட்குக் காரணமான காமதேவனும் யான்; சர்ப்பங்களுக்குள் வாசுகி யான். (28)

நாகங்களில் நான் ஆதிசேஷன்; நீரில் வசிப்பவற்றுள் நான் வருணன்; பிதுர்க்களில் நான் அர்யமன்; நியாயாதிபதிக்குள் யமன் யான். (29)

அசுரருள் யான் பிரஹ்லாதன்; கணக்கெடுப்போரில் காலன் நான். மிருகங்களில் சிங்கம் யான்; பக்ஷிகளில் கருடன் யானே. (30)

தூய்மை செய்வோரில் நான் காற்று; ஆயுத மணிந்தோரில் பரசுராமன் யான்; மீன்களில் நான் திமிங்கிலம்; நதிகளுள் யான் கங்கையே. (31)

அர்ஜுனா! சிருஷ்டியின் முதலும், முடிவும், நடுவும் யான்; வித்யைகளில் நான் அத்யாத்ம வித்யை; தர்க்கம் செய்வோர்களின் தர்க்கம் யான். (32)

எழுத்துக்களில் அகரம் நான்; சொல்லிசைப்புக்களில் இரட்டை இசைப்பு யான்; முடிவற்ற காலம் நான்; எங்கும் வியாபித்து ஜகத்தைத் தாங்குவோன் யானே. (33)

எல்லோரையும் முறியடிக்கும் மரணம் யான்; வருங்காலத்தில் உண்டாகும் பொருள்களின் உற்பத்திக்குக் காரணம் யான்; பெண் பெயர் பூண்டோருக்குள் கீர்த்தி, லக்ஷ்மி, சரஸ்வதி, ஸ்மிருதி, புத்தி, த்ருதி, க்ஷமையும் யான். (34)

சாம கீதங்களுக்குள் பிருஹத்சாமம் யான்; செய்யுள்களுக்குள் யான் காயத்ரீ; மாதங்களில் நான் மார்கழி மாதம்; காலங்களில் வசந்த காலம் யான். (35)

சூதாடுவோரின் சூது யான்; சூரர்களின் வீரம் யான்; வெற்றி யான்; மன உறுதி நான்; சாதுக்களின் சத்துவ குணமும் யான். (36)

குறிப்பு :—சூதாடுவோர்களின் சூது யான் என்ற வாக்கியத்தைப் படித்து திடுக்கிட வேண்டியதில்லை. இவ்விடம் சூதின் நன்மை, தீமை ஆராயப்படவில்லை. இருப்பவையெல்லாம் கடவுள் ஆணையின்றி இருக்க முடியாதவை யென்று கூறப்பட்டிருக்கிறது. சூதாடுவோனும், எல்லாம் கடவுள் ஆதீனமென்று உணர்ந்தால் தனது அபிமானத்தை யிழந்து அத்துடன் சூதையும் விட்டுவிடுவான்.

விருஷ்ணி குலத்தில் பிறந்தவர்களுக்குள் நான் வாஸுதேவன்; பாண்டவர்களில் நான் தனஞ்ஜயன்; முனிவர்களுக்குள் வியாசர் நான்; கவிகளுக்குள் உசனு கவி யான். (37)

தண்டிப்போரின் தண்டனை நான்! வெற்றி வேண்டுவோரின் நீதியான்; ரகஸ்யங்களில் மௌனம் யான்; ஞானியின் ஞானமும் யானே. (38)

அர்ஜுனு! பிராணிகளெல்லாம் பிறப்பதற்கு யானே காரணம். என்னுலன்றி இவ்வுலகில் யாதொரு ஸ்தாவர, ஜங்கம பொருளும் உண்டாக மாட்டாது. (39)

பரந்தப! எனது ஒளி வடிவங்களுக்கு முடிவில்லை. மேற்கூறிய வடிவங்களை உதாரணங்களாகவே உரைத்தேன். (40)

சாந்தி யுள்ளதும், சீர் படைத்ததும், சக்தி வாய்ந்ததுமான பொருள் எதுவும் என் வல்லமையின் அம்சத்தால் உண்டாவதென்று உணரக் கடவாய்! (41)

அர்ஜுனா! ஆனால் இவைகளை விரிவாக அறிவதனால் உனக்கு என்ன பயன்? இப்பிரபஞ்ச மனைத்தையும் ஒரே அம்சத்தால் தாங்கி நிலைநிறுத்தியுள்ளேன். (42)

ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பகவத்கீதை என்ற உபநிஷத்தில் அதாவது பிரம்ம வித்தையுடன் கூடிய யோக சாஸ்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையின் விபூதி யோகம் என்ற பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

# 11. விஸ்வரூப தர்சன யோகம்



[இவ் வத்தியாயத்தில் பகவான் தனது விசுவ ரூபத்தை அர்ஜுனனுக்குத் தெரிவிக்கிறர். பக்தர்களுக்கு இவ் வத்தியாயம் அதிக பிரியமானது. இதில் தர்க்கங்கள் இல்லை. காவ்ய ரஸம் மட்டுமே நிரம்பியது. இவ் வத்தியாயத்தை எவ்வளவு தடவை படித்தாலும் சலிப்பு உண்டாகாது.]

அர்ஜுனன் சொல்லுகிறன் :—

*என்பேரில் அருள்புரிந்து ஆத்மாவின் நெறியைப் பற்றிய இந்தப் பரம ரகஸ்யத்தை உபதேசித்தீர்கள். உங்கள் சொல்லைக் கேட்டு எனது மயக்கம் தெளிந்து விட்டது.* (1)

*பிராணிகளின் உற்பத்தியையும், நாசத்தையும் பற்றி விவரமாகத் தங்களிடம் கேட்டறிந்து கொண்டேன். தாமரைக்கண்ணு ! அவ்வாறே உன் அழிவற்ற மகிமையையும் உணர்ந்தேன்.* (2)

*பரமேசுவரா ! உள்ளபடியே உங்களுடைய சொரூபத்தை விரித்துரைத்தீர்கள். புருஷோத்தமா ! அந்த ஈசுவர சொரூபத்தைக் கண்ணுல் காண விரும்புகின்றேன்.* (3)

நாயகா ! யோகேசுவரா ! அவ்வாறு நான் காண்பது கூடுமென்று நினைப்பீர்களாகில் அக் குறைவற்ற சொரூபத்தை எனக்குக் காட்டக்கடவீர். (4)

ஸ்ரீ பகவான் கூறுகிறர் :—

பார்த்தா ! பல்லாயிரக் கணக்கான என்து சொரூபங்களைப்பார். அவை நானுவிதங்களாகவும், ஜோதிமயமாகவும், பல வர்ணங்களும் வடிவங்களு முள்ளவைகளாகவும் இருப்பதை நோக்குவாய் ! (5)

பார்த்தா ! ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், ஜோடியான அசுவினி தேவதைகள், மருத்துக்கள் இவர்களனைவரையும் காண். இதற்கு முன் எவரும் கண்டிராத பல புதுமைகளைப் பார்க்கக்கடவாய் ! (6)

குடாகேசா ! சகல ஸ்தாவர ஜங்கமங்கள் கூடிய இப் பிரபஞ்சம் ஒன்று கூடி என் சரீரத்தில் இருப்பதைக் காண்பாய். இன்று வேறெதனை நீ பார்க்க விரும்புகின்றுயோ அதனையும் பார். (7)

உனது மனிதக்கண்ணுல் நீ என்னைக் காண ஆற்றல் பெருய். உனக்கு நான் தெய்வீகக் கண் தருகின்றேன். எனது ஈசுவர வல்லமையைப் பார். (8)

ஸஞ்ஜயர் கூறுகிறர் :—

அரசனே ! யோகேசுவரரான கிருஷ்ணன் பார்த்தனிடம் இவ்வாறு கூறித் தன் ஒப்பற்ற ஈசுவர சொரூபத்தைக் காண்பித்தார். (9)

அநேக முகங்கள் கொண்டதும், பல கண்களால் பார்ப்பதும், கணக்கில்லா அதிசயங்களுடையதும், பல திவ்ய ஆபரணங்கள் பூண்டதும், ஒளி வீசும் பல

ஆயுதங்களை ஏந்தி நிற்பதுமான அந்த சொரூபத்தை அர்ஜுனன் கண்டான். (10)

அவ் வுருவம் அநேக உயர்ந்த மாலைகளைத் தரித்து, பல உத்தம ஆடைக ளணிந்து, நல் மணங் கமழும் சந்தனம் பூசி நின்றது. அது இவ்வாறு எல்லா வகைகளிலும் ஆச்சர்யமயமாகவும், எல்லையற்றும், எங்கும் படர்ந்த தேவனாகத் தோன்றிற்று. (11)

வானத்தில் ஆயிரம் சூரியன்கள் ஒரே காலத்தில் உதித்து ஒளித்தால் உண்டாகும் ஜோதி, இப்பேருருவத்தின் பிரகாசத்தை ஒருவாறு விளக்கும். (12)

இந்த தேவாதி தேவன் உடலில் பாண்டு புத்திரனை அர்ஜுனன் இவ்வுலக முழுதும் ஓரிடம் கூடியிருப்பதைக் கண்டான். (13)

இவ்வாறு கண்டு வியப்பால் மயங்கி மயிர்க்கூச்சல் கொண்ட அர்ஜுனன் தலை வணங்கி இரு கரம் கூப்பிப் பின்வருமாறு கூறலானான். (14)

அர்ஜுனன் கூறுகிறன் :—

தேவனே ! நின் உடலில் தேவர்களையும், பலவித பிராணி சமூகங்களையும், தாமரையில் வீற்றிருக்கும் பிரம்ம தேவனையும், எல்லா மகரிஷிகளையும், திவ்ய சர்ப்பங்களையும் காண்கிறேன். (15)

பல கைகளும், வயிறுகளும், முகங்களும், கண்களும் கூடியவனாக உன்னைப் பார்க்கிறேன். விச்வேசுவரனே ! உனது விசுவரூபத்தை நான் தரிசிக்கின்றேன். (16)

கிரீடமணிந்து, கதை யேந்தி, சக்கரத்தை தரித்து, ஒளி மயமாய், எங்கும் பிரகாசிக்கும் ஜோதி யாய், காண்பதற்கரியதாய், அளவற்றதாய், ஜ்வலிக் கும் தீயையும், சூரியனையும் போன்று எல்லாத் திசை களையும் பிரகாசிக்கச் செய்யும் உன் சொரூபத்தை நான் பார்க்கின்றேன். (17)

அறிவின் பாத்திரனுன் பரம அழிவில்லா சொரூப னுகவும், ஜகத்தின் அந்திம ஆதாரமாகவும், நிலையுள்ள தர்மத்தின் அழியா ரக்ஷகனுகவும், பழம் பெரும் புருஷனுகவும் உன்னைப் போற்றுகின்றேன். (18)

முதல், நடு, முடிவு இம் மூன்றும் இல்லாதவனுய், அளவற்ற சக்தி யுடையோனுய், எல்லையற்று நீண்ட புஜத்தோனுய், சூர்ய சந்திரர்களை இரண்டு கண்க ளாகப் பெற்றவனுய், நெருப்பைப்போல் ஜ்வலிக்கும் முகத்தோனுய், உஷ்ணத்தால் இப் பிரபஞ்சத்தை எரிப்பவனுய் உன்னை நான் கண்ணுறுகின்றேன். (19)

வானத்திற்கும் பூமிக்கும் மத்தியிலுள்ள பிரதேச முழுதும், எல்லாத் திசைகளையும் நீ ஒருவனே வியாபித் திருக்கிருய். பரமாத்மாவே! இந்த உனது பயங்கர மான ஆச்சர்ய சொரூபத்தைக் கண்டு மூன்றுலகங் களும் நடுங்குகின்றன. (20)

இதர தேவதைகளின் கூட்டங்கள் உன் உடலில் நுழைகின்றன. அதோ பலர் பயந்து கைகூப்பி உனது புகழ் கூறுகின்றனர். இதோ மகரிஷிகளும், சித்தர் களும் இவ்வுலகின் நன்மையை வேண்டிப் பலவாறு உனது கீர்த்தியைப் பாடுகின்றனர். (21)

ருத்ரர், ஆதித்தியர், வசுக்கள், ஸாத்ய கணங்கள், விச்வே தேவர்கள், அச்வினி குமாரர்கள், மருத்துக்கள், உஷ்ணத்தை விரும்பும் பிதிர்க்கள், கந்தர்வர், யக்ஷர், அசுரர், சித்தர் கூட்டங்கள் இவரனைவரும் வியப் படைந்து உன்னைப் பார்த்த வண்ணமாகவே யிருக் கின்றனர். (22)

பெரும்புயத்தோனே! பல முகங்களும், கண்க ளும், கைகளும், முழங்கால்களும், பாதங்களும், உதரங் களும், பல கோரப்பற்களும் உடையதாய் பரந்து பயங் கரமாக விருக்கும் உனது உருவத்தைக் கண்டு உலகு மனக்கலக்க முறுகிறது. நானும் நடுங்கு கின்றேன். (23)

வான மளாவி, ஜ்வலித்து, பல வர்ணங்களுடன், விரித்த வாய்களோடு, விசாலமான ஒளி வீசும் கண்க ளுடைய உன்னைக் கண்டு, ஓ விஷ்ணுவே! எனது இருதயம் தளர்ச்சி யடைகிறது. தைர்யத்தையும், சாந்தியையும் அடைகிலேன். (24)

பிரளய காலத்து அக்நியைப்போல் நடுங்கச்செய் யும் கோரப் பற்களையுடைய உன் முகத்தைப் பார்த்து எனக்குத் திசைகள் தோன்றவில்லை, மனதில் சமா தானமும் ஏற்படவில்லை. ஆதலால், தேவர் தேவனே! உலக நாயகனே! அருள்வாய். (25)

மன்னர் சமூகங்களுடன் திருதராஷ்டிர புத்திரர் களும், பீஷ்மர், துரோணாசாரியர், சூத புத்திரனை கர்ணன், நம் பக்கத்திய முக்கிய தலைவர்கள், இவர்க ளனைவரும் உனது பயங்கரப் பற்கள் கொண்ட வாயில் பிரவேசிப்பதைப் பார்க்கிறேன். அவர்களில் பலர் உனது பற்களில் அகப்பட்டு பொடியாவதை யும் காண்கிறேன். (26-27)

வெள்ளம் பெருகி நதிகள் கடலை நோக்கிச் செல்வதுபோல் உன் விரிந்த வாயில் இப் பூசுரர்கள் நுழைகின்றனர். (28)

விளக்குப்பூச்சி அதி வேகத்துடன் எரியும் விளக்கில் விழுந்து மடிவதுபோல எல்லா மனிதரும் உன் முகத்தை விரைவாகப் பிரவேசிக்கின்றார்கள். (29)

நாலு பக்கங்களி லிருந்து உயிர்களைப் பிடித்து உன் எரியும் முகத்தால் நக்குகின்றாய். எங்கும் நிறைந்த விஷ்ணுவே! சகிக்க முடியாத உனது பிரகாசத்தால் உலக முழுதையும் ஜோதியால் நிரப்பித் தவிக்கச் செய்கிறாய். (30)

தேவ சிகாமணியே! உக்ர வடிவமுள்ள நீ யாரென்று எனக்கு உரைக்கக் கடவாய். நீ அருளல் வேண்டும். ஆதிமூலமான உன்னை நன்குணர விரும்புகின்றேன். உன் போக்கை அறிகிலேன். (31)

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

உலகை சம்ஹரிக்கும் பொருட்டு ஓங்கி வளர்ந்த காலன் யான்; பல்லுலகங்களையும் நாசம் செய்யவே இங்கு நான் வந்துள்ளேன். நீ போர்புரிய மறுப்பினும், இருபடைகளிலும் சேர்ந்து இங்கு திரண்டிருக்கும் வீரர்கள் தப்ப மாட்டார்கள். (32)

ஆதலினால், எழுந்து நில்! புகழ்பெற்று, சத்துருக்களை வென்று சீரும் சிறப்பும் நிரம்பிய ராஜ்யத்தை யடைந்து மகிழ்ச்சியடை! — நான் இவர்களை ஏற்கனவே கொன்று விட்டேன். ஓ சவ்யஸாசி! நீ வெறும் நிமித்த காரணமாகக் கடவாய்! (33)

துரோணர், பீஷ்மர், ஜயத்ரதர், கர்ணன் முதலோரையும், இதர வீரர்களையும் நான் கொன்று விட்டேன். அவர்கள் பேரில் அம்பு எய்தி மாய்ப்பாயாக! துயரப்படாமல் போர்புரிவாயாக! உனது எதிரிகளைப் போரில் வெல்லுவாய். (34)

ஸஞ்ஜயர் கூறுகிறர் :—

கேசவனது இம் மொழிகளைக் கேட்டு கிரீடம் தரித்த அர்ஜுனன் கைகூப்பி, பலமுறை நமஸ்காரம் செய்து, மிகப்பயந்து, வழிபட்டு, வாய் பிதற்றி இவ்வாறு கூறுவான். (35)

அர்ஜுனன் கூறுகிறன் :—

ஹிருஷீகேசா! நினது புகழ்பாடி உலகம் மகிழ்ச்சியடைந்து உன்னை நேசிப்பது நியாயமே. இராக்ஷஸர்கள் பயந்து அங்குமிங்கும் சிதறி ஓடுகின்றனர். சித்தர்களின் கூட்டங்களனைத்தும் உன்னை வணங்குகின்றன. (36)

மகாத்மனே! அவர்கள் ஏன் உன்னைத் தொழார்? பிரமனிலும் மேலான ஆதிகர்த்தா நீயே. எல்லையற்றவனே! தேவர்தேவனே! உலகின் புகலிடமே! நீ அழிவில்லாதவன். மாருமல் இருப்பவன். மாறுதலடைபவனும் நீ. இவ்விரண்டிற்கும் அப்பால் இருப்பவனும் நீயே. (37)

ஆதிதேவன் நீ; பழம் பரம்பொருள் நீ; இப்பிரபஞ்சத்தின் முடிவான நிலயம் நீ; அறிஞன் நீ; அறிவின் பாத்திரன் நீ; பரமபதம் நீ; கணக்கிலா வடிவுடையோனே! இவ் வுலகு உன்னல் நிரம்பியிருக்கின்றது. (38)

வாயு, யமன், அக்நி, வருணன், சந்திரன், பிரஜாபதி, பிரமன் எல்லோரும் நீயே! உனக்குப் பல்லாயிரம் பல்லாண்டு கூறுகின்றேன். திரும்பத் திரும்பவும் உன்னைத் தொழுகின்றேன். (39)

சர்வ சொரூபனே! முன்னிருந்தும், பின்னிருந்தும், நாலுபக்கங்களி லிருந்தும் உன்னை நமஸ்கரிக்கின்றேன். உனது வீர்யத்திற்கு அளவில்லை; சக்திக்கு எல்லை யில்லை. எல்லாப் பொருள்களையும் நீயே தாங்குகின்ருய். ஆகலால் நீ சர்வ சொரூபனுவாய். (40)

தோழன் என்றெண்ணி உனது மகிமை யறியாது, கிருஷ்ண! யாதவா! நண்பா! என்று பலவாறழைத்து அறிவின்றி அன்பால் செய்த பிழையையும், உன்னேடு கூடி விளையாடி, உறங்கி வீற்றிருக்கும் பொழுது நானிழைத்த ஏளனத்தையும் மன்னித்தருள வேண்டுமாறு உன்னைப் பிரார்த்திக்கின்றேன். (41-42)

ஸ்தாவர ஜங்கம பொருள்களடங்கிய இப்பிரபஞ்சத்தின் தந்தை நீ. அது வழிபடும் உயர் குருவும் நீ. உனக் கிணையானவர் யாருமில்லை யெனில், உனக்கு மேலானவர் இருப்பரோ? மூன்று உலகங்களிலும் உனக்குச் சமானமான ஆற்றல் உள்ளவர் ஒருவருமில்லை. (43)

ஆகையால், உன் பாதம் பணிந்து தொழுது அருள் புரியுமாறு மகேசுவரனை உன்னை வேண்டுகின்றேன். தேவனே! தந்தை மகனிடத்திலும், தோழன் மித்திரன்பாலும் பெருமை கொள்வதுபோல் என் அன்பனை நீயும் நான் உய்யுமாறு என்னை சகித்தருளல் வேண்டும். (44)

இதுகாறும் கண்டிராத இவ்வடிவத்தைக் கண்டு எனக்கு மயிர்க்கூச்சல் உண்டாகிறது. பயத்தினால் என் மனம் துன்புறுகின்றது. ஆதலால், ஓ தேவனே! உன் பழைய வடிவைக் காண்பித்தருள்வாய். தேவர் கோனே! எங்கும் நிறைந்தோனே! கருணை கூர வேண்டும். (45)

முன்போல் கிரீடமும், கதையும், சக்ராயுதமு மணிந்த உன்னைப் பார்க்க அவாவுள்ளேன். பல்லாயிர புஜத்தோனே! விஸ்வமூர்த்தியே! நான்கு கைகள் கொண்ட வடிவை மீண்டும் ஏற்றுக்கொள்வாய். (46)

ஸ்ரீ பகவான் கூறுகிறர் :—

அர்ஜுனா! உன்பேரில் அருள்கொண்டு எனது சக்தியால் ஜோதிமயமான, எங்கும் வியாபித்த, எல்லையற்ற, பரம, ஆதி சொரூபத்தைக் காண்பித்தேன். உன்னை யல்லாது வேறெவரும் இதற்கு முன் இச் சொரூபத்தைக் கண்ட தில்லை. (47)

கௌரவோத்தமா! வேதமோதியும், வேள்விகள் இயற்றியும், பல சாஸ்திரங்களை ஆராய்ந்தும், தானம் கொடுத்தும், தர்மம் செய்தும், கொடிய தவம் புரிந்தும் கூட இவ் வுருவத்தை உன்னைத் தவிர மற்றெவரும் காண ஆற்றல் பெற்றதில்லை. (48)

பயங்கரமான இவ் வடிவத்தைப் பார்த்து நீ அச்சங் கொள்ளாதே. சித்தங் கலங்காதே. பயத்தை ஒழித்து சாந்த மனத்தானாகி எனது பழைய சொரூபத்தைக் காண். (49)

ஸஞ்ஜயர் கூறுகிறார் :—

அர்ஜுனனிடம் இவ்வாறுரைத்து வாஸுதேவன் மறுமுறை தனது வடிவத்தைக் காட்டினார். சாந்த சொரூபத்தை ஏற்று அச்சத்தால் நடுங்கும் அர்ஜுன னைத் தேற்றினார். (50)

அர்ஜுனன் சொல்லுகிறான் :—

ஜனார்த்தனா! உனது இவ்வழகிய மனித வடிவைக் கண்டு நான் மன அமைதி அடைந்து நல் நினைவு பெற்றேன். (51)

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

உன்னால் பார்க்கப்பட்ட எனது சொரூபம் காண் பதற்கரிது. தேவர்களும் இவ் வடிவத்தைக் காண விரும்புகிறார்கள். (52)

நீ கண்ட இக் காட்சியை வேதத்தாலும், தவத் தாலும், தானத்தாலும், யக்ஞத்தாலும் காண முடியாது. (53)

அர்ஜுனா! பரந்தபா! ஆனால் என்னைப் பற்றிய இந்த ஞானமும், இக்காட்சியும், என்னிடம் உட்புகுத லும், வேறிடம் செல்லாத உண்மையான பக்தி ஒன்றால் கிடைக்க வல்லது. (54)

பாண்டவா! எல்லாக் கர்மங்களையும் எனக்கு அர்ப்பணம் செய்வோன்; என்னைச் சரண் புகுந்

தவன்; எனது பக்தன்; பற்றை ஒழித்தவன்; உயிரிடம் வெறுப்பின்றி வாழ்வோன்; இவனே என்னை அடைவான். (55)

ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில் —
அதாவது பிரம்ம வித்தையோடு கூடிய யோகசாஸ்தி
ரத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையின் விஸ்வரூப
தர்சன யோகம் என்ற
பதினோராம் அத்தியாயம்
முற்றிற்று.

---

# 12. பக்தி யோகம்



'புருஷோத்தமனுடைய தர்சனம் வேறிடம் செல்லாத பக்தியினால் உண்டாகிறது.' பகவான் இவ்வாறு கூறியிருப்பதனால் பக்தியின் சொருபத்தை அறிந்து கொள்ள வேண்டும். இந்த பன்னிரண்டாம் அத்தியாயத்தை எல்லோரும் மனப்பாடம் செய்ய வேண்டும். இது மிகவும் சிறிய அத்தியாயம். இதில் கூறப்பட்டிருக்கும் பக்தியின் லக்ஷணங்கள் தினந்தோறும் பாடம் செய்யத் தகுந்தவை.]

அர்ஜுனன் சொல்லுகிறான் :—

*இவ்வாறு உன்னை ஓயாமல் தியானம் செய்து வழி படுவோன், நினது அழிவற்ற அவ்யக்த வடிவத்தை தியானம் செய்வோன், இவ்விருவர்களில் சிறந்த யோகி எவன்?* (1)

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

*என்னிடம் மனத்தை நிறுத்தி இடைவிடாமல் சிந்தித்து என்னைச் சிரத்தையுடன் வழிபடுவோனே மிகச் சிறந்த யோகியென்று அபிப்பிராயப் படுகின்றேன்.* (2)

புலன்களனைத்தையும் வசப்படுத்தி, எங்கும் சமதத்துவ புத்தியை அவலம்பித்து, உறுதியான, அசைவற்ற, கம்பீரமான, மனதிற் கெட்டாத, எங்கும் நிறைந்த, வாக்கால் வர்ணிக்கத்தகாத, நாசமற்ற சொரூபத்தை வழிபடுவோர் சர்வ பிராணிகளுக்கும் அருள் புரிவோனான என்னையே அடைவார்கள். (3-4)

எவனது மனம் அவ்யக்தத்தை நோக்கி நிற்கின்றதோ, அவனுடைய கஷ்டம் அதிகமாகவிருக்கும். உடல் தாங்கிய மனிதன் அவ்யக்தத்தின் கதியை வெகு சிரமப்பட்டே அடைய முடியும். (5)

குறிப்பு :—சரீரமுள்ள மனிதன் உருவமில்லாத சொருபத்தை கற்பனையாலல்லவோ அறியவேண்டும். ஆனால் அவனிடம் உருவமில்லாத சொரூபத்தை விளக்க ஐயமற்ற சொல் யாதொன்றும் கிடையாது. ஆகையால் மற்றப் பொருள்களை விலக்கும் 'நேதி, நேதி' ('இல்லை, இல்லை') யென்ற சொல்லோடு திருப்தியடைய வேண்டி யிருக்கின்றது.

ஆகையால் விக்ரஹ பூஜையை வெறுப்பவர்களும் நுட்பமாக ஆராய்ந்து பார்க்கின் மூர்த்தி பூஜை செய்பவர்களாகவே யிருப்பார்கள். புஸ்தகத்தைத் தொழுவது; கோயிலில் வழிபடுவது; ஒரு திக்கை நோக்கிப் பூஜைசெய்வது; இவையெல்லாம் மூர்த்தி பூஜையின் லக்ஷணங்கள். அவ்வித மிருந்தபோதிலும், மூர்த்திகளின் எல்லையைக் கடந்து வடிவமற்ற மனதிற் கெட்டாததோர் சொரூபம் இருக்கின்றதென்று எல்லோரும் ஒப்புக்கொள்ள வேண்டியதே. பகவானிடம் லயமடைந்து முடிவில் ஒரே அத்விதீய உருவற்ற பரம்பொருளே மிஞ்சி யிருப்பது பக்தனு

டைய கடைசி எல்லை. ஆனால், இந் நிலையை மூர்த்தி பூஜை வாயிலாக எளிதில் அடையக்கூடும். ஆதலால், அவ்யக்தப் பொருளை நேரில் அடையும் வழி மிகவும் கடின மென்று கூறப்பட்டிருக்கிறது.

பார்த்தா! ஆனால், என்னிடம் சரண்புகுந்து எல்லாக் கர்மங்களையும் எனக்கு அர்ப்பணம் செய்து, ஒரே நிலையில் சிந்தித்து என்னை வழிபட்டு என்னிடம் தன் மனத்தைத் திருப்பியவனை இந்தப் பிறவிக் கடலிலிருந்து சீக்கிரம் கரையேற்றுகின்றேன். (6-7)

உன் மனத்தை என்னிடம் பதியவை; உன் மதியை என்மீது செலுத்து; இப்பிறவி தீர்ந்ததும் ஐயமின்றி என்னையே சேருவாய்! (8)

தனஞ்ஜய! என்னிடம் உன் மனத்தை ஸ்திரமாகவைக்கும் ஆற்றல் இல்லாவிடில், யோகாப்பியாசத்தால் என்னை அடைய விரும்பக்கடவாய்! (9)

இவ்வாறு யோகாப்பியாசம் செய்வதிலும் சக்தியில்லாதவனாக இருப்பின், உன் கர்மங்களை எனக்கு அர்ப்பணம் செய்; இப்படி என் பொருட்டு கர்மமியற்றிக்கொண்டே மோக்ஷம் பெறுவாய்! (10)

எனக்காகக் கர்மம் புரிவதற்கும் முடியாதவனாயிருப்பின், நீ செய்யும் கர்மங்களின் பலன்களையேனும் துறப்பாயாக! (11)

யோகாப்பியாச வழியைக் காட்டிலும், ஞான மார்க்கம் மேலானது; ஞான மார்க்கத்திலும் தியான மார்க்கம் சிறந்தது; தியான மார்க்கத்திலும் பலனைத் துறக்கும் வழியே உயர்ந்தது. (12)

குறிப்பு :—அப்பியாசமாவது சித்தத்தின் போக்குகளை அடக்கும் சாதனம். ஞானமாவது காதால் கேட்டு, மனத்தால் சிந்தித்தல், தியானமாவது பூஜை. இவைகளின் பயனாக கர்ம பலத்தை துறக்கும் சக்தி உண்டாகாம லிருந்தால், அப்பியாசம் உண்மையான அப்பியாசமல்ல; ஞானம் ஞானமல்ல; தியானமும் தியானமல்ல.

எல்லாப் பிராணிகளிடத்தும் துவேஷமற்றவன்; உலக மித்திரன், கருணா மூர்த்தி; 'எனது' என்னும் உணர்ச்சி யில்லாதவன்; அகங்காரத்தை ஒழித்தவன்; சுகதுக்கங்களை சமமாகப் பாவிப்பவன்: பொறுப்பை யுடையோன்; என்றும் அகமகிழ்ச்சி யுள்ளவன், யோகவழி நிற்போன்; புலன்களை வசமாக்கியவன்; உறுதியான கொள்கை கொண்டவன்; தன் மனத்தையும் மதியையும் எனக்கு அர்ப்பணம் செய்தவன்; இவ்வித பக்தன் எனக்குப் பிரியமானவன். (13-14)

எவனைக்கண்டு உலகம் ஆத்திரப்பட மாட்டாதோ, எவன் மற்றவர்களிடம் கோபங் கொள்ளானோ, எவன் மகிழ்ச்சி, கோபம், அசூயை, பயம், மனக்கொதிப்பு முதலிய மனோபாவங்களிட மிருந்து விடுதலை யடைந்தானோ அவனே எனது அன்பன். (15)

இச்சைக ளொழித்தவனாய், தூயவனாய், தன் கடமையைச் செய்வதில் வல்லவனாய், சமநிலை யடைந்தவனாய், கவலை யற்றவனாய், எல்லா ஆசைகளையும் துறந்தவனாய் இருப்பவன் எனது பக்தன். அவனே எனது அன்பன். (16)

மகிழ்ச்சியால் மயக்கமடையாது, எதனிடத்தும் வெறுப்பின்றி, கவலையற்று, ஆசைகளால் கட்டுப் படாது, இனியவும் அற்றவுமான உணர்ச்சிகளைத் துறந்து என்னிடம் அளவற்ற பக்தியுள்ளவனே என தன்பன். (17)

சத்துருக்கள் மித்திரர்கள்; மானம் அவமானம், சீதம் உஷ்ணம்; சுகம் துக்கம்; இவைகளெல்லாவற் றிலும் நடு நிலைமை வகித்துப் பற்றைவிட்டு, புகழையும் இகழையும் ஒன்ருகக் கருதி, மௌனமாய், பிரயாசை யின்றிக் கிடைத்த பொருளைக்கொண்டு திருப்தி யடைந்து, எவ்விடத்தையும் தன் வீடாகக் கருதாது, ஸ்திரமான சித்தமுடைய முனிவனே என தன்பன். (18-19)

என்னைச் சரணமடைந்து இத் தூய அமிர்த மய மான ஞானத்தை சிரத்தையுடன் ஏற்றுக்கொள்ளும் பரம பக்தர்களே எனது விசேஷ அன்பிற்குப் பாத்திர மாவார்கள். (20)

ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில் —
அதாவது பிரம்ம வித்தையோடு கூடிய யோகசாஸ்தி
ரத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையின் பக்தி யோகம்
என்ற பனிரெண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

# 13. க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்



[இவ் வத்தியாயத்தில் சரீரத்திற்கும் அதில் வசிக்கும் ஆத்மாவுக்கும் உள்ள பேதம் காட்டப்படுகிறது. ]

ஸ்ரீ பகவான் கூறுகிறர் :—

கௌந்தேயா! இவ்வுடலை க்ஷேத்திர மென்றும், இதை அறிவோனை க்ஷேத்திரக்ஞன் என்றும் தத்துவ ஞானிகள் உபதேசிக்கின்றனர். (1)

பாரதா! எல்லா க்ஷேத்ரங்களிலும் (உடல்களிலும்) வசிக்கும் க்ஷேத்திரக்ஞன் யானே என்றறிவாயாக! க்ஷேத்ரத்திற்கும் க்ஷேத்திரக்ஞனுக்குமுள்ள பேதத்தை உணர்த்தும் ஞானமே உண்மையான ஞான மென்பது என் கொள்கை (2)

இந்த க்ஷேத்ரம் யாது? எத்தன்மையது? எவ்வித விகாரங்களை யுடையது? க்ஷேத்திரக்ஞன் எவன்? அவனது சக்தி என்ன? இவ் வரலாற்றை நான் சுருங்கச் சொல்லக் கேட்பாய். (3)

பல வேதப் பாடல்களில் வெவ்வேறு விதமாகவும், பிரம்ம ஸூத்ர வாக்யங்களில் நிச்சயமாகவும், உதாரணங்களோடு கூடிய யுக்திகளுடன் மகரிஷிகள் இவ் விஷயத்தைப் பெரிதும் பாடி யுள்ளனர். (4)

மகாபூதங்கள், அகங்காரம், புத்தி, பிரகிருதி பத்து இந்திரியங்கள், மனம், ஐந்து விஷயங்கள், இச்சை, துவேஷம், சுகம், துக்கம், ஸங்காதம், சேதனுசக்தி, த்ருதி இவ்வாருன தனது விகாரங்களோடு கூடியது க்ஷேத்ர மென்று சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது. (5-6)

குறிப்பு :—மகாபூதங்கள் ஐந்து—பூமி, ஜலம், தேஜஸ், காற்று, ஆகாசம். அகங்காரமாவது சரீரத்திற்குள் 'நான்' என்று நினைக்கும் தன்மை. அவ்யக்தம் அல்லது ஐம் புலன்களுக் கெட்டாது இருக்கும் மாயையே பிரகிருதி யென்பது. பத்து இந்திரியங்களாவன :— ஐந்து ஞானேந்திரியங்கள்–மூக்கு, காது, கண், நாக்கு, தோல். அவ்வாறே ஐந்து கர்மேந்திரியங்கள் :— கை, கால், முகம், மலங் கழிப்பதற்கும் காமத்திற்குமான இந்திரியங்கள் இரண்டு. ஐந்து விஷயங்களாவன :— ஐந்து ஞானேந்திரியங்களின் செயல்கள் — நுகர்தல், கேட்டல், பார்த்தல்; ருசித்தல், தொடல், ஸங்காதம் என்ருல் உடலின் தத்துவங்கள் ஒன்றை யொன்று தழுவியிருக்கும் சக்தி. திருதியென்பது, தைர்ய மென்ற சூட்சும குணமன்று. சரீரத்திலுள்ள பரம அணுக்கள் ஒன்றை யொன்று ஒட்டிக்கொண்டிருக்கும் குணம். இக்குணம் அகம்பாவத்திலிருந்து உண்டாகிறது. அகங்காரம் பிரகிருதியி லிருந்து உண்டாகிறது. இவ் வகங்காரத்தின் உண்மையை, மோகம் தெளிந்த மனிதன் அறிந்து அதைத் தியாகம் செய்கிருன். இக் காரணத்தால்

மரண காலத்திலும், மற்றக் கஷ்டங்களிலும் துயரப் படான். ஞானி அஞ்ஞானி அனைவரும் முடிவில் நிலை யில்லாத இந்த க்ஷேத்திரத்தை விட்டே தீரவேண்டும்.

அபிமானமில்லாமை, டம்பமில்லாமை, அஹிம்சை, பொறுமை, நேர்மை, குருசேவை, தூய்மை, உறுதி, புல னடக்கல், இந்திரிய விஷயங்களில் வைராக்கியம், அகங் காரமில்லாமை, பிறப்பு, இறப்பு, கிழத்தனம், வியாதி, துக்கம், இதர தோஷங்களின் தன்மையை இடை விடாது சிந்தித்தல், புத்திரன், மனைவி, வீடு இவை களில் மோகமும், எனது என்ற எண்ணமும் இல்லாமை ; இன்பத்திலும் துன்பத்திலும் என்றும் சம பாவம் ; மற்றெவ்விடமும் செல்லாது தியானத் துடன் ஒரே நிலையில் என்பால் நிற்கும் பக்தி ; தனி மையாக இருத்தல், ஜனக்கூட்டத்தில் இருக்க விருப்ப மில்லாமை, அத்யாத்ம ஞானத்தை அனவரதமும் தியானித்தல், ஆத்ம நிலை எய்தல்—இவையனைத்தும் ஞானமென்று சொல்லப்படுகிறது. (7-8-9-10-11)

எதை யறிந்தால் மோக்ஷமடையக் கூடுமோ அதுவே ஞனத்திற்கு லக்ஷ்யமானது. அது என்ன வென்று உனக்குரைக்கின்றேன். அதுவே ஆதியில் பிரம்மம். அதை சத் (இருப்பது) என்றும் சொல்லத் தகாது. அசத் (இல்லாதது) என்றும் கூறமுடியாது. (12)

குறிப்பு :—ஈசுவரனை ஸத் அல்லது அஸத் என்று இருவித மாகவும் சொல்ல முடியாது. எந்தத் தனிச் சொல்லா லும் அதனை விளக்கவோ, குறிக்கவோ சாத்தியப் படாது. அதன் சொரூபம் இவ்வாறு குணங்களைக் கடந்து இருக்கிறது.

பார்க்குமிட மெல்லாம் அதன் கைகள், கால்கள், கண்கள், தலைகள், முகங்கள், காதுகள் ; இவ்வுலகில் அது எங்கும் நிரம்பி யிருக்கின்றது. (13)

எல்லா இந்திரியங்களின் குணங்களும் அதனைச் சேருகின்றன. ஆயினும் அது இந்திரியமற்ற சொரூபம். இந்திரிய விஷயங்கள் அதைத் தீண்டுவதில்லை. எல்லாவற்றையும் தாங்கி நிற்பதும் அது குணமற்றதாக விருந்தும் அவைகளை அனுபவிப்பதும் அதுவே. (14)

பூதங்களுக்கு வெளிப்பட்டது. அவைகளுக்குள்ளும் இருப்பது. விரைந்து செல்லுவது அது. அசையாமல் நிற்பதும் அது. நுட்பமானதால் அறிவுக் கெட்டாதது. அது தூரத்திலுள்ளது. சமீபத்திலும் இருப்பது. (15)

குறிப்பு :—அதனை அறிபவன் அதனுள்ளே இருக்கின்றான். போவதும், நிற்பதும், சாந்தியுடனிருப்பதும், சாந்தியில்லாமல் தவிப்பதும் நமது வாழ்க்கையில் அனுபவிக்கிறோம். எல்லா மனோபாவங்களும் அதனிடமிருந்தே உண்டாகின்றன. ஆகையால் போவதும், நிற்பதும் அது என்று கூறப்பட்டுள்ளது.

பூதங்களுக்குள் அது ஒன்றாகவும், பலவாகவும் காணப்படுகிறது. நமது அறிவுக்குப் பாத்திரமானது அதுவே. பிராணிகளை ரக்ஷிப்பதும், அழிப்பதும், ஆக்குவதும் அதுவே. (16)

ஜோதிகளுக்கெல்லாம் மூலமான ஜோதி அது. இருட்டிற்கு அப்பால் உள்ளது. அது ஞானம். அறியத்தகுந்தது அது ஒன்றே. ஞானத்தால் அறியப்படுவதும் அது. அது எல்லோருடைய இருதயத்துள்ளும் வசிக்கின்றது. (17)

க்ஷேத்திரம், ஞானம், ஞானத்தின் இலக்கு இவைகளைச் சுருங்கக் கூறியுள்ளேன். இதை உணர்ந்த எனது பக்தன் என் தன்மையை பெறத் தகுந்தவனாவான். (18)

பிரகிருதி, புருஷன் இரண்டும் ஆதி யில்லாதவை யென்றறிவாய்! விகாரங்களும், குணங்களும் பிரகிருதியிலிருந்து உண்டாகின்றன. இதை நீ உணரக் கடவாய்! (19)

கார்யத்திற்கும் அதன் காரணத்திற்கும் ஏதுவாக விருப்பது பிரகிருதி யென்று கூறுகின்றனர். சுக துக்கங்களை அனுபவிப்பதற்கு ஆதாரமாக விருப்பது புருஷன் என்று உரைக்கின்றனர். (20)

பிரகிருதிக்குள் வசிக்கும் புருஷன் பிரகிருதியினின்று உண்டாகும் குணங்களை அனுபவிக்கின்றான். இவ்வாறு குணங்களுடன் சேர்தலே, நல்லதும் தீயதுமான பிறப்புகளின் காரணமாகின்றது. (21)

குறிப்பு :—பிரகிருதியை ஜனங்கள் சாதாரண பாஷையில் மாயை என்று சொல்லுகிறார்கள். புருஷன் ஜீவன். மாயை அல்லது மூலபிரகிருதி வசப்பட்ட ஜீவன், சத்துவ, ரஜ, தமோகுணங்களை மேற்கொண்டு கர்மங்கள் புரிந்து அவைகளின் பலன்களை அடைகின்றான். இக் கர்மங்களை யனுசரித்தே மறு பிறப்புகளும் அவனுக்கு உண்டாகின்றன.

இவ்வுடலில் இருக்கும் பரமபுருஷனை சர்வசாக்ஷி, அனுமதி கொடுப்போன், எஜமானன், அனுபவிப்பவன், மகேசுவரன், பரமாத்மா வென்று பலவாறு கூறுவார்கள். (22)

இவ்விதம் புருஷனையும், குணவடிவமுள்ள பிர கிருதியையும் அறியும் மனிதன் எல்லாவித கர்மங்களை யும் செய்து கொண்டிருப்பினும் பிறவிக்கடல் புகான். (23)

குறிப்பு :—2, 9, 12, முதலிய அத்தியாயங்களைப் போலவே இச் சுலோகத்திலும், மனம் போனவாறு கர்மம் செய்வதை உபதேசிக்கவில்லை யென்று அறியக்கூடும். பக்தியின் மகிமையை உபதேசிப்பது இதன் நோக்கம். வெறும் கர்மம் பந்தப்படுத்தக் கூடியது; ஆனால், அக் கர்மங்களனைத்தையும் பரமாத்மாவுக்கு அர்ப்ப ணம் செய்தால் பந்தத்திலிருந்து மனிதன் விடுதலை யடைகிறான். இவ்வாறு எவன், தான் கர்த்தாவென்ற எண்ணத்தை இழந்து, அந்தர்யாமியான பரமாத்மாவை இடைவிடாமல் சிந்திப்பானோ அவன் எவ்வித தீச் செயல்களையும் புரியான். பாபத்தின் மூலம் அபி மானம். 'நான்' என்ற நினைவு இல்லாத விடத்தில் தீங்குமில்லை. இந்த சுலோகம் தீச்செயல் புரியாதிருக் கும் நெறியைக் காண்பிக்கின்றது.

சிலர் தியான மார்க்கத்தால் தன் ஆத்மாவைக் கொண்டு பரமாத்மாவைத் தன்னிடம் பார்க்கின்றனர். வேறு சிலர் ஞான மார்க்கத்தாலும், மற்றும் சிலர் கர்ம மார்க்கத்தாலும் காண்கின்றனர். (24)

இம் மார்க்கங்களை அறியாதார் பிறரிட மிருந்து பரமாத்மாவின் தன்மையைக் காதால் கேட்டு, கேட் டதை நம்பி, அதைச் சார்ந்து வழிபடுவோராயின் அவர்களும் இறவாதவு ராவார். (25)

பரதரேறே! இப் பிரபஞ்சத்தில் உண்டாகும் ஸ்தாவர ஜங்கம பொருள்களெல்லாம் க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞன், அதாவது பிரகிருதி, புருஷன் இவைகளின் சேர்க்கையால் உண்டாகின்றனவென்று அறியக்கடவாய்! (26)

அழிவற்ற பரமேசுவரன் அழிவுள்ள எல்லாப் பிராணிகளின் நடுவில் சம நிலையுடன் இருக்கின்றான். அவனை அறிவோனே அறிஞன். (27)

எங்கும் நிறைந்து சமநிலையில் இருக்கும் ஈசுவரனை எவன் காண்கிறானோ அவன் தனக்குத்தானே தீங்கு புரிந்து கொள்ளான். இதனால் அவன் பரமபதத்தை யடைவான். (28)

குறிப்பு:—சமபாவத்துடன் இருக்கும் ஈசுவரனைப் பார்ப்போன் அவனிடம் லயமாகி வேறொன்றையும் பார்க்க மாட்டான். இதனால் மன விகாரங்களற்று மோக்ஷமடைகிறான். தனக்குத் தானே எதிரி யாகான்.

எல்லா விடங்களிலும் பிரகிருதி ஒன்றே கர்மத்தைச் செய்கிறது. இதை யறிந்து தன் ஆத்மா, கர்த்தாவல்ல வென்றுணர்வோனே உண்மையை அறிகிறான். (29)

குறிப்பு:—இது எங்ஙனம்? தூங்கும் மனிதனுடைய ஆத்மா நித்திரை செய்வதில்லை. அவனுடைய பிரகிருதியே தூங்கும் கர்மத்தைச் செய்கிறது. மற்றதும் அவ்வாறே. விகாரமற்ற மனிதனுடைய கண்கள் காணத் தகாதவைகளைப் பார்க்காது. பிரகிருதி மாறுதலடையும் தன்மை யுடையது. அபிமான முள்ள

புருஷன் தன்னை அதன் நாயகனாக நினைக்கும்பொழுது அதன் சேர்க்கையால் விஷய விகாரங்கள் உண்டாகின்றன.

ஜீவன்கள் தனித்தனியாகப் பிரிவுபட்டு இருப்பினும் அவைகள் ஒரே பரம்பொருளில் நிலைபெற்றிருப்பதை ஆராய்ந்து இப் பிரபஞ்ச மனைத்தும் அதனிடமிருந்தே உற்பத்தி ஆனதென்று உணர்வோன் பிரமத்தைச் சேருவான். (30)

குறிப்பு :—அனுபவத்தால் எல்லாவற்றையும் பிரம்மத்தினிடம் காண்பதே பிரம்மத்தை அடைதல் என்று கூறப்படுவது. அச்சமயம் ஜீவன் பரமாத்மாவிடமிருந்து வேறுபட்டிருப்பதில்லை.

கௌந்தேயா ! விநாசமற்ற இந்த பரமாத்மா அனாதியாகவும், குணமில்லாத தாகவும் இருப்பதால் அது ஒன்றையும் செய்வதில்லை. ஒன்றிலும் கலந்து கொள்வதுமில்லை. (31)

எங்கும் நிறைந்திருந்து, ஆகாசம் எதிலும் எவ்வாறு ஒட்டிக் கொள்வதில்லையோ அவ்வாறே உடல் முழுதும் வியாபித்திருந்தும், ஆத்மா அவ்வுடலில் கலப்பதில்லை. (32)

பார்த்தா ! ஒரே சூரியன் உலக முழுதையும் ஒளியால் பிரகாசிக்கச் செய்வதைப் போலவே க்ஷேத்ரக்ஞன் முழு க்ஷேத்ரத்தையும் விளங்கச் செய்கின்றான். (33)

தன் ஞானக் கண்ணால் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் இவைகளின் பேதத்தையும், பிரகிருதியின் பந்தத்திலிருந்து விடுதலை பெறும் நெறியையும் அறிவோன், பிரம்மத்தை அடைவான். (34)

ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பகவத்கீதை என்ற உபநிஷத்தில் அதாவது
பிரம்ம வித்தையுடன் கூடிய யோக சாஸ்திரத்தில்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையின் க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ
விபாக யோகம் என்ற பதின்மூன்றாம்
அத்தியாயம்
முற்றிற்று.

---

# 14. குணத்ரய விபாக யோகம்



[குண மயமான பிரகிருதியைச் சுருக்கமாக அறிவித்த பிறகு அதை அநுசரித்து மூன்று குணங்களும் இந்த அத்தியாயத்தில் வர்ணிக்கப்படுகின்றன. இவ்வாறு வர்ணிக்கும் பொழுது குணங்களைத் தாண்டிய மனிதனுடைய குறிகளை பகவான் உபதேசிக்கிறார். இரண்டாவது அத்தியாயத்தில் ஸ்திதபிரக்ஞன் என்றும் காட்டப்பட்ட புருஷனே இவ்விடம் குணத்தைக் கடந்தவன் என்று காண்பிக்கின்றது.]

ஸ்ரீ பகவான் கூறுகிறார்:—

*ஞானங்களில் உத்தமமான எந்த ஞானத்தை அனுபவித்து முனிவர்கள் உடல் நீங்கியதும் பரம பதத்தை அடைகின்றனரோ அதை உனக்கு மறு முறை கூறுவேன்.* (1)

*இந்த ஞானத்தைச் சார்ந்து, என் தன்மை பெற்றோர் உற்பத்தி காலத்தில் மறுபிறப்பு எடுப்பதில்லை. பிரளய காலத்தில் துன்பத்தை அனுபவிக்கவும் வேண்டியிராது.* (2)

பாரதா ! மகத் என்று சொல்லப்படும் மூலதத்துவம் எனது யோனி. அதனுள் கர்ப்பத்தை உண்டு பண்ணுகின்றேன். அந்த கர்ப்பத்திலிருந்து எல்லா உயிர்களும் பிறக்கின்றன. (3)

கௌந்தேயா ! எல்லா யோனிகளிடத்தும் எந்தெந்த உயிர்கள் உண்டாகின்றனவோ அவை யனைத்திற்கும் உற்பத்தி ஸ்தானம் எனது பிரகிருதி ஒன்றே. அதில் வித்தைப் போடும் தந்தை நான் ஒருவனே. (4)

பெரும் புயத்தோனே ! சத்துவ, ரஜஸ், தமோ குணங்கள் பிரகிருதியினின்று தோன்றுவன. அவை உடல் தாங்கி நிற்கும் அழிவில்லா ஜீவனை தேகத்துள் இணைத்துக் கட்டுகின்றன. (5)

உயர்ந்தோனே ! இவற்றுள் சத்துவ குணம் மாசற்றதானதால் ஒளியுள்ளதும், ஆரோக்கியத்தைக் கொடுப்பதுமாக விருக்கின்றது. ஆதலால் ஜீவனை இன்பத்தாலும், ஞானத்தாலும் பந்தப்படுத்துகின்றது. (6)

கௌந்தேயா ! ரஜோகுணம் இச்சை வடிவமானதால் ஆசைக்கும், பற்றுதலுக்கும் மூலமாகின்றது. ஜீவனை கர்ம பாசத்தால் கட்டுகின்றது. (7)

பார்த்தா ! தமோகுணம் அறிவீனத்தாலுண்டாவது. அது உடல் தாங்கும் ஜீவனை மோகத்தில் வீழ்த்தி அவனைக் கவன மற்றவனாகவும், சோம்பேறியாகவும் செய்து, நித்திரையின் பாசத்தால் அவனை பந்தப் படுத்துகின்றன. (8)

பார்த்தா! சத்வ குணமோ ஆத்மாவை, சாந்தி, சுகம் இவைகளிடம் பற்றுள்ளதாகச் செய்கின்றது. ரஜோகுணம் கர்மத்திலும், தமோகுணம் ஞானத்தை மறைத்து மோகத்திலும், பற்றை உண்டு பண்ணுகின்றது. (9)

பார்த்தா! ரஜ, தமோ குணங்கள் அடக்கப்பட்ட காலத்தில் சத்துவகுணம் மேலெழுகின்றது. சத்துவ தமோ குணங்கள் அடக்கப்பட்ட காலத்து ரஜோ குணம் ஓங்குகின்றது. சத்துவ ரஜோ குணங்கள் குறையும்பொழுது தமோகுணம் தலையெடுக்கின்றது. (10)

புலன்கள் வாயிலாக உடலில் ஒளியும், அறிவும் ஓங்கும்பொழுது சத்துவ குணத்தின் பெருக்கை உணர வேண்டும். (11)

பரதரேறே! ரஜோ குணம் விருத்தியடையும் சமயத்தில் லோபம், பிரவிருத்தி, கர்மங்களின் துவக்கம், சாந்தமின்மை, இச்சை இவைகள் உதிக்கின்றன. (12)

குருநந்தனே! தமோகுணம் பெருகும் காலத்தில் அறிவில்லாமை, மந்தம், கவன மில்லாமை, மயக்கம் முதலியவை உண்டாகின்றன. (13)

தன் உள்ளத்தில் சத்வகுணம் பெருகியபொழுது உடல் தாங்கிய மனிதன், மரண மடைந்தால் அவன் உத்தம ஞானிகள் போகும் மாசில்லா லோகங்களை அடைகின்றான். (14)

ரஜோ குணத்தில் இறப்பவன் கர்மத்தால் நிரம்பிய உலகத்தையும், தமோகுணத்தில் மரிப்பவன் அடிக்கடி இறக்கும் மூடயோனிகளிலும் பிறக்கின்றனர். (15)

குறிப்பு :—கர்மத்தால் நிரம்பிய லோக மென்றது மனித உலகம். மூடயோனி யென்பது மிருகம் முதலியவை.

நற்கருமங்களின் பலன் சாத்துவிக மாகவும், மாசற்றும் இருக்கும். ராஜஸ கர்மங்களின் பயன் துக்கமாகவும், தாமஸ கர்மங்களின் பயன் அறிவீன மாகவும் ஆகின்றன. (16)

குறிப்பு :—நாம் சாதாரணமாக சுக துக்கம் என்று சொல்லப்படும் விஷயங்கள் அப்பதங்களால் இங்கு கூறப்படவில்லை. சுகத்தின் பொருள் ஆத்ம ஆனந்தம், ஆத்ம பிரகாசம். இதற்கு மாறுபட்டது துக்கம். அடுத்த சுலோகத்தில் இதுதெளிவாக எடுத்துரைக்கப்படுகிறது.

சத்துவ குணத்திலிருந்து ஞானம் உண்டாகின்றது. ரஜோ குணத்திலிருந்து பேராசையும், தமோ குணத்தினின்று கவனக் குறைவும், மயக்கமும், அறிவில்லாமையும் உதிக்கின்றன. (17)

சாத்வீக மனிதன் மேலே போகிறான்; ராஜஸ புருஷன் நடுவில் நிற்கிறான்; கடையோனான தாமஸ குணமுடையவன் அதோகதி யடைகிறான். (18)

குணங்களைத் தவிர வேறு கர்த்தா ஒருவனுமில்லை யென்றுணர்ந்து, அவைகளுக்கப்பா லிருக்கும் என்னை யறியும் ஞானி எனது இயல்பு பெறுகின்றான். (19)

குறிப்பு :—குணங்களைக் கர்த்தாவென்று நினைப்பவனுக்கு அகம்பாவ மிராது. இதனால் அவனுடைய கர்மங்கள் இயற்கையை யனுசரித்தும், சரீர போஷணத்திற்காகவும் மட்டுமே இருக்கும். சரீர போஷணை பரம புருஷார்த்தத்தின் பொருட்டே யாதலால் எல்லாக் கர்மங்

களிடத்தும் தியாகமும் வைராக்கியமும் அவனுக்கு உண்டாக வேண்டும். இவ்வித ஞானி சுபாவமாகவே குணங்களுக் கப்பாலிருக்கும் நிர்க்குணனான ஈசுவரனைச் சிந்தித்து அவனை வழி படுவான்.

தேகத்தின் சேர்க்கையால் உதிக்கும் இம் மூன்று குணங்களையும் கடந்து உடல் படைத்தோன் பிறப்பு, இறப்பு, மூப்பு இவைகளிலிருந்து விடுபட்டு மோக்ஷத்தை அடைகிறான். (20)

அர்ஜுனன் கூறுகிறான் :—

பிரபுவே ! இக்குணங்களைக் கடந்தவன் எக்குறிகளால் காணப்படுவான்? அவனுடைய நடவடிக்கைகள் எவ்வாறிருக்கும்? அவன் மூன்று குணங்களையும் எவ்விதம் கடக்கின்றான் ? (21)

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

பாண்டவா ! பிரகாசம், பிரவிருத்தி, மோகம் இவைகளை யடைந்து துயரப்படாதவன் ; அவைகளை யடையாது அவைகள்பால் ஆசையில்லாதவன் ; எதையும் பொருட்படுத்தாமல் நிலைபெற்றிருப்பவன் ; குணங்களால் சஞ்சல மடையாது, குணங்கள் தங்கள் வேலையைச் செய்கின்றன வென்றெண்ணி மாறாத ஸ்திர புத்தியுட னிருப்பவன் ; சுக துக்கங்களைச் சமமாக மதிப்பவன் ; கவலையற்றிருப்பவன் ; மண்குவியல், கல், தங்கம் இவைகளைச் சமானமாகக் கருதுபவன் ; பிரியமுள்ள பொருளையேனும், பிரிய மில்லாத பொருளையேனும்பெற்று ஒரே மனோபாவத்துட னிருப்பவன்; தனது புகழும், இகழும் ஒன்றெனக் கருதும் அறிஞன்; பெருமையும், சிறுமையும் சமானமென்று நினைப்பவன்;

மித்திரர்களிடத்தும் சத்துருக்களிடத்தும் சமமான மனோநிலையுள்ளவன்; எல்லாக் கார்யாரம்பங்களையும் துறந்தவன்; இவனே குணங்களைக் கடந்தவன் என்று கூறப்படுகின்றான். (22-23-24-25)

குறிப்பு :—22 முதல் 25 சுலோகங்களை ஒருமித்து ஆராய வேண்டும். பிரகாசம், பிரவிருத்தி, மோகம் மூன் சுலோகத்தில் கூறியபடி கிரமப்படி சத்துவ ரஜோ தமோ குணங்களின் அறிகுறிகள். குணங்களைக் கடந்த வன்மீது இந்த குணங்களின் பரிணமங்கள் எவ்வித அதிகாரமும் பெறுதென்பதே இந்த சுலோகங்களின் கருத்து. கல்லுக்குப் பிரகாசம் வேண்டுமென்ற ஆசை யில்லை. தன்னறிவன்னியில் அது சாந்த நிலை அடைந் திருக்கிறது. அதை அசையச் செய்பவன்மீது அது விரோதங் கொள்ளாது. ஒருதரம் செல்ல ஆரம் பித்தபின் அதைத் தடுத்துவிட்டால், அதன் போக்கு நின்றுவிடும். அதனுல் மோகம் அல்லது ஜடத்தனம் கிட்டி விட்டதென்று எண்ணி அது துயரப்படுவதில்லை. மூன்று நிலைமைகளிலும் ஒரேவிதமாக நடந்துகொள் ளுகிறது. கல்லுக்கும் குணாதீதனுக்கும் (குணங்களைக் கடந்தவனுக்கும்) பேதமென்ன வெனில், குணாதீதன் சேதன மயமாக விருந்து கொண்டே, தன் அறிவால் குணங்களின் பரிணமங்களை—அவைகளின் போகங் களைத் தானகவே துறந்து கல்லைப்போன்ற மனோ நிலையை எய்துகிறுன். கல்லோ குணங்களின்—பிர கிருதியின்—கார்யங்களின் சாக்ஷி, அது கர்த்தாவல்ல; அவ்வாறு ஞானியும் சாக்ஷியாக விருந்துகொண்டு கர்த்தாவாக விருப்பதில்லை. இவ்வித ஞானியைக் குறித்து 23-ம் சுலோகத்தில் சொல்லியவாறு குணங்

கள் தங்கள் கர்மங்களைச் செய்கின்றனவென்று சஞ்சலமற்று ஸ்திரமாக விருக்கின்றான். அதையும் பொருட் படுத்தாமல் எதிலும் எட்டாமல் இருக்கிறான் என்று கூறத்தகும். குணங்களில் மூழ்கி யிருக்கும் நாம், இந்நிலையை அதிக தைரியத்தை அவலம்பித்துக் கற்பனை செய்துகொள்ளக்கூடுமே யல்லாது அனுபவத்தாலறிய சாத்தியப்படாது. ஆயினும், இந்தக் கற்பனையை மனத்தின் இலக்காக வைத்து தினந்தோறும் 'நான்' என்ற எண்ணத்தைக் குறைத்து வருவோமானால் குணாதீத நிலைக்கருகில் நெருங்கி அதன் சொருபத்தை அறியும் ஆற்றல் பெறுவோம். குணாதீதன் தன் நிலையை அனுபவிக்க முடியுமேயொழிய அதை வர்ணிக்க முடியாது. வர்ணிக்கக்கூடியவன் குணாதீதனாக இருக்க சாத்தியமாகாது. ஏனெனில் வர்ணிப்பதற்கு அகம்பாவம் வேண்டும். எல்லோரும் சகஜமாக அனுபவிக்கக் கூடியவை சாந்தி அல்லது பிரகாசம், சச்சரவு அல்லது பிரவிருத்தி, ஜடத்தனம் அல்லது மயக்கம் என்னும் இம் மூன்று மனோபாவங்களே. சாத்வீக குணம் குணாதீதனுக்கு வெகு சமீபத்தில் இருக்கின்றதென்று கீதையில் பலவிடங்களில் கூறப்பட்டுள்ளது. ஆகையால் சத்வ குணத்தை வளர்ப்பது ஒன்றே மனிதனுடைய முயற்சியில் லக்ஷ்யமாக விருக்கவேண்டும். அவ்விதம் செய்தால் குணாதீத நிலை தானாகவே கிடைக்குமென்று நம்ப வேண்டும்.

ஓர் நிலையுள்ள பக்தியோக வாயிலாக, என்னைத் தொண்டு புரிவோன் இக் குணங்களைக் கடந்து பிரம்ம சொரூபத்திற்குப் பாத்திரனாவான். (26)

பிரம்மநிலை யான்; நித்தியமான மோக்ஷ நிலையும் யான், அவ்விதமே அழியா தர்மத்திற்கும், உத்தம மான ஆனந்தத்திற்கும் நிலயம் யானே. (27)

ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பகவத்கீதை என்ற உபநிஷத்தில் அதாவது
பிரம்ம வித்தையுடன் கூடிய யோக சாஸ்திரத்தில்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையின் குணத்ரய விபாக யோகம்
என்ற பதிநான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

---

# 15. புருஷோத்தம ப்ராப்தி யோகம்



[இவ் வத்தியாயத்தில் பகவான் நாசமடை யும் இப் பிரபஞ்சத்திலிருந்து, நாச மடையாத மூல் பிரகிருதியினின்றும் வேறுபட்ட தனது உத்தம ஸ்வருபத் தைப் போதிக்கிறர். ]

ஸ்ரீ பகவான் கூறுகிறர் :—

மேலே வேர்களும், கீழே கிளைகளும், வேதமென் னும் இலைகளும் கூடிய நாசமற்ற அசுவத்த மரத்தை மேதாவிகள் வர்ணித்திருக்கின்றனர். அதை அறிந் தவர் வேதத்தை யுணர்ந்தவ ராவார். (1)

குறிப்பு :— 'ச்வ' என்ற பதத்திற்கு நாளை என்று பொருள். அசுவத்தம் என்ற சொல்லால் நாளை வரையில் நிலை பெற்றிராத க்ஷணநேரமுள்ள ஸம்ஸாரம் குறிக்கப் படுகிறது. ஸம்சாரம் ஒவ்வொரு நிமிஷமும் மாறிக் கொண்டே இருப்பது. அதனுல் அது அசுவத்தம். ஆனுல் இத் தன்மையுடன் அது எக்காலமும் இருப்ப தாலும், அதன் வேர் மேலே அதாவது ஈசுவரனி டத்தில் இருப்பதாலும், அது விநாசமற்றது. அதில் வேதம்—தர்மத்தின் சுத்த சொரூபம் — என்ற இலை கள் தோன்ருவிடின் அது பிரகாசிப்பதில்லை. இவ்விதம் ஸம்ஸாரத்தின் உண்மையான ஞானம் எவனுக்கு இருக்கின்றதோ அவனே ஞானி.

குணங்களின் சேர்க்கையால் ஓங்கியிருக்கும் சிறு கிளைகளுடன் அதன் கிளைகள் மேலும் கீழும் பரவியிருக்கின்றன. கர்மங்களின் பந்தங்களாகிய அதன் வேர்கள் கீழே இம் மனித உலகில் படர்ந்திருக்கின்றன. (2)

குறிப்பு :—நல்லறிவில்லாதவனுக்கு இவ்வச்வத்த மரம் தோன்றும் வகை இவ்விடம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. மேலே ஈசுவரனிடம் இருக்கும் வேர்களை அவன், நோக்கான். இதற்கு மாருக விஷயங்களின் அழகால் மயங்கி மூன்று குணங்கள் மூலம் இவ் விருக்ஷத்தை விருத்தி செய்கிருன். அதன் காரணமாக இவ்வுலகில் கர்ம மென்னும் கயிற்றினல் கட்டப் படுகிருன்.

அதன் உண்மை சொரூபம் கண்களுக்குப் புலப் படமாட்டாது. அதற்கு முடிவில்லை; ஆதியில்லை; அஸ்திவார மில்லை. இவ்வாறு வெகு ஆழம் ஊன்றிய வேர்களையுடைய அசுவத்த விருக்ஷத்தை, பற்றின்மை என்ற கூறிய வாளால்வெட்டி,' எவன் இப்பழமையான மாயையை படரச் செய்தானே அவ்வாதி புருஷனைச் சரண் அடைகிருன் ' என்று பிரார்த்தித்து, பிறவிக் கடலில் கிடந்து உழலாது, அதற்கப்பால் இருக்கும் பரமபதத்தை மனிதன் நாடவேண்டும். (3-4)

குறிப்பு :—பற்றின்மை என்பதன் தாத்பர்யம் ஒத்துழையாமை. எது வரையில் மனிதன் விஷயங்களுடன் ஒத்துழையாது தூரத்தில் விலகி நிற்கவில்லையோ. அது வரையில் அவன் அவைகளிடம் சிக்கிக்கொண்டு தவிப்பான். விஷயங்களோடு விளையாடிக்கொண்டு அதே சமயத்தில் அவைகளால் தீண்டப்படாதிருத்தல் அசாத்திய மென்பது இச் சுலோகத்தின் கருத்து.

அபிமானத்தையும், மயக்கத்தையும், நீக்கியவன் ; பற்றில் உண்டாகும் கேட்டைக் களைந்தவன் ; தன் ஆத்மாவில் இடைவிடாது மூழ்கியிருப்பவன் ; விஷயங்களில் சாந்த மடைந்தவன் ; சுக துக்க வடிவமான இரட்டை நோய்கள் தீர்ந்தவன் ; இவ்வித ஞானி என்றுமழியாப் பதத்தை அடைகிறான். (5)

அப்பதத்தில் சூரியனும், சந்திரனும், அக்நியும் ஒளி கொடுக்கவேண்டியதில்லை. எவ்விடத்தை யடைந்து மனிதன் மறு ஜன்மம் எடுக்க வேண்டியிராதோ அதுவே எனது பரமபதம். (6)

என்னுடைய நித்திய அம்சமான ஜீவன், இப் பூலோகத்தை யடைந்து ஐந்து இந்திரியங்களுடன் மனத்தை ப்ரகிருதியிலிருந்து தன் வயம் இழுத்துக் கொள்ளுகின்றான். (7)

(ஜீவனுயிருக்கும் என தம்சமான) எஜமானன் உடலைத் தாங்கும் பொழுதும், அதை விடும் காலத்தும், தன் பக்கத்திலிருக்கும் கந்தங்களை ஏற்றுச் செல்லும் காற்றைப்போல், இவைகளையும் (மனத்துடன் இந்திரியங்களையும்) எடுத்துச் செல்லுகிறான். (8)

அவைகளுடன் காது, கண், தோல், நாக்கு, மூக்கு, மனம் இவைகளுடன் சேர்ந்து விஷயங்களை அனுபவிக்கிறான். (9)

குறிப்பு :—இவ்விடத்தில் விஷயங்கள் என்ற சொல்லின் அர்த்தம் வெறுக்கத்தக்க சிற்றின்ப சுகமன்று, ஒவ்வொரு இந்திரியத்திற்கும் உரிய சுபாவ கிரியைகளே குறிக்கப் படுகின்றன ; கண்ணிற்கு விஷயம் பார்த்தல் காதின் விஷயம் கேட்டல், நாக்கின் விஷயம் ருசித்தல்

முதலியன. இக்கிரியைகள் மன விகாரத்தைக் கொடுப்பின்—அகம்பாவத்துடன் கூடியிருப்பின்—தீங்கை விளைவிப்பனவாகவும், வெறுக்கத் தக்கனவாகவு மிருக்கும். மன விகாரத்தை உண்டு பண்ணுமலிருந்தால் மாசற்றனவாக விருக்கும். குழந்தை கண்ணுல் காண்கிறது; கையால் தொடுகிறது; ஆனுல், மன விகாரம் அடைவதில்லை. ஆகையால், பின்வருமாறு பின் சுலோகத்தில் சொல்லப்படுகிறது.

துறந்தும், அவைகளுடன் இருந்தும், குணங்களைச் சார்ந்து போகத்தை யடைந்தும் இருக்கும். (அம்ச ரூபமான ஈசுவரனை) மூடர் அறியார். ஞானிகள் அறிவார். (10)

முயற்சியுடன் யோக வழி நிற்போர் தமக்குள்ளேயே இருக்கும் இந்த ஈசுவரனைக் காண்பர். உள்ளத் தூய்மை யில்லாத மூடர்களான (அகிருதாத்மாக்கள்) என்ன முயற்சிகள் செய்தும் இவனை அறியார்கள். (11)

குறிப்பு:—ஒன்பதாம் அத்தியாயத்தில் தீய வழி செல்வோனுக்கு பகவான் கொடுத்த வாக்குறுதிக்கும், இந்த சுலோகத்திற்கும் யாதொரு விரோதமும் இல்லை. அகிருத ஆத்மாக்களென்றது, பக்தியில்லாது தன்னிச்சைப்படி நடக்கும் தீயோரைக் கூறுகின்றது. வணக்கத்துடனும், சிரத்தையுடனும் ஈசுவரனை வழிபடுவோன் உள்ளத்தூய்மைபெற்று கடவுளைக் காண்கிருன். இமய, நியமங்களைப் பொருட் படுத்தாது வெறும் புத்தியின் பிரயோகத்தால் ஈசுவரனைக் காண முயலும் மதியில்லாதவன், ஸ்ரீ ராமனை விட்டகன்றவன். அவன் இராமனை அறியான்.

சூரியனிடமிருந்து கிளம்பிப் பிரபஞ்ச முழுதை
யும் பிரகாசிக்கச் செய்யும் ஒளியும், சந்திரன், அக்கினி
இவைகளில் தோன்றும் ஒளியும் என் ஜோதியென்றே
அறியக் கடவாய்! (12)

பூமிக்குட் புகுந்து எனது சக்தியால் நான் பிராணி
களைத் தாங்குகிறேன். ரஸத்தைக் கொடுக்கும் சந்
திரனுகி எல்லாச் செடி கொடிகளையும் வளரச் செய்
கின்றேன். (13)

பிராணிகளின் உடல்களைச் சார்ந்து வயிற்றில்
இருக்கும் தியாகி பிராண அபான வாயுக்களின் வழி
யாக நான்கு வித உணவுகளையும் ஜீரணம் செய்
கின்றேன். (14)

எல்லோர் இருதயத்துள் வசிக்கும் என்னிட
மிருந்தே ஞாபகம், அறிவு, இவைகளின் இல்லாமை
முதலியன பிறக்கின்றன. எல்லா வேதங்களாலும்
அறியத் தகுந்தவன் யான்; வேதங்களை உணர்வோ
னும் யான்; வேதத்தின் இறுதியான வேதாந்த
சாஸ்திரத்தை வெளிப்படுத்தியவனும் யானே! (15)

இவ்வுலகில் க்ஷரம் — அதாவது நாச முள்ளது;
அக்ஷரம்—அதாவது நாசமற்றது; இவ்விதம் இரண்டு
புருஷர் உள்ளனர். பூதங்கள் க்ஷரமென்றும், அத
னுள் ஸ்திரமாகவும், அந்தர்யாமியாகவும், இருப்பதை
அக்ஷர மென்றும் கூறுகின்றனர். (16)

இவர்களைத் தவிர்த்து உத்தம புருஷன் வேறொரு
வன் இருக்கிறன். இப் பரிபூரண ஈசுவரன் மூன்று
உலகங்களையும் உட்புகுந்து அவைகளைப் போஷிக்
கின்றுன். (17)

நான் க்ஷரத்திற்கு மேலானவன். அக்ஷரத்திற்கும் உயர்ந்தவன். ஆதலால், வேதங்களிலும் உலகங்களிலும் என்னைப் புருஷோத்தமன் என்று அழைக்கின்றனர். (18)

பார்த்தா! மோகத்தைக் களைந்து புருஷோத்தமனுன என்னை இவ்வித மறிவோன் அனைத்தையும் அறிந்தவனுகி என்னை முழுமனதுடன் வழிபடுகிறுன். (19)

மாசற்றவனே! மிகவும் பரம ரகஸ்யமான சாஸ்திரத்தை உனக்கு உபதேசித்திருக்கிறேன். பார்த்தா! இதை ஏற்று, மனிதன் அறிவு பெற்றுத் தன் வாழ்க்கையைப் பயனுள்ளதாகச் செய்யக் கடவான். (20)

ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில் — அதாவது பிரம்ம வித்தையுடன் கூடிய யோகசாஸ்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையின் புருஷோத்தம ப்ராப்தி யோகம் என்ற பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

# 16. தைவாசுர சம்பத் விபாக யோகம்



[இவ் வத்தியாயத்தில் தைவீக சம்பத்தும், அசுர சம்பத்தும் வர்ணிக்கப் படுகின்றன. ]

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

பார்த்தா! பயமில்லாமை, உள்ளத் தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் நிறை பெற்றிருத்தல், தானம், இந்திரிய நிக்கிரகம், யக்ஞம், வேதாத்திய யனம், தவம், நேர்மை, அஹிம்ஸை, சத்தியம், ஆத்திரப்படாமை, தியாகம், சாந்தி, பிறர்பால் குறை கூறாதிருத்தல், உயிர்கள் பால் கருணை, சிற்றின்ப ஆசையில்லாமை, மேன்மை, மரியாதை, சஞ்சலப்படா திருத்தல், தேசு, பொறுமை, உறுதி, சுத்தம், துரோகஞ் செய்யாதிருத்தல், அபிமான மில்லாமை இக் குணங்கள் தெய்வீக சம்பத்துடன் பிறந்தோ னிடம் காணப்படுகின்றன. (1-2-3)

குறிப்பு :—தேசு என்பது எல்லா ஈனத் தொழிலுக்கும் எதிராக உண்டாகும் ரோஷம். துரோகமின்மை யாவது எவருக்கும் தீங்கு நினைக்காமலும், செய் யாமலும் இருப்பது.

பார்த்தா! டம்பம், கர்வம், அபிமானம், கோபம், பாருஷ்யம், மூடத்தனம் இவை அசுர சம்பத்துடன் ஜன்ம மெடுப்பவனிடம் தோன்றுகின்றன. (4)

குறிப்பு :—தன்னிடத்திலில்லாத குணத்தை வெளிப் பார்வைக்கு இருப்பதுபோல் நடிப்பது டம்பம் அல்லது ஏமாற்றம். காமமென்பது தன்னைப் பெருமைப் படுத்திக் கொள்ளுதல். பாருஷ்யமென்றால் கொடுமை.

தெய்வீக சம்பத்து மோக்ஷத்தைக் கொடுப்பது; அசுர சம்பத்து பந்தத்திற் குட்படுத்துவது. பாண்டவா! வருத்தப்படாதே. நீ தெய்வ சம்பத்துடன் பிறந்திருக்கிறாய். (5)

இவ்வுலகில் தெய்வீகமென்றும், அசுரத் தன்மையுள்ளதென்றும் இருவித சிருஷ்டி யுள்ளன. தெய்வீக சிருஷ்டி விவரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அசுர சிருஷ்டியை (இப்பொழுது) கேட்பாய்! (6)

அசுரத் தன்மையுள்ளவர் செய்யக்கூடிய கார்யங்களையும், செய்யத் தகாதவையும் அறியார். அவ்வாறே அவர்களுக்கு சுத்தம், ஆசாரம், சத்தியம் ஒன்றுமில்லை. (7)

இந்த உலகம் அசத்தியமானது, ஆதாரமற்றது. கடவுள் இல்லாததென்று அவர் கூறுவர். காமமொன்றே மனிதன் உண்டாவதற்குக் காரணமென்றும் சொல்லுவர். சிற்றின்ப அனுபவத்தைத் தவிர்த்து இதற்கு வேறு ஏது? என்ன இருக்கமுடியும் என்று எண்ணுவர். (8)

பயங்கரமான கார்யங்களைச்செய்யும் மந்தமதிக ளான இவர்கள் இக்கொள்கைகளைக்கொண்டு, உலகின் சத்துருக்களாகி அதன் நாசத்தை நாடி நிற்பார்கள். (9)

என்றும் திருப்தியடையாத காமங்களால் நிறைந்து, டம்பர்களாய், இருமாப்பால் நிலையறியாது, தீய கொள்கைகளை நம்பி மோகத்தால் துராசை பிடித்துக் கர்மங்களில் ஈடு படுகின்றனர். (10)

பிரளய காலம் வரை முடிவடையாத கவலைக் கட லில் மூழ்கி, மிகவும் சிற்றின்பப் பிரியர்களாய், 'வாழ்க் கையின் பயன் போகம்' என்று நிச்சயித்தவராய், நூற்றுக் கணக்கான ஆசைகளின் வலையிலகப்பட்டு, காமத்தாலும், குரோதத்தாலும் ஆழ்த்தப்பட்டு விஷய போகத்திற்காக தீயவழிகளில் செல்வம் சேர்க்க அவர்கள் விரும்புகின்றனர். (11-12)

'இன்று எனக்கு இப்பொருள் கிடைத்தது; இனி இந்த மனோரதங்களைப் பூர்த்தி செய்வேன்; திரும்ப வும் நாளை எனக்கு இவ்வளவு அதிகப்பொருள் கிடைக் கும்; இந்த சத்துருக்களைவென்றேன்; மற்றவர்களை இனி வெல்லுவேன்; எனக்கு ஒன்றும் குறைவில்லை; நான் யோகி, சித்தன், பலசாலி, சுகி, தனவந்தன், உயர் குலத்தோன்; எனக்குச் சமான முள்ளவ ரெவர்? நான் யக்ஞம் செய்வேன், தானம் கொடுப் பேன்; இன்புறுவேன், என்று இந்த நல்லறிவிலா மூடர்கள் பல மாருட்டங்களுக் காளாகி, மோக வலை யில் சிக்கி, சிற்றின்பத்தில் மயங்கிக் கொடிய நரகத்தில் வீழ்கின்றனர். (13-14-15-16)

அவர்கள் தம்மைத்தாமே போற்றிக்கொண்டு, கர்வமுள்ளவர்களாய், செல்வம் அந்தஸ்து முதலியவை களால் இறுமாப்படைந்து, டம்பத்துடன், விதியை அனுசரிக்காது வெளிப்பகட்டான யக்ஞங்களைச் செய்கின்றனர். (17)

அகங்காரம், பலம், கர்வம், காமம், குரோதம் முதலிய தீய குணங்களைச் சார்ந்து, பிறரை நிந்தித்துக் கொண்டு, தங்களிடத்தும் மற்றவர்களிடத்தும் வசிக்கும் என்னை அவர்கள் வெறுக்கின்றனர். (18)

இவ்வித நராதமர்கள் நீசர்களாகவும், துவேஷமுள்ளவர்களாகவும், கொடியவர்களாகவும், தீய நெறி செல்வோர்களாகவும் இருப்பார்கள். அவர்களை அதிகக் கேவலமான அசுர யோனிகளில் அடிக்கடி தள்ளுகின்றேன். (19)

கௌந்தேயா! பல பிறப்புகளில் அசுரயோனிகளை அடைந்து என்னைச் சேராத இம் மூடர்கள் அதினும் கேடுகெட்ட அதம கதியைப் பெறுவார்கள். (20)

ஆத்மாவை நாசம்செய்து நரகத்தில் வீழ்த்துவதற்கு காமம், குரோதம், லோபமாகிய இம் மூன்று குணங்களும் மூவித வாயில்களாகின்றன. ஆதலால், இம் மூன்றையும் மனிதன் அறவே ஒழிக்கவேண்டும். (21)

கௌந்தேயா! இம் மூன்று நரக வாயில்களுக்கப்பால் தூரத்தில் இருக்கும் புருஷர்கள் தங்கள் ஆத்மாக்களின் நன்மையைத் தேடி, பரமபதத்தை அடைகின்றனர். (22)

சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ள விதிகளை விட்டு, சிற்றின்பத்தில் மூழ்கி யிருக்கும் மனிதனுக்கு சித்தியு மில்லை ; சுகமு மில்லை ; நற்கதியு மில்லை. (23)

குறிப்பு :—சாஸ்திர விதியின் அர்த்தம், தர்ம கிரந்தங்கள் என்று சொல்லப்படும் நூல்களில் கூறப்பட்டுள்ள பலவித கிரியைகளல்ல. அனுபவத்துடன் கூடிய ஞானத்தை யடைந்த பெரியோரால் காட்டப்பட்ட நல்லொழுக்கமே இதனுல் குறிக்கப்படுகிறது.

ஆகையால், செய்ய வேண்டியது, செய்யத் தகாதது என்று நிர்ணயிப்பதில் சாஸ்திரமே பிரமாண மென்று அறிவாய். சாஸ்திர விதி என்னவென்று உணர்ந்து அதன்படியே செல்லக்கடவாய் ! (24)

குறிப்பு :—முன் சுலோகத்தினடியில் உள்ள குறிப்பில் சாஸ்திரம் என்ற சொல்லுக்கு உரைக்கப்பட்ட பொருளையே இவ்விடத்திலும் கொள்ளவேண்டும். ஒவ்வொருவரும் தனக்கிஷ்டப்பட்ட நியமங்களைச் செய்துகொண்டு மனம்போனவாறு போகக்கூடாது. அதற்கு மாருக அனுபவத்தால் தர்மத்தை உணர்ந்தவரின் வாக்கியங்களைப் பிரமாணமாகக் கொண்டு ஒழுக வேண்டும். இதுவே இந்த சுலோகத்தின் உட்கருத்து.

ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத்பகவத்கீதைஎன்னும் உபநிஷத்தில் அதாவது
பிரம்ம வித்தையுடன் கூடிய யோக சாஸ்திரத்தில்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையின் தைவாசுர சம்பத் விபாக
யோகம் என்ற பதினாரும் அத்தியாயம்
முற்றிற்று.

---

## 17. சிரத்தாத்ரய விபாக யோகம்



சாஸ்திரம் — அதாவது சிஷ்டாசாரம் அல்லது பெரியோர்களின் நல்லொழுக்கம் — வாழ்க்கையின் பிரமாணமாகக் கருதப் பட வேண்டுமென்று பகவான் சொல்லக் கேட்ட அர்ஜுனனுக்கு மனதில் ஒரு சந்தேகமுண்டாயிற்று. அதாவது: பெரியோர்களின் நல்லொழுக்கத்தை அனுசரிக்கச் சக்தியில்லாத ஒருவன் சிரத்தையுடன் தனக்குத் தோன்றிய நன்னெறியைக் கடைப்பிடித்தொழுகின் அவனுடைய கதியென்னவாகும்? இவ்வத்தியாயத்தில் இக் கேள்விக்குப் பதில் கூற முயற்சி செய்யப்படுகிறது. ஆனல் சிஷ்டாசார வடிவமான தீபஸ்தம்பத்தைக் கைவிட்டபின் சிரத்தையில் தோஷங்கள் உண்டாகக் கூடுமென்று பயங்காட்டியதோடு பகவான் திருப்தி யடைகிறார். ஆதலால் சிரத்தையிலும், அதனை ஆதாரமாகக் கொண்டு செய்யப்படும் யக்ஞம், தவம். தானம் முதலியவைகளிலும் குணங்களை யனுசரித்து மூன்று பிரிவுகள் காட்டப்படுகின்றன. ‘ஓம் தத் ஸத்’ என்னும் மந்திரத்தின் மகிமையும் கூறப்படுகிறது.]

அர்ஜுனன் கூறுகிறன்:—

*கிருஷ்ணா! சாஸ்திரத்தின் விதிகளை — அதாவது சிஷ்டாசாரத்தை — பொருட்படுத்தாது வெறும் சிரத்தையுடன் செய்யப்படும் பூஜை முதலியன செய்யும்*

மனிதனுடைய கதி என்னவாகும்? அது சாத்விகமாக இருக்குமா? ராஜஸ, தாமஸமாக விருக்குமா? (1)

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—

மனிதனுடைய இயற்கையால் அவனது சிரத்தையும், சாத்துவிகம், ராஜஸம், தாமஸம் என மூவகைப் படும். அவைகளைக் கேளாய். (2)

பார்த்தா! எல்லோருடைய சிரத்தையும் தம்தம் இயற்கையை அனுசரித்தே இருக்கும். ஒவ்வொரு மனிதனிடத்தும் சிறிதளவேனும் சிரத்தையிருந்தே தீரும். ஒருவனுடைய சிரத்தை எவ்வித மிருக்கிறதோ அவன் அவ்விதமே யாகின்றான். (3)

சாத்துவிக ஜனங்கள் தேவர்களை வழிபடுவார்கள். ராஜஸ மனிதர் யக்ஷர்களையும், ராக்ஷஸர்களையும் பூஜிப்பார்கள். தாமஸ புருஷர்களோ பூதங்களையும், பிரேதங்களையும் தொழுவார்கள். (4)

டம்பமும், அகங்காரமும் நிறைந்த மனிதர் காமத்தாலும், ஆசையாலும் தூண்டப்பட்டு சாஸ்திர விதிகளைக் கவனியாது கோரமான தவம் புரிகின்றனர். அம் மூடர் தங்கள் உடலில் இருக்கும் ஐந்து மகா பூதங்களையும், உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் என்னையும் கிலேசப் படுத்துகின்றனர். இவர்கள் அசுரத் தன்மை வாய்ந்தவர்களென்று உணர்வாய். (5-6)

விரும்பி உண்ணும் ஆகாரமும் மூன்று வகையுள்ளது. அவ்வாறு யக்ஞம், தவம், தானம் இவைகளும் மூன்று பிரிவுகளுள்ளவை. இவைகளின் பேதங்களைக் கேளாய். (7)

ஆயுளை வளர்ப்பது, சாத்துவிகமானது, பலத்தைக் கொடுப்பது, ஆரோக்கியத்தைத் தருவது, சுகத்தையும் இனிமையையும் பெருக்குவது, ரஸமுள்ளது, மிருது வானது, புஷ்டிசெய்வது, மனதிற்கு இன்பத்தை உண்டாக்குவது இவ்வித உணவை சாத்வீக புருஷர் விரும்புகின்றனர். (8)

கசப்பானது, புளிப்பானது, அதிக உப்பாக விருப்பது, மிகவும் உஷ்ணமானது, காரமுள்ளது, தாகத்தைக் கொடுப்பது இவ்வித உணவுகள் ராஜஸர்களுக்குப் பிரியமானவை. அவை துன்பம், துயரம், வியாதி முதலிய தீமைகளை விளைவிக்கும். (9)

மூன்று மணி நேரம் வைக்கப்பட்டது, சுவையில்லாதது, துர்நாற்றம் வீசுவது, அழுகியது, எச்சல்பட்டது, அசுத்தமானது இவ்வித ஆகாரங்கள் தாமஸர்களுக்கு இஷ்டமானவை. (10)

பலனை விரும்பாமல், விதிப்படி, கடமையென்றெண்ணி, மனப்பூர்வமாக செய்யப்படும் யக்ஞம் சாத்விக மானது. (11)

பாரத சிரேஷ்டனே! பலத்தை உத்தேசித்து வெளி ஆடம்பரத்துடன் செய்யப்படும் யக்ஞம் ராஜஸம் என்று அறிவாய்! (12)

ஒரு விதியுமின்றி, அன்னமளிக்காது, மந்திரமில்லாமல், தியாகமற்று, சிரத்தை யில்லாது, செய்யப்படும் யக்ஞத்தை அறிஞர் தாமஸ யக்ஞமென்று கூறுகின்றனர். (13)

தேவர், பிராம்மணர், குரு, ஞானி இவர்களை வழிபடுதல், தூய்மை, நேர்மை, பிரம்மசர்யம், அஹிம்சை இவை சரீரத்தின் தவமென்று உபதேசிக்கப்படுகின்றன. (14)

பிறருக்குத் துன்பம் விளைவிக்காமை, உண்மை, அன்பு, இன்மொழி, அறநூல்களை ஆராய்தல்—இவைகளை வாக்கின் தவமென்று கூறுவர். (15)

மன மலர்ச்சி, மகிழ்ச்சி, மௌனம், புலனடக்குதல், மனோபாவங்களின் பரிசுத்தத் தன்மை இவை மனத்தின் தவமென்று சொல்லப்படும். (16)

சமபாவத்தோடு கூடிய புருஷன் பலத்தில் ஆசையைத் துறந்து அதிக சிரத்தையுடன் இம் மூவகைத் தவங்களையும் புரியும்பொழுது அதை சாத்வீக தவமென்று அறிஞர் உரைப்பர். (17)

மரியாதை, பெருமை, புகழ் இவைகளுக்கு ஆசைப்பட்டு ஆடம்பரத்துடன் செய்யப்படும் நிலையற்ற, கொள்கையற்ற தவம் ராஜஸமென்று சொல்லப்படும். (18)

அதிகக் கஷ்டப்பட்டு பிடிவாதத்துடன் அல்லது பிறரை நாசம் செய்வதற்காகச் செய்யப்படும் தவம் தாமஸமென்று கூறப்படும். (19)

கொடுப்பது உசிதமென்று எண்ணி, பதிலுபகாரத்தை எதிர்பார்க்காமல், தேசம், காலம், தகுதி முதலியவற்றை ஆராய்ந்து கொடுக்கப்படும் தானம் சாத்வீக தானமாகும். (20)

பிரதி உபகாரத்தை விரும்பியோ, பலனை உத்தேசித்தோ, மனவருத்தத்துடன் கொடுக்கப்படும் தானம் ராஜஸ தானமாகும். (21)

தேசம், காலம், பாத்திரன் ஆகிய ஒன்றையும் சிந்தியாது அவமரியாதை செய்து அருவருப்புடன் கொடுக்கப்படும் தானம் தாமஸமாகும். (22)

ஓம், தத், ஸத் என மூவிதமாக பிரம்மம் வர்ணிக்கப்பட்டுள்ளது. இதை அனுசரித்து முன்காலத்தில் பிராம்மணர், வேதம், யக்ஞம் இம் மூன்றும் வகுக்கப்பட்டன. (23)

ஆகையால், பிரம்மவாதிகள் யக்ஞம், தானம், தவம் முதலிய கிரியைகளை 'ஓம்' என்று முதலில் உச்சரித்த பின் விதிப்படி செய்வார்கள். (24)

மோக்ஷத்தை விரும்புவோர் 'தத்' என்பதை உச்சரித்துப் பலனை விரும்பாமல் யக்ஞம், தவம், தானமாகிய கிரியைகளைச் செய்வார்கள். (25)

சத்தியம், நன்மை என்ற அர்த்தத்தில் 'ஸத்' என்ற சொல் பிரயோகிக்கப்படுகிறது. பார்த்தா! 'ஸத்' என்ற பதம் நற்கருமங்களைக் குறிக்க உபயோகப் படுகின்றது. (26)

யக்ஞம், தவம், தானம் இவற்றில் உறுதி நிலை 'ஸத்' என்று அழைக்கப்படுகிறது. 'தத்' என்னும் பரம்பொருளை உத்தேசித்தே கர்மம், என்ற எண்ணமும் 'ஸத்' என்று சொல்லப்படுகின்றது. (27)

குறிப்பு:—ஒவ்வொரு கர்மத்தையும் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்தே இயற்றவேண்டு மென்பது இம் மூன்று சுலோகங்களின் கருத்து. ஏனெனில், 'ஓம்' என்பதே 'ஸத்' அல்லது சத்தியம். அதற்கு அர்ப்பணம் செய்த கர்மமே சத்திய பலனைக் கொடுக்கும்.

பார்த்தா! யக்ஞம், தானம், தவம், இதர காரியங்கள், எதுவும் சிரத்தையின்றி, இயற்றப்படின், 'அஸத்' என்று கூறப்படும். அது இம்மையிலும் பயன்படாது. மறுமையிலும் உதவாது. (28)

ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பகவத்கீதை என்ற உபநிஷத்தில் அதாவது பிரம்ம வித்தையுடன் கூடிய யோக சாஸ்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையின் சிரத்தாத்ரய விபாக யோகம் என்ற பதினேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

# 18. ஸந்யாஸ யோகம்



இவ் வத்தியாயம் கீதையின் முடிவுரையாகக் கருதப்படக்கூடும். 'எல்லாத் தர்மங்களையும் துறந்து என்னைச் சரண மடைவாய்' என்னும் உபதேசம் இதற்கும் கீதைக்கும் மூலமந்திரம் என்று கூறத் தகும். இதுவே உண்மையான ஸந்யாஸம். ஆனால் எல்லாத் தர்மங்களையும் துறக்க வேண்டு மென்பதன் பொருள். சகல கர்மங்களையும் விட்டு விடுவ தன்று. உத்தமமான பரோபகாரச் செயல்களில் ஈடுபட வேண்டும். அவைகளைப் பகவானுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். பலனில் ஆசையை தியாகம் செய்யவேண்டும். இவைதான் எல்லா தர்மங்களையும் துறக்கும் வழி.]

அர்ஜுனன் கூறுகிறன் :—

*பெரும் புயத்தோனே! ஹ்ருஷீகேசா! கேசியைக் கொன்றவனே! ஸந்யாஸம், தியாகம் இவ்விரண்டின் பிரத்தியேக ரகஸ்யங்களை அறிய விரும்புகிறேன்.* (1)

ஸ்ரீ பகவான் கூறுகிறர் :—

*காம்ய (ஆசையினுலுண்டாகும்) கர்மங்களைத் துறப்பது ஸந்யாஸமென்று கூறப்படும். எல்லாக் கர்மங்களின் பலனையும் தியாகம் செய்வதைத் தியாக மென்று அறிஞர் கூறுவர்.* (2)

எல்லாக் கர்மங்களும் தோஷமுள்ளவை. ஆத லால் அவைகளைத் துறப்பதே நலமென்று பல மேதாவி கள் உரைக்கின்றனர். யக்ஞம், தானம், தவம். இம் மூவகைக் கர்மங்களையும் விடாமல் செய்ய வேண்டு மென்று வேறு பலர் சொல்லுகின்றனர். (3)

பரத சிரேஷ்டனே! இத் தியாக விஷயத்தில் என் முடிவைக் கேளாய். உயர்ந்தோனே! தியாகம் மூன்று வகையாக வகுக்கப்பட்டுள்ளது. (4)

யக்ஞ, தான, தவ கர்மங்களைத் துறக்கலாகாது. அவைகளைச் செய்தே தீரவேண்டும். அறிஞனை ஞானம், தானம், தவம் இம் மூன்றும் தூய்மைப் படுத்துவன. (5)

பார்த்தா! இக்கர்மங்களைப் பற்றின்றி, பலனை விரும்பாது புரிதல் வேண்டுமென்பது எனது முடிவான உத்தம சித்தாந்தம். (6)

கடமையான காரியங்களைத் துறத்தல் நியாய மல்ல. மதி மயக்க முற்று அவைகளை விட்டுவிடின், அத்தியாகம் தாமஸ மென்று கருதப்பட வேண்டும். (7)

துக்கத்தைக் கொடுப்பது, உடலுக்குக் கஷ் டத்தை விளைவிப்பது, என்ற பயத்தால் செய்யாமல் விலகுவது ராஜஸ தியாகமாகும். இதனால் உண்மை யான தியாகத்தின் பயன் கிட்டாது. (8)

அர்ஜுனா! கடமை என்று நினைத்து, அவசிய மான கர்மங்களைப் பற்றின்றி, பலனைத் துறந்து, செய்வதே சாத்வீக தியாகமென்று உணர வேண்டும். (9)

ஐயமற்று, தூய மனோபாவங்களுடைய தியாகியான அறிஞன், துன்பம் பயக்கக் கூடிய பணிகளை வெறுப்பதில்லை. இன்பம் தரக்கூடிய காரியங்களிலும் பற்று வைப்பதில்லை. (10)

கர்மங்களை முற்றிலும் துறப்பது உடல் படைத்தோருக்கு சாத்திய மானதன்று. ஆதலால், கர்ம பலனைத் துறப்போரே தியாகி யென்று கூறப்படுவர். (11)

தியாகம் செய்யாமல் பற்றுடன் செய்யப்படும் கர்மங்களின் பலன்கள் வருங்காலத்தில் இனியதாகவும், கொடியதாகவும், இரண்டும் கலந்ததாகவும் இருப்பன. தியாகி (ஸந்யாஸி) யானவனை அவை ஒன்றும் அணுகமாட்டா. (12)

பெரும் புயத்தோனே! ஸாங்க்ய நூல்களில், கர்மங்களில் சித்தி பெறுவதற்கு ஐந்து காரணங்கள் கூறப்பட்டுள்ளன. அவைகளை நான் சொல்லக் கேளாய். (13)

அவையாவன: க்ஷேத்திரம், கர்த்தா, பலவிதமான சாதனங்கள், வெவ்வேறு கிரியைகள், ஐந்தாவது தெய்வம். (14)

உடல், வாக்கு, மனம் இவற்றால் மனிதன் அறவழியிலோ அதற்கு மாறாகவோ செய்யும் காரியங்களனைத்திற்கும் இவ்வைந்து பொருள்களே காரணமாவன. (15)

இவ் வாறிருந்தும் மனத்தூய்மை இல்லாமையின் ஏரணத்தால் மூடன் உண்மையை ஓர்வதில்லை. (16)

எவனிடம் அகங்கார மில்லையோ, எவனுடைய மதி மாசற்றதாகி விட்டதோ, அவ்வித மனிதன் இவ்வுலகை அழிப்பினும், கொலையாளி யாகான். பந்தப் படான். (17)

குறிப்பு :—மேலாகப் படிக்கும் பொழுது இந்த சுலோகம் மனிதரைக் கலங்கச் செய்யலாம். கீதையில் பல சுலோகங்கள் மனிதனுடைய அந்திம லக்ஷயங்களைக் கற்பனையால் அவலம்பித்துக் கொண்டிருக்கின்றன. அவைகளின் சரியான உதாரணம் இப்பூமியில் கிடைக்காது. க்ஷேத்ர கணிதத்தில் கனம், நீளம், அகலமில்லாத கற்பனைச் சித்திரங்கள் எவ்வாறு உதவுமோ, அவ்வாறே இவையும் அறநெறியைக் காட்டுவதில் பயன்படுவன. ஆகையால்,இச்சுலோகத்தின் கருத்தைப் பின்வருமாறு கொள்ளவேண்டும். எவனுடைய அகங்காரம் முற்றிலும் நசித்துவிட்டதோ, எவன் மதியில் அணுவளவேனும் மாசில்லையோ, அப்புருஷன் இஷ்டப்பட்டால் உலக முழுதையும் அழித்துவிடலாம் என்று சொல்லக் கூடும். புத்தி பூர்ணமாக தூய்மையாகின் அம்மனிதன் மூன்று காலங்களையும் பார்க்க ஆற்றல் பெறுகின்றான். பகவான் ஒருவனே இவ்வித புருஷன். அவன் எக்காரியங்களைச் செய்தும் அகர்த்தாவாக இருப்பவன். கொன்றாலும் அஹிம்சையோடு கூடியவன். ஆதலால், சாதாரண மனிதன் கொல்லக் கூடாதென்றும், பெரியோர்களின் அற நெறியைக் கடைப்பிடித் தொழுகுவதே முறையென்றும் ஏற்படுகிறது.

ஞானம், ஞேயம் (அறியப்படும் பொருள்), அறியும் புருஷன் ஆகிய இம்மூன்றும் கர்மங்களுக்குத் தூண்டு கோல்களாக இருப்பவை. புலன்கள், கிரியை,

கர்த்தா இம் மூன்றும் கர்மத்திற்கு அங்கங்கள் (உதவி செய்பவை.) (18)

குறிப்பு :—இதில் அறிவும், ஒழுக்கமும் பிணைக்கப்பட்டிருக்கின்றன. முதலில் மனிதன் தன் கடமை (ஞேயம்), அதற்குவழி (ஞானம்) இவ்விரண்டையும் அறிந்து பரிஞாதா அல்லது அறியும் புருஷனுகிருன். இவ்விதம் கர்மத்தில் தூண்டப்பட்ட பின்னர் புலன்கள் (கரணங்கள்) வழியாகக் கர்த்தாவாகிருன். இதுவே கர்ம தத்துவங்களின் சமூகம்.

ஞானம், கர்மம், கர்த்தா இவைகள் குணங்களின் வித்தியாசத்தால் மூன்று வகையுள்ளன. குணங்களின் தன்மையால் விரித்துரைக்குங் காலத்தில் பெரியோர்கள் இவைகளை வர்ணித்த வரலாற்றை கேட்பாய்! (19)

பல பொருள்களுக் குள்ளிருக்கும் தனிப்பொருளைக் காட்டி எல்லா உயிர்களிடத்தும் ஒரே பரம்பொருளைத் தெரிவிக்கும் ஞானம் சாத்வீகமானது. (20)

வெளிப்பொருள்கள் தோற்றத்தில் பலவாக இருப்பதனுல் அதன்படியே வெவ்வேறு உயிர்களில் வெவ்வேறு மூல தத்துவங்களைக் காணும் மனிதனுடைய ஞானம் ராஜஸ ஞானமாகும். (21)

யாதொரு காரணமுமின்றி அதிகப் பற்றுடன் செய்யும் ஒரு காரியத்தில், எல்லாப் பலன்களையும் காண்பதுவும், தத்துவத்தைச் சாராததும், அல்பமானதுமான ஞானம் தாமஸ மென்று கூறப்படும். (22)

பலத்தில் ஆசையின்றி, விருப்பு வெறுப்பு ஒழித்து புருஷன் தன் கடமை யென்று செய்யும் கர்மம் சாத்வீக மாகும். (23)

குறிப்பு:—3 - வது அத்தியாயம் 8 - ம் சுலோகத்தின் கீழுள்ள குறிப்பைப் பார்க்கவும்.

போகத்தை விரும்பி, 'நான் செய்கிறேன்' என்ற அபிமானத்துடன் அதிக ஆயாசத்துடன் செய்யும் கார்யம் ராஜஸ கர்ம மெனப்படும். (24)

கர்மத்தின் பரிணாமத்தை ஆலோசிக்காமல் அதனாலுண்டாகும் தீங்கு, ஹிம்சை முதலியவற்றை ஆராய்ந்து தனது ஆற்றலேயும் கவனியாது மதிமயக்கத்தால் மனிதன் கர்மம் செய்வானாயின் அக் கர்மம் தாமஸ மென்று கூறப்படும். (25)

எவன் பற்றையும், அகங்காரத்தையும் துறந்தானோ; உறுதியும், உற்சாகமும் உள்ளவனெவனோ; வெற்றியினால் மகிழ்ச்சியும், தோல்வியால் தளர்ச்சியுமடையாதவன் எவனோ அவன் சாத்வீக கர்த்தா வெனப்படுவான். (26)

பற்றுள்ளவன்; கர்ம பலனை இச்சிப்பவன்; பேராசை கொண்டவன்; ஹிம்சை செய்பவன்; மாசுள்ளவன்; இன்பத்தாலும் துன்பத்தாலும் கலக்கப் படுபவன்; இவ்வித புருஷன் ராஜஸ கர்த்தாவாவான். (27)

நடுநிலை யற்றவன்; சீரிய ஒழுக்க மில்லாதவன்; தற்புகழ்ச்சி செய்பவன், போக்கிரி, நீசன், சோம்பேறி, அகமலர்ச்சி இல்லாதவன், வீணாக அதிக தாமதம்

செய்பவன்; இம் மனிதன் தாமஸ கர்த்தா வெனப் படுவான். (28)

தனஞ்ஜய! குணங்களை அனுசரித்து புத்தியும், உறுதியும் தனித் தனியாக மூன்று வகைப்படும். அவைகளை உணர்வாய்! (29)

கார்யத்தில் புகுதல், விட்டு மீளல், செய்யத் தகுந்தது, தகாதது, பயத்தை விளைவிப்பது, பய மில்லாதது, பந்தம், மோக்ஷம் இவற்றை (சரிவர) அறியும் புத்தி சாத்வீகமானது. (30)

பார்த்தா! தர்மா தர்மங்களையும், கார்யா கார்யங்களையும் தெளிவாக்காமல், விவேகத்தைக் குழப்பும் புத்தி ராஜஸமாகும். (31)

பார்த்தா! இருளால் அடர்ந்து, அதர்மத்தை தர்மமாகக் காட்டி எல்லா விஷயங்களையும் தலைகீழாகத் தெரிவிக்கும் புத்தி தாமஸமானது. (32)

பார்த்தா! மனிதன் தன் மனம், உயிர், இந்திரியங்கள் இவைகளின் கிரியைகளைச் சம புத்தியுடன் செய்யும் ஆற்றல் தரும் உறுதி, சாத்வீகமாகும். (33)

அர்ஜுனா! பலனை எதிர்பார்த்து தர்ம, காம, அர்த்த காரியங்களைச் செய்யும் உறுதி ராஜஸமாகும். (34)

பார்த்தா! எந்த உறுதியால் மதி யிழந்த மனிதன் தூக்கம், பயம், துயரம், மனத்தளர்ச்சி, செருக்கு முதலியவைகளை விலக்கக் கூடாதவனாக இருக்கின்றானோ அவ் வுறுதி தாமஸமாகும். (35)

பரதரேறே! இப்பொழுது மூன்று வித சுகங்களை நான் சொல்லக்கேளாய்! எதை யடைந்து மனிதன் அகமகிழ்ச்சியுடன் இருக்கின்றானோ, எதனால் துக்கம் அடியோடு அற்று விடுகின்றதோ, முதலில் விஷத்தைப் போலிருந்து முடிவில் அமிருத மயமாக விருப்பது எதுவோ, தன் புத்தியின் மலர்ச்சியால் உண்டாவது எதுவோ, அந்த சுகம் சாத்வீக மென்று கூறப் படுகின்றது. (36-37)

புலன்கள் விஷயங்களோடு சேரும்பொழுது முதலில் அமிருதத்தைப்போ லிருப்பதும், ஆனால், முடிவில் விஷத்திற்குச் சமமாகப் பரிணமிப்பதுமான சுகம் ராஜஸமென்று உரைக்கப்படுகின்றது. (38)

ஆரம்பமுதல் முடிவுவரையில் ஆத்மாவை மோகத்தில் வீழ்த்துவதும், நித்திரை, சோம்பல், மதிமயக்கம் இவைகளிலிருந்து உண்டாவதுமான சுகம் தாமஸ மென்று சொல்லப்படுகின்றது. (39)

பிரகிருதியினின்று தோன்றிய இம் மூன்று குணங் களைக் கடந்த பொருள் இப் பூமியிலு மில்லை; விண்ணுலகத்திலு மில்லை; தேவர்களுக்குள்ளு மில்லை. (40)

பரந்தப! பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் இவர்களுடைய கர்மங்களும் அவர்களின் இயற்கைக் குணங்களை அனுசரித்து வகுக்கப்பட் டிருக்கின்றன. (41)

சமம், இந்திரிய நிக்கிரகம், தவம், சுத்தம், பொறுமை, நேர்மை, அறிவு, கல்வி, கடவுளிடம் நம்பிக்கை இவைகள் பிராம்மணனுடைய இயற்கைக்குப் பொருந்திய கர்மங்கள். (42)

வீர்யம், ரோஷம், உறுதி, சாமர்த்தியம், போரில் புறங்காட்டாமை, தானம், ஆளல் இவை க்ஷத்திரிய சுபாவத்திற்கேற்ற கர்மங்கள். (43)

வைசியனுடைய சுபாவத்திற்கேற்ற தொழில்களாவன:— விவசாயம், கோரக்ஷணம், வியாபாரம், பிறருக்குச் சேவை செய்வதே சூத்திரனுக்குச் சுபாவமான கர்மம். (44)

மனிதன் தனக்குரிய கர்மத்தில் ஈடுபட்டிருந்து கொண்டே மோக்ஷமடையக் கூடிய வகையைக் கேளாய்! (45)

பிராணிகளின் பிரவிருத்திக்குக் காரணமானதும், எங்கும் நிறைந்ததுமான பரம்பொருளை எம்மனிதன் தன் தன் கர்மத்தின் வாயிலாக வழிபடுகின்றானோ அவன் மோக்ஷ மெய்துவான். (46)

மற்றவர்களுக் குரிய கர்மம் எளிதில் செய்யக் கூடியதாக விருப்பினும், அதற்கு மாறாக விருக்கும் தன் கடமையே உயர்ந்தது. தன் சுபாவத்திற் கேற்ற கர்மத்தைச் செய்யும் மனிதன் தீவினை செய்யான். (47)

குறிப்பு :—ஸ்வதர்மமாவது தன் கடமை. கீதையின் உப தேசத்தின் நடு நாயகமானது கர்மபலத் தியாகம். தன் கடமையை விட்டு அதற்கு உத்தமமான கடமையைத் தேடும்பொழுது பலத்தியாகத்திற்கு இடமில்லை. ஆத லால், ஸ்வதர்மமே சிறந்ததென்று சொல்லப்பட்டது. எல்லா தர்மங்களும் சரியாகப் பரிபாலிக்கப்பட்டா லொழிய பயன் படமாட்டா.

கௌந்தேயா! சுபாவத்தால் கிடைத்த கர்மம் தோஷத்தோடு கூடியிருப்பினும் அதை விடக்கூடாது. அக்கியோடு புகை கூடியிருப்பதுபோல் எல்லாக் கர்மங்களும் தோஷத்தோடு சேர்ந்து இருக்கின்றன. (48)

எவ்விடத்திலும் பற்றில்லா மனமுடையோன், கர்மங்களைத் தியாகம் செய்தவன், தன் மனத்தை வென்றவன், இவ்வித புருஷன் ஸந்யாஸத்தின் வழி யாக நிஷ்காம வடிவமான பரம சித்தி பெறுகிறான். (49)

கௌந்தேயா! சித்தி யடைந்தபின் மனிதன் பிரம் மத்தை அடையும் வழியைச் சுருங்கச் சொல்லுகின் றேன் கேள்! ஞானத்தின் முடிவான எல்லை அது. (50)

மாசற்ற மதியுடைய யோகி உறுதியுடன் தன்னை அடக்கிக்கொண்டு, சப்தம் முதலிய விஷயங்களைத் துறந்து, விருப்பையும் வெறுப்பையும் வென்று, தனி யிடத்தில் இருந்து, அல்ப உணவை அருந்தி, வாக்கு காயம் மனங்களைத் தன் வசப்படுத்தி, நாள் முழுதும் தியானத்திலேயே மூழ்கி, வைராக்கியத்தைக் கைப் பிடித்து, அகங்காரம், பலம், செருக்கு, காமம், குரோ தம், பொருளாசை இவற்றை ஒழித்து, மமதை

யின்றிச் சாந்தநிலை பெற்று பிரம்மத் தன்மை பெறத் தகுந்தவனாகிறான். (51-52-53)

பிரம்மத் தன்மை யடைந்த அக மலர்ச்சியுள்ள மனிதன் துயரப்படான்; எதனையும் விரும்பான்; எல்லா உயிர்களையும் சமமாகப் பாவித்து என்னிடம் அளவற்ற பக்தியைப் பெறுகிறான். (54)

இப்பக்தியின் வழியாக நான் யார், எத்தன்மையன் என்று உள்ளவாறு உணர்ந்து என்னிடம் புகுகின்றான். (55)

என்னைச் சரணமடைந்தவன், என்றும் எல்லாக் கர்மங்களையும் செய்துவந்த போதிலும், எனதருளால் நித்யமான, அழியாத பரமபதத்தை அடைகிறான். (56)

மனதால் கர்மங்களனைத்தையும் என்னிடம் அர்ப்பணம் செய்து, என்னைச் சரண்புகுந்து, பகுத்தறிவை நாடி ஓயாமல் என்னிடம் சித்தத்தை நிறுத்தக் கடவாய்! (57)

என்பால் சித்தத்தை நிறுத்திய பின் மலைபோல் பெரிதான உன் கஷ்டங்களை யெல்லாம் எனதருளால் கடந்து விடுவாய்! இதற்கு மாறாக அகங்காரத்தின் வசப்பட்டு என் சொல்லைக் கேளாயாகில் நாசமடைவாய்! (58)

அகங்காரத்திற்கு ஆட்பட்டு 'நான் போர் புரியேன்' என்று எண்ணுவாயாகில், உனது நிச்சயம் நிலைக்காது. உனது சுபாவம் உன்னைப் பலாத்காரமாக அதனை நோக்கி இழுத்துச் செல்லும். (59)

கௌந்தேயா! உனது சுபாவ கர்மங்களால் கட்டுண்டவனாக இருப்பதால், மோகத்தால் 'செய்வேன்' என்று எண்ணும் காரியத்தை இஷ்டமின்றிச் செய்தே தீருவாய். (60)

அர்ஜுனா! ஈசுவரன் எல்லாப் பிராணிகளின் இருதயத்திலும் குடி யிருந்துகொண்டு தன் மாயா பலத்தால் அவைகளைக் குயவன் சக்கரத்திலேற்றிய சட்டியைப்போல் சுழற்றுகிறான். (61)

பார்த்தா! நீ பூர்ண மனத்துடன் அவனைச் சரண் புகு. அவனருளால் பரம சாந்தி மயமான அமர பதத்தை அடைவாய்! (62)

இவ்விதம் ரகஸ்யங்களுக்குள் பரம ரகஸ்யமான ஞானத்தை உனக்கு உபதேசித் திருக்கின்றேன். இதை யெல்லாம் நன்கு ஆராய்ந்து உன் மனதிற் கினியவாறு செய்வாய். (63)

எல்லாவற்றிலும் பரம ரகஸ்யமான மற்றுமோர் வசனத்தையும் கேள்! நீ எனக்கு மிகவும் அன்பன்; ஆதலால், உனது நன்மையை நாடி உனக்குச் சொல்லுகின்றேன். (64)

மனத்தை என்பால் நாட்டு; என்னிடம் பக்தி செய்; என் பொருட்டு யக்ஞத்தை இயற்று; அப்பொழுது நீ என்னையே சேருவாய். இது எனது வாக்குறுதி எனக்கொள்வாய். நீ எனக் கினியன். (65)

எல்லாத் தர்மங்களையும் துறந்து, என்னை ஒருவனையே சரணமடை. நான் உனது தீவினைகளனைத்தையும் போக்கி உன்னை விடுவிக்கின்றேன். துயரப்படாதே. (66)

தவம் புரியாதவனுக்கும், பக்த னல்லாதவனுக்கும், கேட்க விரும்பாதவனுக்கும், என்னிடம் வெருப்புள்ளவனுக்கும் இந்த ஞானத்தை நீ ஒருபொழுதும் உபதேசிக்கலாகாது. (67)

ஆனல், என்னிடம் பக்தி யுடையவர்களுக்கு இந்த ஞானத்தைக் கொடுப்பவன் என்னிடம் அளவற்ற பக்தனாகி ஐயமின்றி என்னை அடைவான். (68)

மனிதருக்குள் அவனைக் காட்டிலும் சிறந்த அன்பன் எனக்கு வேறொருவரு மில்லை. எக் காலத்திலும் இப்புவியில் அவனைவிட மேலானவன் உண்டாகப் போவது மில்லை. (69)

நமது இந்த தர்ம சம்வாதத்தை அடிக்கடி ஓதுவோன் ஞான யக்ஞத்தின் வாயிலாக என்னை வழிபடுகிறவ னுவான் என்பது எனது கொள்கை. (70)

துவேஷ மில்லாமல் சிரத்தையுடன் இதைக் கேட்பவனும் முக்தி பெற்று நல்வினை செய்தோர் வசிக்கும் புண்ய லோகங்களைச் சேருவான். (71)

குறிப்பு:—இந்த ஞானத்தை அனுபவத்தில் கண்டவனே அதனை மற்றவருக்குக் கொடுக்க முடியு மென்பது இதன் கருத்து. தெளிவான உச்சரிப்பும், அர்த்தமும்

கூடி இதைக் காதால் மட்டும் கேட்பவனைக் குறித்து இவ்விரண்டு சுலோகங்களும் கூறப்படவில்லை.

பார்த்தா! இதைக் கவனத்துடன் கேட்டாயா? தனஞ்ஜய! அஞ்ஞானத்தால் உண்டான உனது மதிமயக்கம் ஒழிந்து விட்டதா? (72)

அர்ஜுனன் கூறுகிறன் :—

அச்சுதா! உன்னருளால் எனது மயக்கம் தெளிந்து விட்டது. உண்மையை உணர்ந்தேன். ஐயம் ஒழிந்து சாந்த நிலை பெற்றேன். உன் சொற்படி செய்வேன். (73)

ஸஞ்ஜயர் கூறுகிறர் :—

இவ்வாறு வாஸுதேவனுக்கும், மகாத்மாவான அர்ஜுனனுக்கும் நிகழ்ந்த அதிக ஆச்சர்யமான — மயிர்கூச்சலெடுக்கக் கூடிய — இந்த சம்வாதத்தை யான் கேட்டேன். (74)

இந்த ரகஸ்யமான பரம யோகத்தை வியாச முனிவரது அருளால் கிருஷ்ணன் எனக்கு நேராகச் சொல்லக் கேட்டேன். அரசனே! கேசவனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த இத்தூய சம்வாதத்தை நினைத்து நினைத்து நான் பன்முறை ஆனந்தமடைகின்றேன். (75-76)

மன்னனே! ஹரியின் அவ்வற்புத வடிவத்தை நினைத்து நினைத்து மிகவும் வியப்படைகின்றேன். மீண்டும் மீண்டும் ஆனந்தமும் அடைகின்றேன். (77)

யோகேசுவரனை கிருஷ்ணனும், வில்லேந்திய பார்த்தனும் எவ்விட மிருக்கின்றனரோ அவ்விடம் செல்வமும், வெற்றியும், பெருமையும், மாறு நீதியும் இருக்கு மென்பது எனது முடிவான அபிப்பிராயம். (78)

குறிப்பு:—யோகேசுவரனை கிருஷ்ணன் என்றதன் கருத்து, அனுபவ சித்தமான சுத்த ஞானம். வில் லேந்திய அர்ஜுனன் என்றதால் அந்த ஞானத்தைப் பின்பற்றிய செய்கை. இவ்விரண்டும் கூடியிருக்கும் இடத்தில் ஸஞ்ஜயர் கூறியவற்றைவிட வேறு பரிணமம் எவ்வாறிருக்க முடியும்?

ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதை யென்னும் உபநிஷத்தில்—
அதாவது பிரம்ம வித்தையுடன் கூடிய யோகசாஸ்தி
ரத்தில்— ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையின் ஸந்யாஸ யோகம்
என்ற பதினெட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

ஓம் சாந்திஃ

---

திருமகள் விலாச அச்சு நிலையம், சென்னை:—
P. I. Card M. S. No. 167, Copies - 1000. [28—1—1946.]

# ராஜீய நூல்கள்

ரூ. அ.

**இல்லற மகா ரகசியம்** — 0 12

உலகானுபவம் மிகவும் வாய்ந்தவரான வில்லியம் தர்ஸ்டன் என்ற அமெரிக்கர் எழுதியது. மகாத்மா காந்தி யடிகள் எழுதிய மதிப்புரையுடன் கூடியது.

**சத்திய சமாஜம்** — 0 8

'இந்தியன் எக்ஸ் பிரஸ்' ஆசிரியர் க. சந்தானம் எழுதியது. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம், குடும்பம், சமூக லக்ஷ்யங்கள் இவைகளைப்பற்றி மிக்க அழகாக எழுதப்பட்டிருக்கிறது.

**ராஷ்டிரபதி மௌலானா** — 0 4

இந்நூலில் நமது நெருக்கடிக்கேற்றத் தலைவரான அபுல் கலாம் ஆசாத்தின் வாழ்க்கையை, தேசபக்தர் ஆரணி - எஸ். ஸ்ரீநிவாஸ ராவ் அவர்கள் சித்தரித்திருக்கிறார்.

**அபேதவாதம்** — 0 6

தமிழ் நாட்டுத் தலைவர் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் எழுதியது.

**ஜவஹர்லால் நேரு சுய சரித்திரம்** — 5 0

ஜவஹர்லால் தம் சுய சரிதத்தை இதில் சொல்லி யிருக்கிறார். அவருடைய வாழ்க்கை வரலாறு மட்டுமல்ல. இந்த நூல் இந்நாட்டின் வருங்கால ராஜீய பொருளாதார வாழ்விற்கு ஒரு ஆதார சாஸ்திரமாகவும் விளங்குகின்றது.

---

# ராஜீய நூல்கள்

ரூ. அ.

**காங்கிரஸ் மகாசபை சரித்திரம் . 3 8**

[ அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டியாரின் அத்தாட்சி பெற்றது. ]

காங்கிரஸ் பொன் விழாவின்போது டாக்டர் பட்டாபி சீதாராமய்யா எழுதியதின் தமிழ் மொழி பெயர்ப்பு. பாபு ராஜேந்திர பிரசாத் அவர்கள் எழுதிய முகவுரையுடனும் தலைவர்கள் ஆப்டோன் படங்களுடனும் கூடியது. 575 - பக்கங்கள் உள்ளது.

**பர்டோலிக் கதை 1 8**

காந்தியடிகளின் காரியதரிசியான மகாதேவ தேசாய் எழுதியது. வ. ராமஸ்வாமி அய்யங்கார் மொழி பெயர்த்தது. வல்லபாய் படேல் தலைமையில் பர்டோலி வாசிகள் வரிகொடா இயக்கம் நடத்தி வெற்றி பெற்ற வரலாறு.

**மகாத்மாவுக்கடுத்த தலைவர் 0 4**

இதில் மகாத்மா காந்திஜிக்கு அடுத்தபடியாக அவரது ஸ்தானத்தில் இருக்கக்கூடியவர் பண்டித ஜவஹரே என்பதை, தேசபக்தர் ஆரணி - எஸ். ஸ்ரீநிவாஸ ராவ் அவர்களால் நிர்த்தாரணம் செய்தெழுதியது.

**மகாத்மா காந்தி 1 4**

பிரஞ்சு தேசத்து பரம ஞானியும் பேரறிவு படைத்தவரும் சத்திய சந்தரும் நல்ல படிப்பாளியுமான ரோமன் ரோலண்டு எழுதிய காந்தி ஜீவிய சரித்திரம்.

# மகாத்மா காந்தி எழுதிய நூல்கள்

| | | |
|---|---|---|
| சத்திய சோதனை (முதற் பாகம்) | 3 | 0 |
| சத்திய சோதனை (இரண்டாம் பாகம்) | 4 | 0 |

மகாத்மா காந்தி தம் சுய சரிதத்தை இதில் சொல்லியிருக்கிறார்.

| | | |
|---|---|---|
| அநாஸக்தி யோகம் | 1 | 4 |

பகவத் கீதைக்கு மகாத்மா எழுதிய மொழி பெயர்ப்பும், குறிப்புகளும்.

| | | |
|---|---|---|
| இல்லறமும் பிரும்ம சரியமும் | 1 | 0 |

கர்ப்பத்தடை முறைகளைக் கண்டித்து, இந்திரிய நிக்ரகத்தை விளக்கி, மகாத்மாஜீ எழுதி யிருக்கும் உயர்ந்த கட்டுரைகள் அடங்கியது.

| | | |
|---|---|---|
| ஆரோக்கிய வழி | 1 | 4 |

சாமான்யமாக ஒவ்வொருவரும் தேகாரோக்கியச் சம்பந்தமாகக் கட்டாயம் தெரிந்து கொள்ளவேண்டிய பல அரிய விஷயங்களை இதில் காந்திஜீ விஸ்தரிக்கிறார்.

| | | |
|---|---|---|
| மகா தியாகம் (அச்சில்) | 0 | 10 |

"தாழ்த்தப்பட்ட வகுப்பினராகக் கருதப்பட்டு ஹரிஜனங்களாகிய வாயில்லா ஜீவன்கள் வாழவேண்டியதற்காக என் உயிரைத் தியாகம் செய்ய, முகமலர்ச்சியோடு சாக நான் தயாராயிருக்கிறேன். சாகும் வரையில் பட்டினி கிடப்பேன்" என்று மகாத்மா காந்தி யடிகள் 1932-ம் ௵ செப்டம்பர் ௴ 13௳ விரதம் பூண்ட உபவாஸ சரித்திரம்.

| | | |
|---|---|---|
| உத்தம வாழ்க்கை | 0 | 8 |

காந்தி யடிகள் எரவாடாச் சிறையினின்று சபர்மதி ஆசிரம வாசிகளுக்குச் செய்த பல அரிய உபதேசங்கள் அடங்கியது.

| | | |
|---|---|---|
| ஹிந்து தர்மம் | 0 | 8 |

ஹிந்து சமயத்தின் பற்பல அரிய தத்துவங்களை இலகுவாக எவருக்கும் மனதில் பதியத்தக்க விதமாக மகாத்மா எழுதியுள்ள வியாசங்கள் அடங்கியிருக்கின்றது.

கிடைக்குமிடம்:— B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

நெ. 41, வெங்கடாராமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.